# தேவகோட்டை வட்டாரச் சிறுதெய்வ வழிபாடு

**அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு**


**ஆய்வாளர்**

**மு.ஜெயமணி**

**(பதிவு எண் : 0850)**

**நெறியாளர்**

**முனைவர் மு.சு.கண்மணி**

**தமிழ் உயராய்வு மையம்**

**ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி, தேவகோட்டை.**






# அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தரமதிப்பீட்டுக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் CGPA:3.64 தரப்புள்ளிகளுடன் A+தகுதி மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் – பல்கலைக்கழக மானியக் குழுவின் முதல்தர பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

**காரைக்குடி - 630 003**

**தமிழ்நாடு - இந்தியா**

**ஜூலை - 2021**

# தேவகோட்டை வட்டாரச் சிறுதெய்வ வழிபாடு

**அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு**


**ஆய்வாளர்**

**மு.ஜெயமணி**

**(பதிவு எண் : 0850)**

**நெறியாளர்**

**முனைவர் மு.சு.கண்மணி**

**தமிழ் உயராய்வு மையம்**

**ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி, தேவகோட்டை.**






## அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தரமதிப்பீட்டுக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் CGPA:3.64 தரப்புள்ளிகளுடன் A+தகுதி மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் – பல்கலைக்கழக மானியக் குழுவின் முதல்தர பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

**காரைக்குடி - 630 003**

**தமிழ்நாடு - இந்தியா**

**ஜூலை - 2021**

முனைவர் **மு.சு.கண்மணி,**எம்.ஏ.,எம்.ஃ.பில்.,பிஎச்.டி.,
உதவிப்பேராசிரியர்,
தமிழ் உயராய்வு மையம்,
ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி,
தேவகோட்டை - 630 302.

நாள்:

# நெறியாளர் சான்றிதழ்

**"தேவகோட்டை வட்டாரச் சிறுதெய்வ வழிபாடு"** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு அழகப்பா பல்கலைக்கழகத்திற்கு உட்பட்ட ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி தமிழ் உயராய்வு மையத்தில் பகுதிநேர முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்தின் ஒரு பகுதியாக மு.ஜெயமணி தன் ஆய்வுக் காலத்தில் ஆய்வு நிகழ்த்தி வழங்கியதாகும். இவ்வாய்வேடு இதற்குமுன் வேறு எந்தப் பட்டத்திற்கும் சமர்ப்பிக்கப்படவில்லை எனவும், இவ்வாய்வேடு அவர் தம் சொந்த முயற்சியில் உருவானது எனவும் சான்றளிக்கிறேன்.

**தமிழ்த்துறைத்தலைவர்**

**(முனைவர் மு.சு.கண்மணி)**
**நெறியாளர்**

**முதல்வர்**

**மு.ஜெயமணி,**
பகுதிநேர முனைவர்பட்ட ஆய்வாளர் (தமிழ்),
பதிவு எண்.0850,
தமிழ் உயராய்வு மையம்,
ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி,
தேவகோட்டை - 630 302.

நாள்:

# ஆய்வாளர் உறுதிமொழி

**"தேவகோட்டை வட்டாரச் சிறுதெய்வ வழிபாடு"** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு அழகப்பா பல்கலைக்கழகத்திற்கு உட்பட்ட ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி தமிழ் உயராய்வு மையத்தில் பகுதிநேர முனைவர் பட்டத்தின் ஒரு பகுதியாக அளிக்கப்பெறும் இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியில் உருவானதாகும். இவ்வாய்வேடு இதற்குமுன் வேறு எந்தப் பட்டத்திற்கும் சமர்ப்பிக்கப்படவில்லை என உறுதியளிக்கிறேன்.

**(மு.ஜெயமணி)**
**ஆய்வாளர்**

உறுதிக் கையொப்பம்

முனைவர் மு.சு.கண்மணி,எம்.ஏ.,எம்.ஃ.பில்.,பிஎச்.டி.,
உதவிப்பேராசிரியர்,
தமிழ் உயராய்வு மையம்,
ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி,
தேவகோட்டை - 630 302.

# நன்றியுரை

**“தேவகோட்டை வட்டாரச் சிறுதெய்வ வழிபாடு”** என்னும் தலைப்பில் முனைவர்பட்ட ஆய்வினை மேற்கொள்ள ஆய்வு மாணவியாக அனுமதித்து இவ்வாய்வினை மேற்கொள்ள வாய்ப்பளித்த ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரிக்கும், அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும் என் முதற்கண் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்வுப் பயணம் சீரோடும் சிறப்போடும் அமைவதற்குத் தேவையான கருத்துக்களையும், விளக்கங்களையும் அளித்து எனக்கு ஊக்கமும், உற்சாகமும் கொடுத்து இவ்வாய்வு செம்மையுற நல்வழிகாட்டிய எனது அன்பிற்குரிய நெறியாளர் ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரியின் தமிழ் உயராய்வு மையத்தின் உதவிப் பேராசிரியர் முனைவர் **மு.சு.கண்மணி** அவர்களுக்கு என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

அழகப்பா பல்கலைக்கழக தமிழ்த்துறைத்தலைவர் முனைவர்.**சு.ராஜாராம்** அவர்களுக்கும், ஆய்வுகள் குறித்த கருத்துக்களை நான் கேட்கும் பொழுதெல்லாம் பல்வேறு பணி நெருக்கடிகளிலும் சிறுதெய்வ வழிபாடு குறித்த பல்வேறு கருத்துக்களையும் தகவல்களையும் வழங்கி துணைநின்ற மேனாள் தமிழ்த்துறைத்தலைவர் முனைவர் **மு.பாண்டி** அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுத் தொடர்பாக அவ்வப்பொழுது என்னிடம் கேட்டறிந்து ஊக்கப்படுத்திய காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரியின் ஆட்சிக்குழுத் தலைவர் **பெரி.பெரியகருப்பன்,** ஆட்சிக்குழுச் செயலர் **பெரி.வீரப்பன்,** மற்றும் ஆய்வு தொடர்பாக பல்வேறு உதவிகள் செய்திட்ட கல்லூரி முதல்வர் முனைவர். **சே.கணேசன்** மற்றும் **நூலகர்** ஆகியோருக்கும் என் நன்றிகள் பல.

ஸ்ரீ சேவுகன் அண்ணாமலைக்கல்லூரி முதல்வர் அவர்களுக்கும் தமிழ்த்துறை தலைவர் மற்றும் பேராசிரியர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

எனது ஆய்வுப் பயணத்திற்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்த எனது பெற்றோர் சி.முத்து - மு.வேலாயி அவர்களுக்கும், ஆய்விற்கு தேவையான பொருளுதவி மற்றும் ஊக்கமும் உற்சாகமும் கொடுத்த எனது சகோதர, சகோதரிகளுக்கு இத்தருணத்தில் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

எனது ஆய்விற்கு தேவையான நூல்களைத் திரட்டிக் கொடுத்து, களஆய்விற்கு என்னை உடன் அழைத்துச் சென்று எப்பொழுதும் என் நிழலாகத் தொடரும் என் கணவர் வே.சண்முகம் அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்குத் தேவையான நூல்கள் கொடுத்து உதவிய அழகப்பா பல்கலைக்கழக மைய நூலகத்தின் பணியாளர்களுக்கும், தேவகோட்டை அரசு கிளை நூலகப் பணியாளர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த ஆய்வினைச் சீரிய முறையில் கணினியில் அச்சாக்கம் செய்தளித்த திருமதி.சாந்தி பாண்டியன் அவர்களுக்கும், கட்டமைப்புச் செய்தளித்த பூச்சரம் கணினி மையத்திற்கும் என் நன்றிகள் பல.

**ஆய்வாளர்**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| சுருக்கம் | | விளக்கம் |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| இ.ஆ | - | இளநிலை ஆய்வேடு |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| கட் | - | கட்டுரையாளர் |
| குறள் | - | திருக்குறள் |
| குறுந். | - | குறுந்தொகை |
| தகவல் | - | தகவல் அளித்தவர் |
| திரு.முருகு. | - | திருமுருகாற்றுப்படை |
| தொ.ஆ. | - | தொகுப்பாசிரியர் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நற். | - | நற்றிணை |
| நன் | - | நன்னூல் |
| நா.தி.பி. | - | நாலாயிரத் திவ்ய பிரபந்தம் |
| நூ. | - | நூற்பா |
| நெ.ந.வா | - | நெடுநல்வாடை |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பட்.பா. | - | பட்டினப்பாலை |
| பா.எண். | - | பாடல் எண் |
| புறம். | - | புறநானூறு |
| மு.ஆ | - | முதுகலை ஆய்வேடு |
| மு.ப.ஆ | - | முனைவர் பட்ட ஆய்வேடு |
| மேலது. | - | மேலே கூறப்பட்ட நூல் |
| P. | - | Page |
| Pp. | - | Pages |
| Vol. | - | Volume |

# பொருளடக்கம்

# முன்னுரை

மனித இனம் தோன்றிய காலம் முதற்கொண்டு நாட்டுப்புற வழக்காறுகளாகிய பழக்கவழக்கம், பண்பாடு, சடங்கு முறைகள், வழிபாடு ஆகியன மனித சமூகத்தால் பாதுகாக்கப்பட்டு இன்றளவும் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன. இதன்மூலம் ஒரு இனத்தின் வாழ்வியல் முறைகளை அறிந்து கொள்ளலாம். பண்டைய நம்பிக்கை, பழக்கவழக்கங்கள் பற்றிய அறிவியலே நாட்டுப்புறவியல் என ஸரி.்.பன் பியூக்கில் கூறுகிறார். மரபு வழியாக வழங்கப்படும் வழக்காறுகள் ஒரு தலைமுறையிடமிருந்து மற்றொரு தலைமுறைக்கு பரவுவதைப் பற்றி ஆராய்வது நாட்டுப்புறவியல் என ஆக்சர் டெய்லர் எடுத்துரைக்கிறார். தலைமுறை தலைமுறையாக பண்பாட்டு வழக்கங்களைப் பதிவு செய்யும் நாட்டுப்புறவியல்; மானிடவியல், சமூகவியல், உளவியல், தத்துவவியல், மொழியியல், வரலாறு முதலிய பலதுறைகளோடும் பின்னிப்பிணைந்து இன்று தனித்துறையாக ஆய்வுக்களத்தை விரிவுப்படுத்தி உள்ளது. எனவேதான் நாட்டுப்புற மக்களின் வழக்காறுகளை ஆராய்பவன் சமூக விஞ்ஞானி (Social Scientist) என்கிறார் சு.சக்திவேல்.

மக்களால் தொன்றுதொட்டு வழிபட்டு வரும் முறையை நாட்டுப்புற வழிபாடு என்றும், அக்கடவுள்களை நாட்டுப்புறத் தெய்வங்கள் என்றும் கட்டமைத்துள்ளனர். இத்தெய்வங்கள் சிறுதெய்வங்கள் என அழைக்கப்படுகின்றன. வைதீக மரபும், ஆகம விதிகளும் இக்கோயில்களில் பின்பற்றப்படுவதில்லை. வடமொழி மந்திரமும், வேதங்களும் ஓதப்படுவதில்லை. இத்தெய்வங்களை வணங்குவதன் மூலம் வளமான வாழ்க்கையை அமைத்துக் கொள்ளலாம் எனும் நம்பிக்கை மக்களிடம் பரவிக்கிடக்கிறது. சங்ககாலம் தொடங்கி இன்று வரைக்கும் சிறுதெய்வ வழிபாடு இருந்து வருகிறது.

இயற்கையோடு வாழ்ந்த மனிதன் ஒரு கட்டத்தில் இயற்கையைப் பார்த்து அச்சமுற்றான். அவ்வச்சத்தின் காரணமாக நீர், நிலம், நெருப்பு, மரம் ஆகியவற்றினை வணங்கத் தொடங்கினான். இதன் வளர்ச்சி நிலையே இன்றைய சிறுதெய்வ வழிபாட்டு மரமாகும். இயற்கை மற்றும் மரணத்திற்குப் பின்னாலான நிலையிடமும் மனிதன் கொண்ட அச்சமே வழிபாட்டிற்கு அடிப்படைக்காரணம் எனும் சிக்மண்ட் பிராய்டு கருத்தையும் ஈண்டு நாம் நோக்கத்தகும்.

இவ்வழிபாட்டுக் குறிப்புகள் சங்க இலக்கியங்களில் காணப்படினும், சிலப்பதிகாரத்தில் இயற்கை வழிப்பாட்டினை கடவுள் வாழ்த்தாக பாடியிருப்பதை நாம் கவனத்தில் கொள்ளவேண்டும்.

நாட்டார் வழிபாடு குறித்து பல்வேறு இலக்கியங்களில் அதன் குறிப்புகள் காணப்படினும் சிறுதெய்வம் என்ற சொல் முதன்முதலில் ஏழாம் நூற்றாண்டில் அப்பர் தேவாரத்தில் கண்டறிய முடிகிறது. இதனை ‘‘சென்று நாம் சிறு தெய்வம் சேரோம் அல்லோம்’’ என்ற வரிகளின் மூலம் அறியலாம். இதன்மூலம் சமூகத்தின் அடித்தட்டில் வைக்கப்பட்டிருக்கும் மக்கள் வணங்கும் தெய்வமே சிறுதெய்வம் என அறிந்து கொள்ள முடிகிறது.

இவ்வாறாக கட்டமைக்கப்பட்ட சிறுதெய்வம் பல்வேறு படிநிலைகளைத் தாண்டி இன்று உருவ வழிபாடாக மாற்றம் பெற்றுள்ளது. அவ்வாறு மாற்றம் பெற்ற தேவகோட்டை வட்டாரச் சிறுதெய்வக்கோயில்களும், மாற்றம் பெறாமல் பண்டைய நெறிகளைக் கடைபிடிக்கும் கோயில்களும் இங்கு ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன.

**ஆய்வுப்பொருள்**

**‘‘தேவகோட்டை வட்டாரச் சிறுதெய்வ வழிபாடு’’** என்பது இவ்வாய்வின் மையப்பொருளாகும்.

**ஆய்வின் நோக்கம்**

நாட்டுப்புற சிறுதெய்வ வழிபாட்டில் பின்பற்றப்பட்டு வரும் மரபுவழி பண்பாட்டுக்கூறுகள் பல கோயில்களில் மரபு மாறுதல்களுக்கு உட்பட்டும் இருக்கின்றன. அடிப்படையில் நாட்டுப்புறத் தெய்வ வழிபாடு என்பது வைதீக ஆகம விதிகளுக்கும், பூசைகளுக்கும் உட்பட்டதாக உள்ளது.

இன்று சமயங்களின் ஆதிக்கமும், ஆரிய வழிபாட்டுக் கோட்பாடுகளும் பரவலாக உட்புகுத்தப்பட்டுள்ளன. நாட்டுப்புறத் தெய்வங்கள் அனைத்தும் சமயத் தெய்வங்களின் பிறப்பு, இறப்பு, உறவுமுறைகளோடு தொடர்படுத்தி புராணக்கதைகள் என்ற பெயரில் இணைக்கப்பட்டுள்ளன.

நாட்டுப்புறத் தெய்வமான மாரியம்மனை புராணக்கதைகள் பார்வதி என்று கூறுகின்றன. நாட்டார் தெய்வமான ஐயனார், மோகினி அவதாரம் எடுத்த திருமாலுக்குப் பிறந்தவர் என்று கூறுகிறது. இதுபோன்ற ஆரிய சமய ஆதிக்க கருத்தாக்கங்களை ஆராய்ந்து நாட்டார் தெய்வங்களின் உண்மை வரலாற்றுக் கதைகளை பதிவு செய்ய இவ்வாய்வு முயற்சிக்கிறது.

ஒவ்வொரு கோயிலிலும் சாதிகளின் ஆதிக்கம் உள்ளதால் சாதியச் சண்டைகளும், பிரிவினைகளும் காணப்படுகின்றன. இவைபோன்ற சாதி, சமய ஆதிக்கங்கள், மரபுவழி வழிபாடுகள், மரபு மாறிய கருத்தாக்கங்கள் ஆகியவற்றினை ஆய்வு செய்து முடிவுகளைக் காண்பது இவ்வாய்வின் நோக்கமாக அமைகிறது.

**கருதுகோள்**

மனித இனம் தோன்றிய காலம் முதற்கொண்டு வழிபாடும் தோன்றியிருக்க வேண்டும். அச்சத்தின் அடிப்படையில் தோன்றிய வழிபாடு ஆரம்பத்தில் உருவமற்ற வழிபாடாகவும், பிற்காலத்தில் உருவ வழிபாடாகவும் மாற்றம் பெற்றிருக்கிறது. வட்டாரத்திற்கு வட்டாரம் நாட்டார் வழிபாட்டில்

வேறுபாடுகள் காணப்படினும் தேவகோட்டை வட்டாரத்திற்கென்று வழிபாட்டுத் தனித்தன்மைகள் இருக்கின்றது. நாட்டார் வழிபாடு, மண்ணின் பண்பாட்டுச் சுவடுகளையும், வாழ்வில் ஏற்பட்ட மாற்றங்களையும் வெளிக்காட்டும். புலம்பெயர் மக்களால் வழிபாட்டு நிலைகளில் மாற்றம் ஏற்பட்டிருக்கும். சமயங்களின் தாக்கத்தினால் வெகுசனத் தெய்வங்களாக மாற்றம் பெற்றிருக்கும் தன்மை.

பொருளாதாரத்தில் ஏற்பட்ட மாற்றம், காலத்தினால் ஏற்பட்டிருக்கும் மாற்றம், அறிவியல் வளர்ச்சியினால் ஏற்பட்டிருக்கும் மாற்றம், வழிபாட்டு முறைகளிலும், கட்டிட அமைப்புகளிலும் பூசை முறைகளிலும் ஏற்பட்டிருக்கும் மாற்றம் இவைகளை ஆராய்வதே இவ்வாய்வின் கருதுகோளாக அமைகின்றது.

**ஆய்வு எல்லை**

சிவகங்கை மாவட்டத்தில் உள்ள **தேவகோட்டை வட்டாரம்** இவ்வாய்வு எல்லையாக வரையறை செய்யப்பட்டுள்ளது. இவ்வட்டாரத்தில் உள்ள 36 நாட்டார் தெய்வங்கள் ஆய்விற்கு உட்படுத்தப்பட்டுள்ளன. இதில் 22 பெண் தெய்வக் கோயில்களும் 14 ஆண் தெய்வக்கோயில்களும் ஆகும்.

**ஆய்வு மூலங்கள்**

தேவகோட்டை வட்டாரத்தில் தெரிவு செய்யப்பட்ட 36 கோயில்களில் நேரடியாகச் சென்று சேகரித்த கள ஆய்வுத்தரவுகள், நேர்காணல்கள் ஆகியவை முதன்மைச் சான்றாதாரங்களாக விளங்குகின்றன.

**துணைமை ஆதாரங்கள்**

நாட்டுப்புற வழிபாடு தொடர்பான நூல்கள் ஆய்வேடுகள், கட்டுரைகள், இணையத்தளச்செய்திகள் ஆகியவை துணைமைச்சான்றுகளாக கருதப்படுகின்றன.

**முன்னாய்வுகள்**

நாட்டுப்புற வழிபாடுகள் குறித்து பல்வேறு ஆய்வுகளும், நூல்களும் வெளிவந்துள்ளன. அவற்றின் முக்கிய நூல்களாக சு.சக்திவேல் எழுதிய

‘‘நாட்டுப்புறவியல்’’, இரா.சீனிவாசனின் ‘‘சக்தி வழிபாடு’’, துளசி இராமசாமியின் ‘‘நெல்லை மாவட்ட சிறுதெய்வ வழிபாடு’’, க.கிருஷ்ணசாமியின் ‘‘நாட்டுப்புற இலக்கியம்’’, க.கைலாசபதியின் ‘‘பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்’’ போன்ற நூல்கள் முக்கிய ஆய்வியல் நூல்களாக கருதப்படுகின்றன.

முனைவர் பட்ட ஆய்வேடுகளான சின்னப்பாவின் ‘‘திருமங்கலம் வட்டாரச் சிறுதெய்வங்கள்’’ (1982), கணபதி ராமனின் திருநெல்வேலி மாவட்டச் சிறுதெய்வவழிபாடு (1983), இரா.அழகர்சாமியின் திண்டுக்கல் வட்டாரச் சிறுதெய்வ வழிபாடு (1991) என்னும் சிறுதெய்வ வழிபாட்டு ஆய்வுகள் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் வாயிலாக ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

கோ.தங்கச்செல்வியின் நாட்டுப்புறப் பெண் தெய்வங்கள் (2006) மதுரை மாவட்டம், மு.கலியாணிக்குமாரின் தூத்துக்குடி மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள் (1999) தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகத்திலும், குரு.சண்முகாம்பாளின் திருவில்லிபுத்தூர் நாட்டுப்புறத் தெய்வங்கள் (2011) அழகப்பா பல்கலைக்கழகத்திலும் ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

தேவகோட்டை வட்டாரத்தைச் சேர்ந்த ‘‘இளங்குடி அருள்மிகு வேலாயுதஜயனார் காளியம்மன் திருக்கோயில்’’ எனும் தலைப்பில் ச.இளங்கோவால் அழகப்பா பல்கலைக்கழகத்தில் முதுகலைப்பட்ட ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளன.

**ஆய்வு அணுகுமுறை**

தேவகோட்டை வட்டாரச் சிறுதெய்வ வழிபாடு என்னும் தலைப்பிலான இவ்வாய்வில் வழிபாடு சார்ந்தும், மக்களின் வாழ்வியல் குறித்தும் விளக்கிச் செல்லும் நிலையில் விளக்கமுறை அணுகுமுறையும் (Descriptive approach), தெய்வங்களின் தோற்றக்கதை குறித்த வரலாற்றினை பதிவு செய்யுமிடத்து

வரலாற்றியல் அணுகுமுறையும் (Historical Approach), சமூக மற்றும் பண்பாட்டினை குறித்துச் செல்லும் பொழுது சமூகவியல் அணுகுமுறைகளையும் (Social Approach), நம்பிக்கைகள் மற்றும் நேர்த்திக்கடன் குறித்து மக்களின் மனநிலையை அறியுமிடத்து உளவியில் அணுகுமுறையும் (Psychology approach), தலவரலாறு கோயில் அமைப்பு, வழிபாடு, விழாக்கள், நம்பிக்கைகள், நேர்த்திக்கடன்கள், ஆகியவற்றினை மதிப்பீடு செய்யும் வகையில் மதிப்பீட்டு அணுகுமுறையும் (Evolution approach), கடந்த கால வழிபாட்டு முறைகளையும், கட்டிட அமைப்புகளையும் தற்கால நிகழ்வுகளுடன் ஒப்பீடு செய்யும் நோக்கில் ஒப்பிட்டுத் திறனாய்வு அணுகுமுறையும் (Comparative approach) இவ்வாய்வில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**ஆய்வின் பயன்**

தலைமுறை கடந்த இடைவெளியில் பல்வேறு பண்பாட்டுச் சுவடுகள் அழிந்துபோய்விட்டன. அறிவியல் மாற்றத்தால் நாகரீகம் கருதி பல்வேறு வழிபாட்டு நிகழ்வுகள் மரபு மாற்றம் பெற்றுள்ள இதனை பதிவு செய்ய வேண்டியது இவ்வாய்வின் பயனாகக் கருதமுடிகிறது. மேலும் நாட்டார் தெய்வங்களின் தோற்றக்கதைகள் பல்வேறு திரிபுகளை உள்ளடக்கி யிருக்கின்றது. இதன் உண்மைத் தன்மையை அறிவதும், தேவகோட்டை வட்டார வழிபாடு மற்றும் வரலாற்றினை அடுத்த தலைமுறைக்கு ஆவணப்படுத்தி பதிவு செய்வதையும் இவ்வாய்வு முயற்சி செய்கிறது.

**ஆய்வேட்டின் அமைப்பு**

தேவகோட்டை வட்டார நாட்டுப்புற வழிபாடு எனும் இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன. இவைமுறையே,

1. தேவகோட்டை வட்டாரம் ஓர் அறிமுகம்.
2. தலவரலாறும் கோயிலமைப்பும்.
3. வழிபாடும் விழாக்களும்.
4. நம்பிக்கைகளும் நேர்த்திக்கடன்களும்
5. மரபும் மரபு மாற்றமும்.

ஆய்வு முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வேட்டின் நோக்கம், கருதுகோள், ஆய்வு எல்லை, ஆய்வு மூலங்கள், துணைமை ஆதாரங்கள், முன்னாய்வுகள், ஆய்வின் தனித்தன்மை, ஆய்வு அணுகுமுறை, ஆய்வின்பயன், ஆய்வேட்டின் அமைப்பு ஆகியவை விளக்கப்பட்டுள்ளன.

**1. தேவகோட்டை வட்டாரம் ஓர் அறிமுகம்**

முதல் இயலான **''தேவகோட்டை வட்டாரம் ஓர் அறிமுகம்''** எனும் இயலில் தேவகோட்டையின் வரலாறு மற்றும் பெயர்க்காரணம், விடுதலைப் போரட்டக்காலத்தில் தேவகோட்டை நகர மக்களின் பங்களிப்பு, தேவகோட்டை வட்டார நாட்டார் தெய்வங்களுக்கு செய்த அறப்பணி மற்றும் அரசியல் பணி, பத்திரிகைப்பணி ஆகியனவையும் தேவகோட்டை வட்டார கல்விநிலையங்களும் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

**2. தலவரலாறும் கோயிலமைப்பும்**

இரண்டாம் இயலான **''தலவரலாறும் கோயிலமைப்பும்''** எனும் இயலில் ஆய்விற்கு உட்படுத்தப்பட்ட கோயில்களின் தலவரலாற்றுக் கதைகள் கள ஆய்வில் நேரடியாக கேட்டறியப்பட்டு பதிவு செய்யப்பட்டுள்ளன. கோயிலின் கட்டிட அமைப்பு முறைகள், பரிவாரத் தெய்வங்கள் மற்றும் கோயிலின் அமைவிடம் ஆகியவை இவ்வியலில் இடம்பெற்றுள்ளன.

### 3. வழிபாடும் விழாக்களும்

மூன்றாம் இயலான **“வழிபாடும் விழாக்களும்”** எனும் இவ்வியலில் வழிபாட்டின் வகைகள், வழிபாட்டிற்குரிய மாதங்கள், வழிபடு பொருட்கள், திருவிழாக்கள், சடங்குகள் ஆகியவை பதிவுசெய்யப்பட்டுள்ளன.

### 4. நம்பிக்கைகளும் நேர்த்திக்கடன்களும்

நான்காம் இயலான **“நம்பிக்கைகளும் நேர்த்திக்கடன்களும்”** எனும் இவ்வியலில் தேவகோட்டை வட்டார மக்களின் வழிபாடு சார்ந்த நம்பிக்கைகள், அவற்றின் தனித்தன்மை, நேர்த்திக்கடன் செலுத்தும் முறைகள், அவற்றிற்கான காரணங்கள் உளவியல் ரீதியாக ஆய்வு செய்யப்பட்டு விளக்கப்பட்டுள்ளன.

### 5. மரபும் மரபு மாற்றமும்

ஐந்தாம் இயலான **“மரபும் மரபு மாற்றமும்”** எனும் இவ்இயலில் கடந்த கால வழிபாட்டு முறைகளையும், கட்டிட அமைப்புகளையும் தற்கால நிகழ்வுகளுடன் ஒப்பிட்டு மரபுவழிச் செய்திகளையும், மரபு மாறிய நிகழ்வுகளையும் இவ்வியல் விளக்குவதாக அமைகின்றது.

## நிறைவுரை

ஆய்வில் கண்டறியப்பட்ட கருத்துக்கள் நிறைவுரைப் பகுதியில் தொகுத்தளிக்கப்படுகின்றன.

## சான்றெண் அளிப்புமுறை

ஆய்விற்குச் சான்றாதாரமாக விளங்கும் இலக்கியப் பாடல் வரிகளின் நூல் பெயர் மற்றும் பாடல் எண் ஆகியவை ஒவ்வொரு பாடலுக்குக் கீழும் அடைப்புக்குறிக்குள் கொடுக்கப்பட்டுள்ளன. விரிவான சான்றெண் அளிக்க வேண்டிய சூழலில் எண்ணிட்டு இயல் இறுதியில் கருத்து எடுத்தாளப்பெற்ற

நூலின் பெயர், நூலாசிரியர் பெயர் வெளிவந்த ஆண்டு, கருத்து இடம்பெற்ற பக்கம் ஆகியவை அளிக்கப்பெறுகின்றன.

## துணைநூற்பட்டியல் அமைப்பு:

ஆய்விற்கு தொடர்புடைய கருத்துக்கள் எடுத்தாளப்பெற்ற நூல்களின் ஆசிரியர் பெயர், பதிப்பு விபரம், வெளிவந்த ஆண்டு ஆகியவை முழுமுகவரியுடன் அளிக்கப்பெறுகின்றன.

ஆய்விற்கு தொடர்புடைய முதுகலை, இளநிலை, முனைவர் பட்ட ஆய்வேடுகளின் ஆய்வுத் தலைப்பு, ஆய்வாளர் பெயர், ஆய்வு செய்யப்பட்ட பல்கலைக்கழகத்தின் பெயர், ஆண்டு ஆகியவை முழுமுகவரியுடன் அளிக்கப்பெறுகின்றன.

## பின்னிணைப்பு

ஆய்விற்கு உட்படுத்தப்பட்ட கோயில்களின் புகைப்படங்கள், தேவகோட்டைவட்டார வரைபடம், நேர்த்திக்கடன் செலுத்திய புகைப்படங்கள், கல்வெட்டுச் செய்திகள், கோயில் தொடர்பான தகவல் அளித்த தகவலாளியின் பெயர், வயது, தொழில் ஆகியவை பட்டியலிடப்பட்டு இணைக்கப்பட்டுள்ளன.

இயல்-1

# தேவகோட்டை வட்டாரம் ஓர் அறிமுகம்

## இயல்-1

# தேவகோட்டை வட்டாரம் ஓர் அறிமுகம்

தமிழகத்தின் தென்பகுதியில் திருச்சி - இராமேஸ்வரம் செல்லும் தேசியநெடுஞ்சாலையில் தேவகோட்டை அமைந்துள்ளது. ஒருங்கிணைந்த இராமநாதபுரம் மாவட்டமாக இருந்தபொழுது தேவகோட்டை நகரம் திருவாடானை வட்டத்தில் இணைக்கப்பட்டிருந்தது. பின்பு இராமநாதபுரம் மாவட்டத்திலிருந்து ஜீலை 6, 1984 ஆம் ஆண்டு சிவகங்கை தனி மாவட்டமாக்க உத்தரவு பிறப்பிக்கப்பட்டு மார்ச் 15, 1985 முதல் செயல்படத் தொடங்கியது. தனி மாவட்ட அறிவிப்பின் பொழுது பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் மாவட்டம் என்றிருந்தது. பின்பு தமிழக அரசு சாதித்தலைவர்களின் பெயர்களை (மாவட்டப் பெயர்களுக்கு) நீக்கியது. அதன் காரணமாக பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் என்றிருந்த மாவட்டம் 1997-இல் சிவகங்கை என மாற்றம் பெற்றது. இம்மாவட்டம் தேவகோட்டை, காரைக்குடி, திருப்பத்தூர், மானாமதுரை, திருப்புவனம், சிவகங்கை என ஆறு வட்டங்களை உள்ளடக்கியது. இதில் ஒன்று தேவகோட்டை வட்டம் ஆகும். திருவாடானை வட்டத்திலிருந்து பிரிந்து தனி வட்டமாகவுள்ளது. இவ்வட்டத்தில் நூற்றுக்கும் மேற்பட்ட வருவாய்ச் சிற்றூர்கள் உள்ளன. விவசாயத்தை பிரதானத் தொழிலாகக் கொண்ட இவ்வட்டம் அரசியல், அறவியல், ஆன்மீகம் போன்ற துறைகளில் குறிப்பிடத்தக்க இடம் வகிக்கிறது.

### 1.தேவகோட்டை - பெயர்க் காரணம்

தேவிகோட்டை தான் காலமாற்றத்தில் தேவகோட்டையாக மாற்றம் பெற்றுள்ளது 'Devikottai it might changed is to Devakottai is a course of Tamil'[1] என்று இணையதளச் செய்தி பதிவு செய்கிறது. தேவகோட்டைக்கு "செந்நெல்புரி, தேவிகோட்டை"[2] என்று பெயர்கள் இருந்ததாகவும் ஆனால் இன்று

அப்பெயர்கள் வழக்கத்தில் இல்லையென்பதனை களஆய்வில் சோமசுந்தரம் பதிவுசெய்கிறார். ஆன்மீகத்தில் சிறந்ததாக இப்பகுதி காணப்படுவதால் தேவர்கள் அதிகமாக வாழ்ந்த பகுதியாகவும் எண்ணலாம். சிவகங்கை மாவட்டம் "திருக்கோஷ்டியூருக்கு தேவகோட்டையில் இருந்துதான் நூற்றுக்கணக்கான தேவர்கள் பூசையில் கலந்துகொள்ளச் சென்றனர்"[3] எனும் கருத்தின் அடிப்படையில் தேவர்கோட்டை என்பது தேவகோட்டையாக மாறியிருக்கலாம்.

தேவகோட்டையைச் சேர்ந்தவரும் வரலாற்று ஆய்வாளருமான பி.ஆர்.சந்திரன் "தஞ்சை சோழமன்னன் விஜயபாலனின் மரபினர் இரண்டாம் குலோத்துங்கனின் அமைச்சர் அருண்மொழித்தேவன் என்பார் இறகுசேரிக்கு மேற்கில் இன்றைய கோட்டையம்மன் கோயில் அருகில் விரிசிலை ஆற்றங்கரையில் கோட்டை ஒன்று கட்டியதாகவும் அதுவே இன்றைய தேவகோட்டை ஆயிற்று"[4] எனும் வரலாற்று விளக்கத்தைப் பதிவு செய்திருக்கிறார். மேலும் இவர் தேவகோட்டையை ஆரம்ப காலத்தில் "சிலம்பன் சிலம்பனி"[5] என்று செப்பேடுகள் கூறி இருக்கின்றன என்றும் கூறுகிறார். இவ்வாறாக தேவகோட்டை பெயர்க் காரணத்திற்கு பலரும் பலதரப்பட்ட கருத்துக்களை பதிவு செய்கின்றனர் என்றாலும் தேவகோட்டையைச் சுற்றி கோட்டை எனும் பெயர் தாங்கியகிராமங்கள் அதிகமாக உள்ளன. ராஜாக்கோட்டை, கோடிக்கோட்டை, சிவந்தான்கோட்டை, சாத்திக்கோட்டை, கரையான்கோட்டை, மாவிடுதிக்கோட்டை, எழுவன்கோட்டை இவையெல்லாம் கோட்டைகள் நிறைந்த ஊராக இருந்திருக்கின்றது.

### 1.1 தேவகோட்டை வரலாறு

ஆங்கிலேயர்கள் ஆட்சிக் காலத்திலிருந்து இன்று வரைக்கும் பல்வேறு வரலாற்றுச் சிறப்புகளை உடையதாக தேவகோட்டை நகரம் மற்றும் அதன் சுற்று வட்டாரப் பகுதிகள் விளங்குகின்றன. "மன்னர்கள் காலத்தில் இப்பகுதிகள்

தனித்தனி நாடுகளாக செயல்பட்டு வந்தன."[6] கண்டதேவி எனும் நாடு 14 நாடுகளை உள்ளடக்கி இருந்தது. "14 நாடுகளில் ஒன்றுதான் இறகுசேரி நாடு."[7] இந்நாடு சிவந்தெழுந்த பல்லவராயனின் இரு மகள்களில் மூத்தவள் அரசாட்சி புரிந்த நாடாகும். அதாவது பெண்வழி ஆட்சி புரிந்த நாடு என்ற சிறப்புப்பெற்றது. இக்காலகட்டத்தில் இந்நாட்டுப் பகுதிகள் அனைத்தும் இராமநாதபுரம் சமஸ்தானத்திற்கு உட்பட்டிருந்தது.

"கி.பி.1670ல் சிவந்தெழுந்த பல்லவராயனை இராமநாதபுரம் சேதுபதி மன்னன் கண்டதேவியில் கொன்றதிலும் தங்களது கண்டதேவி தனி அரசு மாநிலத்தை கிழவன் சேதுபதி புறக்கணித்து புதுக்கோட்டை தளபதியாக இருந்த ரெகுநாதத்தொண்டைமானுக்கு தனி அரசு அந்தஸ்து கொடுத்ததிலும் கிழவன் சேதுபதிக்கு எதிராக இருந்து இவருக்குப்பின் இராமநாதபுரம் அரியணைப் போட்டிகளில் பவானிசங்கரனுக்கும், சிறகிலிநாதனுக்கும் ஆதரவு கொடுத்து கலகம் செய்தனர். இதனால் சேதுபதி ஆட்சி ஆட்டம் கண்டதில் சேதுபதி நாடு பறிக்கப்பட்டு சிவகங்கை தனிச்சீமையானது. சிவகங்கை இராமநாதபுரத்தில் இருந்து பிரிக்கப்பட்டு 1732-ல் சிவகங்கை சீமை உருவானது."[8] இச்சிவகங்கை சீமைக்கு உட்பட்ட பகுதியில் இறகுசேரி நாடு வருகிறது. இந்த இறகுசேரி நாட்டில் தான் தேவகோட்டை உள்ளடங்கி இருக்கிறது.

சிவகங்கை சீமையை முத்துவடுக பெரிய உடையத்தேவரும் அவரது மறைவிற்குப்பின் மனைவி வேலுநாச்சியாரும் ஆட்சி செய்கின்றனர். வேலுநாச்சியார் தலைமறைவு ஆகிறார். ஆங்கிலேயர்கள் தேடிவரும் வேளையில் மருது சகோதரர்கள் சிவகங்கைச்சீமையை கைப்பற்றுகின்றனர்.

1860-ல் சிவகங்கை தனி அரசு அந்தஸ்தில் இருந்து ஜமீனாக மாற்றப்பட்டது. தேவகோட்டையும் தனி ஜமீனாக மாற்றம் பெறுகிறது. 1876-ல்

கண்டதேவித் தேரில் உஞ்சனை நாட்டினைத் தவிர வேறு யாருக்கும் உரிமையில்லை எனக் கலகம் ஏற்பட இதனை பயன்படுத்தி நகரத்தார்கள் திருப்பணி செய்ய கோவிலைக் கைப்பற்றினர். அதன்பிறகு நடைபெற்ற கலவரத்தில் 1896-ல் தென்னிலை நாட்டினர் தேரைக் கைப்பற்றினர்.

96½ கிராமங்களை உள்ளடக்கிய தென்னிலை நாட்டின் ஒரு பகுதி இறகுசேரி நாடு. இறகுசேரி நாட்டின் ஒரு பகுதி தேவகோட்டை ஜமீன் ஆகும். “அள.அரு.ராமசாமி செட்டியார் (1850-1899) இராமநாதபுரம் மன்னர் பாஸ்கரசேதுபதி அரியணையில் அமரத் துணையாக இருந்தவர். அதற்கு நன்றிக்கடனாக அவர் அள.அரு.இராமசாமி செட்டியாரை தேவகோட்டையின் ஜமீன்தார் ஆக்கினார்.”[9] இவர் தேவகோட்டையின் முதல் ஜமீன்தார் ஆவார்.

### 1.1.2 விடுதலை போராட்ட வரலாறு

ஆங்கிலேயர்களுக்கு எதிராகப் போராடிய சுதந்திரப் போராட்டத்தில் தேவகோட்டை பெரும்பங்காற்றியது. பலர் தம் உயிர்களைத் துறந்து தியாகிகள் ஆனார்கள். வெள்ளையர்களின் துப்பாக்கிக் குண்டுகளுக்கு பலர் இரையாகினர். “அனைத்துச் சமூகத்திலும், மதத்திலும் சுதந்திரப் போராட்டத் தியாகிகள், போராளிகள் நிறைந்த பகுதி தேவகோட்டை ஆகும்.”[10]

ஆங்கிலேய கவர்னர் கிர்கின்சன் காரில் இருந்த பிரிட்டிஷ் கொடியை இறகுசேரி முத்துச்சாமி பிடுங்கி கிழித்தெரிந்தார். இதனால் சிறை செல்ல நேர்ந்தது. இதன் காரணமாக ஆங்கிலேயர்களால் கட்டப்பட்ட (1914) சிலம்பனி வளைவில் (ஆர்ச்) ஐந்தாம் சார்ஜ் சக்கரவர்த்தியின் உருவத்தையும், எலிசபெத் மகாராணியின் சிலையும் உடைக்கப்பட்டது. இச்செயல்களின் தொடர்ச்சி தான் விடுதலைப் போராட்ட கலகம் ஆகும்.

1942 ஆகஸ்ட் 17 தேவகோட்டை இரத்த பூமியாக உருமாறிய நாள். தேவகோட்டையைச் சுற்றியுள்ள அனைத்துக் கிராம மக்களும்

தேவகோட்டையில் ஒன்று திரண்டு ஆங்கிலேயர்களுக்கு எதிராக முழக்கமிட்டனர். கட்டுக்கடங்காத கூட்டத்தைக் கண்டு ஆங்கிலேயர்கள் செய்வதறியாது திகைத்தனர். “17.08.1942 திங்கட்கிழமை காலை 7.00 மணிக்கு தேவகோட்டை நீதிமன்ற வாசலில் மறியல் செய்ய வேண்டும் எனத் தீர்மானம் செய்து அதற்கு நான்கு இளைஞர்களைத் தேர்ந்தெடுத்தனர். 17.08.1942 மறியலுக்கு செல்லும் நான்கு இளைஞர்களுக்கும் புத்தாடை அணிவித்து நெற்றியில் வீரத்திலகமிட்டு வாயில் வாய்க்கரிசியிட்டு வழியனுப்பி வைத்தனர்.

நான்கு இளைஞர்களும் புன்னகை தவழ தேசியக் கொடிகளைப் பிடித்துக் கொண்டு நீதிமன்ற வாசலை நோக்கி வந்து கொண்டிருந்தனர்.

25 வயது நிரம்பாத அரு.சிற்சபேசன், தேவகோட்டை ஜமீன்தார் அள.அரு.சோமையாவின் தங்கையின் கணவர் சித.பெரி.சிதம்பரம், சௌ.செ.இராமநாதன், டி.ஆர்.அருணாச்சலம். இந்நான்கு இளைஞர்களும் தேவகோட்டையிலுள்ள நீதிமன்ற இரண்டு வாசலையும் அடைத்துக் கொண்டு தேசியக் கொடியை உயர்த்திப் பிடித்துக் கொண்டு மறியல் செய்தனர்”[11] என்கிறார் சூறாவளி லெட்சுமணன். நாட்டு விடுதலைக்கும், ஆங்கிலேயரை எதிர்த்து குரல் கொடுப்பதற்கும் வயது வித்தியாசம் இன்றி இளைஞர்கள் முதல் பெரியவர்கள் வரை அனைவரும் பங்கு பெற்றுள்ளனர்.

தமிழர்களின் போர், வீரம், கொடை முதலிய செய்திகளைப் பதிவு செய்திட்ட புறநானூற்றில் ஒக்கூர் மாசாத்தியார் சிவகங்கை மாவட்டத்தைச் சேர்ந்த இவரின் பாடல் மேற்சொன்ன வீரத்தினை பறைசாற்றுவதாக அமைகிறது.

**கெடுக சிந்தை; கடிது இவள் துணிவே**
**மூதின் மகளிர் ஆதல் தகுமே**
**மேல்நாள் உற்ற செருவிற்கு இவள்தன்னை**
**யானை எறிந்து களத்து ஒழிந்தன்னே**
**நெடுநல் உற்ற செருவிற்கு இவள் கொழுநன்**
**பெருநிரை விலங்கி, ஆண்டுப்பட்டனனே**

**இன்றும் செருப்பறைகேட்டு, விருப்புற்று மயங்கி**
**வேங்கைக் கொடுத்து; வெளிது விரித்து உடீஇப்**
**பாறு மயிர்க் குடுமி எண்ணெய் நீவி**
**ஒரு மகன் அல்லது இல்லோள்**
**செருமுக நோக்கிச் செல்க என விடுமே! (புறம்.279)**

முதல்நாள் போரில் தந்தையை இழந்து, மறுநாள் போரில் தன் கணவனை இழந்து, அடுத்த நாள் போரின் பறையொலி கேட்டு, தன் ஒரே மகனுக்கு ஆடை எடுத்து உடுத்தி, குடுமியில் எண்ணெய் தடவிச் சீவி போர்க்களம் நோக்கிச் சென்றுவா எனத் தன் மகனை வழியனுப்பும் வீரத்தாய்கள் நிறைந்த மண் இந்த தமிழ் மண். சிவகங்கையைச் சார்ந்த இப்புலவர் ஒரு பெண்பாற்புலவர். வீரத்தாயின் சிறப்பினை எடுத்துக்கூறிய இப்பாடல் தேவகோட்டை போராட்டத்தில் தன் இளம் வயது மகன்களைப் போராட்டத்திற்கு அனுப்பிய தாய்மையின் அடையாளத்தை பிரதிபலித்து இருப்பதனைக் காணமுடிகிறது.

நான்கு இளைஞர்களும் வந்தே மாதரம் என முழக்கமிட்டபடியிருக்க கூட்டம் நேரத்திற்கு நேரம் அதிகமாகியது. மக்களின் வீர ஆவேசத்தைக் கண்ட காவல்துறையினர் தேவகோட்டை சார்பு நீதிபதியாக இருந்த ஆங்கிலேயர் வாக்கரிடம் துப்பாக்கி சூட்டிற்கான அனுமதியைப் பெற்றுப் பொதுமக்களை நோக்கி சுட ஆரம்பித்தனர்.

“சில இளைஞர்கள் நீதிமன்ற வாசல் அருகிலிருந்த பலசரக்குக் கடையிலிருந்த மண்ணெண்ணெய் டின்களையும், லெட்சுமி தியேட்டர் அருகிலிருந்த பெட்ரோல் பங்கில் பெட்ரோல் கேன்களையும் எடுத்துக் கொண்டு வந்தனர். அவர்கள் நீதிமன்றத்திற்குள் நுழைந்து மாளிகையின் மாடியிலேறி பெட்ரோல், மண்ணெண்ணெய் கொண்டு நாற்காலி, பெஞ்சு, மரபீரோக்களை குவித்து அவைகளில் தீவைத்தனர். அக்காலத்தில் பல லட்சக்கணக்கான ரூபாய்களைச் செலவிட்டு இத்தாலியில் இருந்து கொண்டுவரப்பட்ட பளிங்குக் கற்களால் கட்டப்பெற்ற பிரமாண்டமான மாளிகை தீப்பற்றி எரிந்தது.”[12]

இதனைக் கண்டு அதிர்ந்து போன காவல் துறையினர் கண்ணில் கண்டவர்களை எல்லாம் சுட்டனர். 75 பேர் பலியாகினர். எங்கு பார்த்தாலும் மரண ஓலம், ரத்தக்கறை படிந்த சாலைகள் இதனைக் கண்டு நிலைகுலையாத போராட்டக் குழுவினர் காவலர்களுக்கு பேருந்து கொடுத்து உதவிய ராமவிலாஸ் பேருந்தை தீயிட்டுக் கொளுத்தினர். இவ்வாறாக சுதந்திரப் போராட்ட வரலாற்றில் பல உயிர்களைப் பலி கொடுத்த நகரமாக தேவகோட்டை மாறியது. எங்கு பார்த்தாலும் பிணங்கள் குவிந்து கிடக்கும் சுடுகாடு போல காட்சி அளித்தது. தேவகோட்டையில் நடந்த இப்போராட்டம் தென்மாவட்டங்களில் மிகப்பெரிய விடுதலைப் போராட்டமாக மாறியது. வரலாற்றின் பக்கங்களில் தேவகோட்டை நகரம் இடம்பெறுவதற்கு இப்போராட்டக் களமே காரணமாகும்.

இவ்விடுதலைப் போராட்டத்தின் மூலம் “சுதந்திரப் போராட்டக் கிளர்ச்சியாளர்களின் மையம் தேவகோட்டையில் செயல்படும் அளவில் இக்கிளர்ச்சிகள் நடந்தன.”[13] இதன் காரணமாக பின்னாளில் ஜவகர்லால் நேரு, மகாத்மாகாந்தி உள்ளிட்ட பல தலைவர்கள் தேவகோட்டை நகருக்கு வரக் காரணமாக இருந்தன.

### 1.2 பதிப்பும், பத்திரிக்கையும்

விடுதலைப் போராட்ட நிகழ்விற்குப்பின் தேவகோட்டையைச் சேர்ந்த பலர் முடங்கிப் போய்விடவில்லை. மாறாக தன் போராட்டத்தை வேறு வகையில் கையாண்டனர். காரணம் நாடு விடுதலை பெறவேண்டும் என்பது ஒன்றே அவர்களின் நோக்கம். அதற்காக என்ன வேண்டுமானாலும் செய்வதற்கு தங்களை தயார்படுத்தி வைத்து இருந்தனர். இதற்காக அவர்கள் கையிலெடுத்தது பதிப்புத்துறையையும், பத்திரிக்கைத் துறையையும் ஆகும்.

தேவகோட்டையைச் சேர்ந்த பலர் சென்னைக்குப் பயணம் ஆயினர். தமிழின் ஆர்வமும், நாட்டு விடுதலை உணர்வும் அவர்களை பல்வேறு பதிப்பகங்களையும், பத்திரிக்கைகளையும் துவங்கத்தூண்டின. அவ்வகையில்,

- ❖ சின்ன அண்ணாமலையும், ஆர்.அருணாச்சலமும் சாந்தி அச்சகத்தை துவக்கினர். இந்த அச்சகத்திலிருந்து நவயுக பிரசுராலயம் என்ற விடுதலை உணர்வை ஊட்டும் பிரசுரங்களை வெளியிட்டனர்.
- ❖ முல்லை முத்தையா, முல்லை பதிப்பகத்தை ஆரம்பித்தார். இதன்மூலம் பாரதிதாசனின் அனைத்துக் கவிதைகளையும் நூலாக்கி அச்சிட்டார். "பாரதிதாசனுக்கு பாண்டிச்சேரியில் வீடும் வாங்கிக்கொடுத்தார். இவ்வீடு இன்று அரசு அருங்காட்சியமாக"[14] உள்ளது.
- ❖ கி.கரு.சாமிநாதன் செட்டியார் அருணா பதிப்பகத்தையும், திருநாவுக்கரசு வானதி பதிப்பகத்தையும் துவக்கினார்கள்.
- ❖ சுப்பிரமணியம் செட்டியார் குழந்தைகளுக்கான புத்தகங்களை வெளியிட்டார்.
- ❖ தமிழ்வாணன் மணிமேகலை பிரசுரத்தை துவக்கினார். கல்கண்டு எனும் இதழையும் வெளியிட்டார்.
- ❖ சொக்கலிங்கம் இளங்கோ பதிப்பகத்தை துவக்கி அதன் மூலம் வணங்காமுடி என்னும் இதழை வெளியிட்டார்.
- ❖ லெட்சுமணன் சூறாவளி எனும் பத்திரிக்கையை நடத்தினார். (பின்னாளில் இவர் சூறாவளி லெட்சுமணன் என அழைக்கப்பட்டார்)
- ❖ ஏகநாதன் உண்மை பிரசுரம் துவக்கி அதன்மூலம் பொதுவுடைமை புத்தகங்களை வெளியிட்டார்.
- ❖ பரலகவி இராமநாதன் செட்டிநாடு என்னும் பத்திரிக்கையை நடத்தினார்.

இவ்வாறாக தேவகோட்டை வரலாற்றில் தேசப்பற்றும், தமிழ் ஆர்வமும் மிகுந்த பற்றாளர்களை அடையாளப்படுத்தியிருக்கிறது. நாடும், மொழியும் விடுதலை பெறுவதற்கு தேவகோட்டை மக்களின் பங்களிப்பு அளவிடற்கரியதாகும்.

இப்பதிப்பகங்கள் விடுதலைப் போராட்டக் காலத்தில் துவங்கப் பட்டாலும் இன்றளவும் தமிழ் நூல்களை வெளியிடும் அளப்பரிய பணியைச் செய்து கொண்டிருக்கிறது. எந்நோக்கத்திற்காக துவங்கப்பட்டதோ அந்நோக்கத்தை நிறைவேற்றி இன்றைய காலகட்டத்திலும் பல்வேறு தமிழ் அறிஞர்களையும், ஆராய்ச்சியாளர்களையும் உலகிற்கு எடுத்துக்காட்டி நிற்கிறது. இப்பதிப்பகங்களும், பத்திரிக்கைகளும் தேவகோட்டையின் வீரவரலாற்றில் முக்கிய இடம்பிடித்தவையாகும்.

### 1.3 அறமும் ஆன்மிகமும்

“தேவகோட்டையில் முதன்முதலாக குடியேறியவர்கள் நகரத்தார்கள். இவர்கள் கடல்கோளால் சூழப்பட்ட பூம்புகார் என்று சொல்லப்பட்ட காவிரிப்பூம்பட்டினத்தை பூர்விகமாகக் கொண்டவர்கள்.”[15] அங்கிருந்து வந்து முதன்முதலில் தேவகோட்டையை மையமிட்டும் அதன் தொடர்ச்சியாக தேவகோட்டையை அடுத்து அதன் தென்பகுதியிலும் படிப்படியாக நகரத்தார் வாழ்வியலைத் தொடங்குகின்றனர். இதனை உறுதிப்படுத்தும் வகையில் பழங்காலத்தில் பூம்புகாரில் எப்படி மாதக்கணக்கில் திருவிழா நடைபெற்றதோ அதனைப்போன்று தேவகோட்டையில் நகரத்தார் கோவில்களிலும் வாரக்கணக்கில் மாதக்கணக்கில் திருவிழா நடைபெறுகிறது. உதாரணமாக சிவன் கோவில் கந்தசஷ்டி விழாவினைக் குறிப்பிடலாம்.

“சைவத்திற்கும், தமிழுக்கும் பாடுபட்ட செட்டிநாட்டில் நகரத்தார்கள் அதிகம் வாழும் திருத்தலமாக தேவகோட்டை விளங்குகின்றது.”[16] இவர்கள் அறச்செயலிலும், ஆன்மிகத்திலும் தலைசிறந்தவர்கள்.

- “பெண் கல்விக்காக 1925-இல் வெ.அழ.அழகப்பச் செட்டியாரால் சொர்ணமூர்த்தி பெண் பாடசாலை அமைக்கப்பட்டு நடைபெற்று வந்தது.”[17]
- தேவகோட்டை நகரத்தார்களான அள.அரு. குடும்பத்தார், மெ.நா.அரு. குடும்பத்தார், பிச.அரு. குடும்பத்தார், சித.முரு. குடும்பத்தார் நிதி உதவியுடன் நகரத்தார் ஸ்ரீ மீனாட்சி வித்யா பரிபாலன சங்கம் அமைக்கப்பட்டு அதன்மூலம் 1931-இல் நகரத்தார் உயர்நிலைப்பள்ளி தொடங்கப்பட்டது.
- “சரஸ்வதி வாசகசாலை என்னும் பெயரில் ஒரு நூலகம் அமைத்து அதில் அனைத்து தமிழ் ஆங்கில தினசரிகளும் வரவழைக்கப்பட்டு மக்களின் வாசிப்பை ஏற்படுத்தியவர் தேவகோட்டையைச் சேர்ந்த ஒரு நகரத்தார். இவர் பிற்காலத்தில் அவ்விடத்தில் நகரத்தார் தொடக்கப் பள்ளி அமைக்க தமது இடத்தைத் தானமாகக் கொடுத்தார்.”[18]
- சேவு.அண்ணாமலைச் செட்டியார் 1970-ல் ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரியையும், 1973-ல் ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை பிரிப்பரேட்டரி பள்ளியையும் தொடங்கினார்.
- சேவு.அ.அருணாச்சலம் குடும்பத்தாரால் இன்றளவும் சேர்மன் மாணிக்கவாசகம் செட்டியார் நடுநிலைப்பள்ளி நடத்தப்பெற்று வருகின்றன.
- பெரி.சோம.சாத்தப்ப செட்டியார் குடும்பத்தாரால் நிதி உதவியும், நிலமும் வழங்கப்பட்டு தேவகோட்டையில் அரசு மருத்துவமனையை நிறுவினார்.

இவை தேவகோட்டையின் கொடைத்தன்மை மிக்கவர்களால் செய்யப்பட்ட அறநிகழ்வுகள் ஆகும். இதனைப்போன்று ஆன்மிகத்திலும் சிறப்புத் தொண்டாற்றி உள்ளனர்.

- 1831-இல் தூங்கன் செட்டியாரால் சிலம்பனிக் கோயில் குளம் கட்டிக் கொடுக்கப்பட்டது.

- 1876-இல் பழ.செ. குடும்பத்தினர் கைலாசநாதர் ஆலயமும் ஊருணியும் உருவாக்கிக் கொடுத்துள்ளார்.

- 1919-இல் திண்ணஞ் செட்டியாரால் நகரின் கிழக்கே ஊருணியும் பிள்ளையார் கோவிலையும் கட்டிக் கொடுத்துள்ளார்.

- வெள்ளையன் செட்டியார் வெள்ளையன் ஊருணியும், பழ.ராம. குடும்பத்தினர் கருதாவூரணி மற்றும் பிள்ளையார் கோயிலையும் கட்டிக் கொடுத்துள்ளனர்.

இவ்வாறாக தேவகோட்டை நகரம் அறத்திலும் ஆன்மிகத்திலும் தலைதூக்கி நின்றுள்ளதனையும், அதற்கான நற்செயல்கள் புரிவோர் வாழும் நகரமாகவும் இது காணப்பட்டிருக்கிறது.

### 1.4 தேசத்தலைவர்கள் வருகை

பல தேசியத் தலைவர்கள், தமிழகத் தலைவர்களும் வந்துபோன இடம் தேவகோட்டையாகும். அவ்வகையில் நேரு, மகாத்மாகாந்தி, ஈ.வே.ரா.பெரியார், திருவாரூர் தங்கராஜ், எம்.ஆர்.ராதா, அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி, ஜெ.ஜெயலலிதா போன்ற தலைவர்கள் தேவகோட்டைக்கு வருகை புரிந்துள்ளனர்.

1921-ல் காந்தி முதல் முறையாகவும் 1934-ல் இரண்டாவது முறையாகவும் காந்தியின் வருகை பதிவு செய்யப்பட்டுள்ளது. “1956-ல் இராமநாதபுரம் மாவட்ட சாதி ஒழிப்பு மாநாடு”[19] தேவகோட்டையில் நடைபெற்றது குறிப்பிடத்தக்கதாகும்.

### 1.4.1 அரசியல்

போராட்டம், அறம், ஆன்மிகம் போன்றவற்றில் தன்னிகரில்லாத நகரமாக திகழ்ந்தாலும் அரசியல் களத்திலும் தேவகோட்டை முன்னிறுத்தப்பட்டது குறிப்பிடத்தக்கதாகும்.

- 1919 முதல் காங்கிரஸ் கட்சி தேவகோட்டையில் செயல்பட்டு வருகிறது.
- 1955-இல் தி.மு.க. மாநாடு நடைபெற்று உள்ளது.
- 1970-இல் கம்யூனிஸ்ட்கள் நிலப்போராட்டம் நடத்தினர். இதில் 200-க்கும் மேற்பட்டோர் கைது செய்யப்பட்டனர்.
- 1972-77 வரை அ.தி.மு.க. நடத்திய பல போராட்டங்களில் பலரும், 1975-இல் தி.மு.க. நடத்திய போராட்டங்களில் பலரும், 1977-ல் காங்கிரஸ் ஆட்சி நடத்திய போராட்டங்களில் பலரும் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டனர்.

அரசியல் வரலாற்றில் 2011 வரை தேவகோட்டை, திருவாடானை சட்டமன்றத் தொகுதியில் அடங்கி இருந்தது. 2011-ஆம் ஆண்டு சட்டமன்றத் தொகுதி சீரமைப்பில் தற்பொழுது காரைக்குடி சட்டமன்றத் தொகுதியில் அமையப் பெற்றுள்ளது. “திருவாடானை சட்டமன்றத்திற்குட்பட்டு இருந்த வரைக்கும் ஒன்பதுமுறை கரியமாணிக்கம் குடும்பத்தினர் சட்டமன்ற உறுப்பினர்களாகத் தேர்வு செய்யப்பட்டுள்ளனர்.”[20]

2011-ஆம் ஆண்டு முதல் சோழன்.சித.பழனிச்சாமி சட்டமன்ற உறுப்பினராகவும், சுமித்ரா ரவிக்குமார் நகராட்சித் தலைவராகவும் இருந்துள்ளனர். 2014-ஆம் ஆண்டில் தேவகோட்டையை உள்ளடக்கிய சிவகங்கை பாராளுமன்றத் தொகுதியின் உறுப்பினராக அ.தி.மு.க.வைச் சேர்ந்த நாகாடி செந்தில்நாதன் தேர்வு செய்யப்பட்டார். 2019ஆம் ஆண்டு கார்த்திக்சிதம்பரம் பாராளுமன்ற உறுப்பினராக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

### 1.4.2 சிறப்புகள்

சுதந்திரப் போராட்ட வரலாற்றில் இடம்பெற்ற தேவகோட்டை நகரம் பல சிறப்புகளைக் கொண்டது. நகரத்தார்களின் அரண்மனை போன்ற வீடுகள் காண்போரை வியக்கவைக்கும் கட்டிடக் கலையைப் போற்றி வளர்த்த பகுதியாகும். மலேசியா, சிங்கப்பூர், ரங்கூன் போன்ற வெளிநாடுகளில் இருந்து கொண்டு வரப்பட்ட தேக்கு, பளிங்குக் கற்களைக் கொண்டு மிக நேர்த்தியாக கட்டப்பட்ட அரண்மனைகள் இந்நகரத்திற்கு பெருமை சேர்ப்பதாகும்.

இவ்வீடுகளில் சின்னத்திரை, திரைப்படங்கள் ஆகியவற்றின் படப்பிடிப்புகள் நடைபெற்று வருவதால் சிறந்த படப்பிடிப்புத் தளமாக வளர்ச்சி பெற்றுள்ளது. "Today Devakottai is favoured site for movie shooting, mainly because of its palatial bungalows (which belong to Nagarathar families)"[21] என்று தேவகோட்டை சிறந்த படப்பிடிப்புப் பகுதி என்பதை இணையத்தளத்தில் பதிவு செய்துள்ளனர்.

தமிழகத்திலுள்ள பழமையான நகராட்சிகளில் தேவகோட்டை நகராட்சியும் ஒன்றாகும். "Devakottai is one of the oldest Municipalities of Tamilnadu"[22] என்று இதன் பழமை பதிவு செய்யப்பட்டுள்ளது. இதன் "முதல் நகர்மன்றத் தலைவராக சுப்பராயன் அம்பலகாரர் 1934-இல் தேர்ந்தெடுக்கப்பட்டார். பின்னர் நகர்மன்ற நிர்வாகத் தலைமை நகரத்தார் கைக்கு மாறியது. ஏ.எல்.ஏ.ஆர்.சோமசுந்தரம் செட்டியார், சித.சுப்பிரமணியம் செட்டியார் பெர்லிஸ், கே.சுப்பிரமணியம் செட்டியார், இராமநாதன் செட்டியார் ஆவார்கள். 1967-க்குப் பிறகு அரசியல் கட்சிகளுக்கு நகர்மன்ற அதிகாரம் மாறியது"[23] என்பதன் மூலம் சுதந்திரத்திற்கு முன்பே தேவகோட்டை நகரம் நகராட்சி எனும் உயர்ந்த நிலையை அடைந்துள்ளது இதன் சிறப்புகளில் ஒன்றாகும்.

தேரோடும் வீதிகளும், வீதிகள் எங்கும் கோவில்களும், ஊருணிகளும் இந்நகரை சிறப்பிக்கின்றன. மேலும் நகரைச் சுற்றி வரலாற்றுச் சிறப்புமிக்க எழுவன்கோட்டை தேரும், கண்டதேவித் தேரும் இதன் வட்டாரத்தில் அமையப்பெற்றுள்ளது. புராண (இராமாயணம்) சிறப்புமிக்க இறகுசேரி, அனுமந்தக்குடி, கண்டதேவி, இளக்கினிவயல் இவ்வட்டாரக் கிராமங்களில் குறிப்பிடத்தக்கதாகும்.

“தமிழிசை இயக்கத்தில் தேவகோட்டைக்கு தனியிடம் உண்டு. 1942-இல் தமிழிசை இயக்க மாநாடு இங்கு நடைபெற்றது. அதன் தொடர்ச்சியாகத் தமிழிசைப் பள்ளி ஒன்றும் தொடங்கப்பெற்று நீண்டகாலம் முத்தமிழ் வளர்ச்சிக்குத் தொண்டாற்றியது.”[24]

மதுரையில் உள்ள மீனாட்சியம்மன் கோவிலைப் போன்ற அமைப்புடைய தேவகோட்டை அருள்மிகு மீனாட்சிசுந்தரேசுவரர் நகரச் சிவன்கோவில் உலக அளவில் சிறப்புப் பெற்றதாகும். இக்கோவிலிலுள்ள கல் திருமேனியாலான சேக்கிழார் சன்னதி தனிச்சிறப்புப் பெற்ற ஒன்றாகும்.

மேலும் இந்நகரில் சிலம்பனி விநாயகர், கைலாசவிநாயகர், நித்தியகல்யாணி கைலாசநாதர், இறகுசேரி மும்முடிநாதர், கோதண்டராமர், ஸ்ரீனிவாசப்பெருமாள், கலங்காதகண்ட விநாயகர், கருதாவூரணி பிள்ளையார் கோயில், வன்னிச்செட்டி ஊருணிப் பிள்ளையார், இறகுசேரி மந்திரமூர்த்தி விநாயகர். பத்திரகாளியம்மன், இறகுசேரி காளியம்மன், கோட்டையம்மன் போன்ற வரலாற்றுச் சிறப்புமிக்க ஆலயங்கள் காணப்படும் பூமி ஆகும். மேற்சொன்ன 14 கோயில்களில் 11 கோயில்கள் ஊருணியைச் சார்ந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

“இம்மாவட்டத்தில் சிறப்புப்பெற்ற சீரடி சாய்பாபா கோயில் தேவகோட்டையில் அமையப்பெற்றுள்ளது.”[25] மருத்துவத்துறையிலும்,

சட்டத்துறையிலும் இந்நகரம் மிகப்பெரிய வளர்ச்சி அடைந்துள்ளது. நவீன மருத்துவ உபகரணங்கள் கொண்ட மருத்துவமனைகள் இந்நகரில் அதிகம். எல்லாவற்றிற்கும் உச்சமாக இந்நகரத்தைச் சேர்ந்த நகரத்தார் ஏ.ஆர்.லெட்சுமணன் உச்சநீதிமன்ற நீதிபதியாக இருந்து சிறப்புப் பெற்றவர்.

தேவகோட்டையைச் சுற்றியுள்ள கிராமங்கள் விவசாயத்தை முதன்மைத் தொழிலாகக் கொண்டிருந்தாலும் தேவகோட்டை நகரம் பல தொழில் செய்யும் தொழில் நகரமாகவும் காணப்படுகிறது. நகரத்தார்கள் அதிகம் வாழும் பகுதி என்பதால் அவர்களது குலத்தொழிலான வட்டிக்குக் கொடுத்தல், தங்கம், வெள்ளி வியாபாரம், விலை உயர்ந்த பட்டாடைகள் விற்பனை நிலையம் போன்றவை குறிப்பிடத்தக்கவையாகும்.

மேலும் ரோட்டரி சங்கம், லயன்ஸ் சங்கம் போன்றவையும், திருவள்ளுவர் பேரவை, பாரதியார் தமிழ் அமைப்பு போன்றவையும் செயல்பட்டு வருகிறது. “10 தொண்டு நிறுவனங்கள், 52 மருத்துவர்கள், 28 திருமண மண்டபங்கள், 5 தங்கும் விடுதிகள், 3 திரையரங்குகள், 15 அச்சகங்கள் ஆகியவை ஊரில் உள்ள பொதுவசதிகளில் குறிப்பிடத்தக்கவை ஆகும்.”[26]

“சுதந்திரப் போராட்டத்தில் உயிரிழந்த தியாகிகளைப் போற்றும் வகையில் நகராட்சி அலுவலகத்திற்கு எதிரில் “தியாகிகள் பூங்கா”[27] அமைக்கப்பட்டுள்ளது.

இந்நகரில் உள்ள சாலைகளின் பெயர்களும், தெருக்களின் பெயர்களும் பெரும்பாலும் காரணப் பெயர்களாகக் காணப்படுவது இதன் தனிச்சிறப்பாகும். சுதந்திரப் போராட்டத்தின்போது வீரர்கள் இறந்து கிடந்த சாலை தியாகிகள் ரோடு என அழைக்கப்படுகிறது.

காந்தி நடந்து சென்ற பாதை காந்தி ரோடு என பெயர் சூட்டியுள்ளனர். தேவகோட்டை ஜமீனுக்கு சொந்தமான குதிரைகள் வந்து சென்ற பாதை

குதிரைப்பாதை ரோடு எனவும், ஜல்லிக்கட்டு நடத்தும் பல இடங்களில் வாடிவாசல் கட்டிக் கொடுத்தவர் வீட்டை வாடியார் வீடு எனவும், அவர் வீட்டிற்குச் செல்லும் தெருவினை வாடியார் வீதி எனவும் இன்றளவும் அழைக்கப்பட்டு வருகிறது.

நேரு வந்து பேசிய இடம் நேரு பொட்டல் என வழங்கப்படுகிறது. சிறப்புப்பெற்ற நிகழ்வுகளை பெயரிட்டு சிறப்புச் செய்துள்ளனர்.

மேலும் மாவட்ட துணை ஆட்சியர் அலுவலகம், மாவட்ட சார்பு நீதிமன்றம், சார்பதிவாளர் அலுவலகம், தாலுகா அலுவலகம், மாவட்டக் கல்வி அலுவலகம், பஞ்சாயத்து ஒன்றிய அலுவலகம், நகராட்சி அலுவலகம், இரண்டு காவல் நிலையங்கள், தீயணைப்புத்துறை அலுவலகம் ஆகியவை குறிப்பிடத்தக்கவையாகும்.

### 1.5 கல்வி நிலையங்கள்

இவ்வட்டாரத்தில் அரசு தொடக்கப்பள்ளிகள் 63, அரசு உதவிபெறும் தொடக்கப்பள்ளிகள் 13, அரசு உயர்நிலைப் பள்ளிகள்-2, அரசு உதவிபெறும் உயர்நிலைப்பள்ளிகள்-4, அரசு மேல்நிலைப்பள்ளிகள்-3, அரசு உதவிபெறும் மேல்நிலைப்பள்ளிகள்-6, கலைஅறிவியல் கல்லூரி-3, கல்வியியல் கல்லூரி-1, பல்தொழில்நுட்ப கல்லூரி-1 இவ்வட்டாரத்தில் அமையப்பெற்றுள்ளது.

### 1.6 தொகுப்புரை

❖ மன்னர்கள் காலத்தில் இவ்வட்டாரம் தனித்தனி நாடுகளாகச் செயல்பட்டு வந்துள்ளன.

❖ இறகுசேரி நாட்டில் தேவகோட்டை அமைந்திருந்ததாக வரலாற்றுப் பதிவுகள் உள்ளது.

❖ ஆரம்ப காலத்தில் இராமநாதபுரம் சமஸ்தானத்திற்கு உட்பட்டு இருந்திருக்கிறது. பின்பு சிவகங்கை ஜமீனுக்கு மாற்றப்பட்டு உள்ளது.

- அள.அரு.இராமசாமி செட்டியார், தேவகோட்டையின் முதல் ஜமீன்தாராக நியமிக்கப்பட்டுள்ளார்.
- தேவகோட்டை நகரம் முதலில் ஒருங்கிணைந்த இராமநாதபுரம் மாவட்டத்தில் இருந்திருக்கிறது.
- அதனை அடுத்து சிவகங்கை தனிமாவட்டமாக பிரிந்தபொழுது தேவகோட்டை சிவகங்கையில் சேர்க்கப்பட்டு இருக்கிறது.
- திருவாடானை வட்டத்திலிருந்த தேவகோட்டை தற்பொழுது தனிவட்டமாக பிரிக்கப்பட்டுள்ளது.
- தேவிகோட்டை என்றும், தேவர் கோட்டை என்றும் இருந்து தற்பொழுது தேவகோட்டையாக மாறி இருக்கிறது என்ற கருத்து நிலவுகிறது.
- 1942 ஆகஸ்ட் சுதந்திரப் போராட்டத்தில் தேவகோட்டையில் நீதிமன்றம் எரிக்கப்பட்டு உள்ளது. அதன் காரணமாக 75-க்கும் மேற்பட்டோர் ஒரே நாளில் ஆங்கிலேயர்களால் சுடப்பட்டு உயிரிழந்துள்ளனர்.
- சுதந்திரப் போராட்டம் தென்மாவட்டங்களில் பரவ தேவகோட்டை கலவரம் மிகப்பெரிய காரணமாக அமைந்திருக்கிறது.
- பத்திரிக்கைத் துறையிலும், பதிப்புத் துறையிலும் தேவகோட்டையைச் சேர்ந்தவர்கள் இன்றளவும் புகழ்பெற்று விளங்குகின்றனர்.
- பாரதிதாசன் கவிதைகளை வெளியிட்ட முல்லை முத்தையா புதுச்சேரியில் அவருக்கு வீடும் வாங்கிக் கொடுத்துள்ளார்.
- விடுதலைப் போராட்டக் களத்தினை பத்திரிக்கைகள் மூலம் பல வழிகளில் மக்களிடத்தில் கொண்டு சேர்த்துள்ளனர்.
- அறச்சிந்தனைகளையும், ஆன்மிகமும் தேவகோட்டையில் வளர்ந்து ஓங்கி இருக்கின்றது.

- பல நகரத்தார்கள் கல்விக் கூடங்களையும், கோயில் மற்றும் ஊருணிகளையும் தம் சொந்தப் பணத்தில் கட்டிக் கொடுத்துள்ளனர்.
- இந்நகரத்திற்கும், இவ்வட்டாரத்திற்கும் பல தேசத்தலைவர்களும், தமிழக அரசியல் தலைவர்களும் வருகை தந்துள்ளனர்.
- பல்வேறு அரசியல் போராட்டங்கள் இம்மண்ணில் நடைபெற்று பலர் சிறை சென்றுள்ளனர்.
- நகரத்தார் மாளிகைகள் திரைப்படம் எடுக்கும் படப்பிடிப்புத் தளமாக இவ்வூர் அமைந்துள்ளது.
- சுதந்திரப் போராட்டத் தியாகிகளுக்கு நன்றி கூறும் வகையில் தியாகிகள் பூங்காவும், தியாகிகள் சாலையும் தேவகோட்டையில் அமையப் பெற்றுள்ளன.
- உயிர்காக்கும் மருத்துவமும், உச்சநீதிமன்ற நீதிபதியும் இம்மண்ணின் சிறப்புக்களில் ஒன்றாகும்.
- பல அரசு அலுவலகங்களும், அரசு மற்றும் தனியார் பள்ளி, கல்லூரிகளும் இந்நகரில் அமைந்துள்ளன.
- நகரத்தார், கள்ளர், மறவர், யாதவர், தேவேந்திரகுல வேளாளர் உட்பட அனைத்துச் சாதியினரும் இந்நகரிலும் அதனை சுற்றியுள்ள பகுதிகளிலும் வசித்து வருகின்றனர்.

**அடிக்குறிப்புகள்**

1. இணையத்தளம், Devakottai-wikipedia:https//en.in.wikipedia.org
2. சோமசுந்தரம், தகவலாளி, தேவகோட்டை, நாள்: 06.02.2016.
3. கோ.இராமசாமி, தகவலாளி, தேவகோட்டை, நாள்: 17.04.2016.
4. பி.ஆர்.சந்திரன், தேரும் போரும் (பாண்டிய நாட்டு சோர்க்குடியினர் வரலாறும் பண்பாடும்), ப.397.
5. மேலது, ப.400.
6. சோமசுந்தரம், தகவலாளி, தேவகோட்டை, நாள்: 06.02.2016.
7. பி.ஆர்.சந்திரன், தேரும் போரும், ப.397.
8. மேலது, ப.391. நாள்: 07.06.2016
9. இணையத்தளம், www.Devakottai Nagarathar, Org.
10. பி.ஆர்.சந்திரன், தேரும் போரும், பக்.407-408.
11. சூறாவளி பொ.லெட்சுமணன், சும்மா வரவில்லை சுதந்திரம், பக்.55-56.
12. மேலது, பக்.57-58.
13. சூறாவளி, லெட்சுமணன், தகவலாளி, தேவகோட்டை, நாள்: 07.06.2016.
14. மூவேந்தர் முத்து, நெஞ்சில் நிலைத்தவர்கள் பகுதி-2, ப.105.
15. சோமசுந்தரம், தகவலாளி, தேவகோட்டை, நாள்: 06.02.2016.
16. இணையத்தளம், Devakottai Nagarathar, Org.
17. சரவணன், தகவலாளி, தேவகோட்டை, நாள்: 07.06.2016.
18. மேலது. நாள்: 07.06.2016
19. பி.ஆர்.சந்திரன், தேரும் போரும், ப.412.
20. மேலது, ப.413.
21. இணையத்தளம், www.devakottai Nagarathar, Org.
22. மேலது,
23. பி.ஆர்.சந்திரன், தேரும் போரும், ப.414.
24. இணையத்தளம், Devakottai Nagarathar, Org.
25. சிங்காரவேலு, தகவலாளி, தேவகோட்டை, நாள்: 06.02.2016.
26. இணையத்தளம், Devakottai Nagarathar, Org.
27. சோமசுந்தரம், தகவலாளி, தேவகோட்டை, நாள்: 06.02.2016.

இயல் - 2

# தலவரலாறும் கோயில் அமைப்பும்

2.1 சிறுதெய்வ வழிபாடு

2.1.1 சிறுதெய்வங்களின் வகைகள்

2.1.2 குலதெய்வங்கள்

2.1.3 ஊர்த்தெய்வங்கள்

2.1.4 காவல் தெய்வங்கள்

2.1.5 பிடிமண் தெய்வங்கள்

2.2 பெண் தெய்வங்கள்

2.3 மாரியம்மன் பொதுவரலாறு

2.3.1 முத்துமாரியம்மன்

2.3.2 ரேணுகாதேவி முத்துமாரியம்மன்

2.3.3 சமயபுரத்து மாரியம்மன்

2.3.4 பொன்னத்தி மாரியம்மன்

2.4 காளியம்மன் பொதுவரலாறு

2.4.1 காளியம்மன்

2.4.2 கள்ளாம்பிரம்பு காளியம்மன்

2.4.3 மலையாளக் காளியம்மன்

2.4.4 பிள்ளைமடத்துக் காளியம்மன்

2.4.5 மடக்கரைக் காளியம்மன்

2.4.6 செட்டியா ஊருணிக் காளியம்மன்

2.4.7 அண்ணாநகர் கள்ளாம்பிரம்புக் காளியம்மன்

2.4.8 சமுத்திரக்காளி

2.4.9 மூக்கரைக்காளியம்மன்

## இயல் - 2

# தலவரலாறும் கோயில் அமைப்பும்

மனித இனம் தோன்றியது முதல் வழிபாடும் தோன்றிவிட்டது. நாட்டுப்புற மக்களால் தொன்றுதொட்டு வழிபடப்பட்டு வரும் தெய்வங்கள், சிறுதெய்வங்கள் என கட்டமைக்கப்பட்டுள்ளன. இவ்வழிபாடானது ஒவ்வொரு காலகட்டத்திலும் வளர்ச்சியடைந்துள்ளன. ஆரம்பநிலையில் உருவமற்ற நிலையிலும், பிற்காலத்தில் உருவ வழிபாடாகவும் மாறி இருக்கிறது. “சிறுதெய்வ வழிபாடு என்பது நம்முடைய பாரம்பரியங்களை நமக்கு எடுத்து ஓதுகின்ற பண்பாட்டுச்சின்னங்களாகும்.”[1] இயற்கையோடு இயைந்த வாழ்க்கை வாழ்ந்த மனிதன் ஒரு காலகட்டத்தில் இயற்கையைப் பார்த்தே அச்சமுறுகிறான். அவ்வச்சத்தின் பிரதிபலிப்பே தெய்வ வழிபாடு. “உலகளாவிய கடவுள் நம்பிக்கை, வழிபாடு, பூசை ஆகியவற்றை பொறுத்த அளவில் அச்சத்தின் அடிப்படையாலும், அன்பின் அடிப்படையாலும் எங்கும் தன்னிச்சையாகத் தோன்றி தழைத்திருத்தல் வேண்டும்”[2] எனக் கூறும் க.ப.அறவாணனின் கருத்தையும் ஈண்டு நோக்கத்தகும். கள ஆய்வில் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்ட தேவகோட்டை வட்டார சிறுதெய்வங்கள் குறித்த தலவரலாறும், கோயில் அமைப்பும் இவ்வியலில் விளக்கிச் சொல்லப்படுகின்றன.

### 2.1 சிறுதெய்வ - வழிபாடு

வைதீக மரபிற்கும், ஆகம விதிமுறைகளுக்கும் உட்படாத நாட்டுப்புற தெய்வங்களில் வடமொழி மந்திரமும், வேதங்களும் ஓதப்படுவது இல்லை. வழிபாட்டின் மூலம்தான் வளமான வாழ்வை அமைத்துக்கொள்ள முடியும் என நம்புகின்றனர். “நாட்டுப்புறத் தெய்வங்கள் பெருந்தெய்வங்களுடன் ஒட்டி உறவாடாதவை, வாழ்க்கை மேம்பாட்டிற்காக ஊர் மக்களால் உருவாக்கப் பட்டவை. இதிலிருந்து மனிதத்தலைவர்கள்தாம் நாட்டுப்புறத்தெய்வங்கள்.

இவர்கள் இறந்து தெய்வங்களாக்கப்பட்ட முன்னோர்களேயாவர்”[3] எனக் குறிப்பிடுகின்றனர்.

“அச்சத்தின் காரணமாகவும் அவ்வச்சத்தை நீக்குதற்குரிய நம்பிக்கைகளின் காரணமாகவும் வழிபாடு தோன்றியதனைக் காணலாம்.”[4] இவ்வழிபாட்டில் அச்சமும், அன்பும், நம்பிக்கையும் நிலைக்களனாக இருக்கிறது.

இயற்கையோடு ஒன்றி வாழ்ந்த மனிதன் முதலில் இயற்கையை வழிபட ஆரம்பிக்கிறான். இதன் மூலம் அதனை சாந்தப்படுத்தி இயற்கையின் பேரழிவில் இருந்து தம்மையும் தம்மைச் சார்ந்தாரையும் காத்துக் கொள்ளமுடியும் என்பது நம்பிக்கை ஆகும். “வாயில், திசை, மரம், மலை, காடு, நீர்த்துறை ஆகியவற்றில் தெய்வம் உறைவதாகக்கருதியது பண்டை வழக்காகும்”[5] என்கிறார்.

இயற்கை வழிபாட்டினைத் தொடர்ந்து நடுகல் வழிபாடு சிறுதெய்வ வழிபாட்டின் கூறுகளில் ஒன்றாகத் திகழ்கின்றது. இறந்தவர்களை புதைத்த இடத்தில் கல்நட்டு வைத்து வழிபாடு செய்வதனை நடுகல் வழிபாடு என்கின்றனர். “சமுதாயச் சிறப்புமிக்க இயல்புகளை கொண்டிருந்தவர்களின் இறப்பிற்குப்பின் அவர்களது நினைவாக நிறுவப்படும் கல்லே நடுகல் ஆகும்”[6] எனும் க.காந்தியின் கூற்றுப்படி இறந்தவர்கள் ஏதேனும் ஒருவகையில் சிறப்புப் பெற்றவர்களாக இருக்கக்கூடும் எனக் கருத இடமுண்டு என்றாலும் வீரத்தின் அடையாளமாக நடுகல் வழிபடப்பட்டது. பிற்காலத்தில் நட்பு, மானம், புகழ் ஆகியவற்றிற்காக உயிர் துறந்தவர்களுக்கும் நடுகல் நடப்பட்டுள்ளது.

### 2.1.1 சிறுதெய்வங்களின் வகைகள்

“பிறந்து இறக்கும் தன்மையானது, உயிர்ப்பலியிட்டு வழிபடப் பெறுவதாலும், நிலையான கோயில் அமைப்பு, முறையான பூசையும் இல்லாத காரணத்தினாலும் அமைந்த தெய்வத்தை சிறுதெய்வம் எனலாம்”[7] என்று வீ.கோபாலும், “சிறுதெய்வங்கள் சிற்றூர்களைக் குறிக்கும் நாட்டுப்புறங்களில்

அமைந்திருப்பதால் அவற்றை நாட்டுப்புறத் தெய்வங்கள் என்று கூறுவர். இவை ஆகம விதிகளுக்கு உட்படாதன, குறிப்பிட்ட காலமுறைப்படி வழிபாடுகளையும், விழாக்களையும் கொண்டிராத, பெரும்பான்மை உயிர்பலி பெறுபவை இச்சிறு தெய்வங்கள் என்னும் நாட்டுப்புறத்தெய்வங்கள்"[8] என மு.பாண்டியும் விளக்கமளிக்கின்றனர். மேற்சொன்ன கூற்றுக்களின் அடிப்படையில் சிறுதெய்வங்கள் என்பவை,

- ஊர் மக்களால் உருவாக்கப்பட்டவை.
- மனித குலத்தில் சிறப்புப்பெற்று இறந்து போனவர்கள்.
- உயிர்ப்பலி பெறும் தெய்வங்கள்.
- முறையான பூசை இல்லாத தெய்வங்கள்.
- வட்டாரத்தன்மை கொண்டவை

இவைகளை ஒருங்கே பெற்ற தெய்வங்களைச் சிறுதெய்வங்கள் எனக் கருதமுடிகிறது. தொல்காப்பியம் தொடங்கி தமிழ் இலக்கியங்களில் பலவற்றிலும் சிறுதெய்வ வழிபாட்டின் கூறுகள், எச்சங்கள் காணப்படினும் சிறுதெய்வம் என்ற சொல் முதன்முதலாக கி.பி.ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த அப்பர் தேவாரத்தில் முதன்முதலாக இச்சொல்லாட்சி இடம் பெறுகின்றது. "சென்று நாம் சிறுதெய்வம் சேரோம் அல்லோம்"[9] எனும் தேவாரப் பாடலடிகளில் இச்சொல் பயின்றுவரக் காணலாம்.

இவ்வழிபாடானது பெரும்பாலும் நாட்டுப்புறங்களிலும் சிறுபான்மை நகர்ப் புறங்களிலும் வழிபடக்காணலாம். இத்தெய்வங்களைப் பலரும் பல்வேறு வகைகளில் வகைப்படுத்தியுள்ளனர்.

"இஷ்டத்தெய்வம், வீட்டுத்தெய்வம், குடும்பத்தெய்வம், குலதெய்வம், ஊர்த்தெய்வம்"[10] என்கிறார் மைக்கேல்மாவ். "ஊர்த்தெய்வங்கள், இனத் தெய்வங்கள், குலத்தெய்வங்கள், மாலைத்தெய்வங்கள், சமாதித்தெய்வங்கள்,

துணைத்தெய்வங்கள்"[11] என வகைப்படுத்துகிறார் துளசி இராமசாமி. "ஆண் தெய்வங்கள், பெண் தெய்வங்கள், குலதெய்வங்கள், சாதித்தெய்வங்கள், ஊர்த்தெய்வங்கள்"[12] என்ற வகைமைக்குள் அடக்குகிறார் சு.சக்திவேல்.

"குடும்பத்தெய்வம், குலதெய்வம், ஊர்ப்பொது தெய்வம்"[13] என்கிறார் தே.ஞானசேகரன் "விருப்பத்தெய்வம், வீட்டுத்தெய்வம், குலதெய்வம், கிராமத் தெய்வம், ஊர்த்தெய்வம்"[14] என்னும் ஐந்து நிலைகளில் தேசிங்குச்செட்டி வகைப்படுத்தியுள்ளதை பிலவேந்திரன் குறிப்பிடுகிறார்.

நாட்டுப்புறத் தெய்வங்களை பல்வேறு வகைகளாக வகைப்படுத்தி உள்ளனர். ரைட் ரெவரெண்ட் ஹென்றி என்பவர் நாட்டுப்புறத் தெய்வங்களை "ஆண் தேவதைகள், பெண் தேவதைகள். கல்கள்"[15] என மூன்றாக வகைப்படுத்தி உள்ளனர்.

இவ்வாறாக சிறுதெய்வங்கள் என்றழைக்கப்படும் நாட்டுப்புறத் தெய்வங்களை ஒவ்வொரு நாட்டுப்புறவியல் ஆராய்ச்சியாளர்களும் ஒவ்வொரு வகையாக வகைமைப்படுத்தி உள்ளனர். இவ்வகைப்பாட்டின் வழியில் தேவகோட்டை வட்டாரச் சிறுதெய்வங்களை தொகுத்துக் காணலாம்.




நாட்டார் தெய்வங்கள் எத்தனை வகையாக இருப்பினும் அவை ஆண், பெண் என்ற வகைமைக்குள் முதலில் தன்னை நிறுத்திக் கொள்கின்றன.

அதன் பிறகு அவை குலதெய்வமாகவும், காவல் தெய்வமாகவும், வீட்டுத்தெய்வமாகவும் பரிமாணம் பெறுகின்றன.

### 2.1.2 குலதெய்வங்கள்

ஒரு குறிப்பிட்ட மூதாதையரின் மரபில் தோன்றியதன் வாயிலாக ஒருவருக்கொருவர் உறவு கொண்டுள்ள இனக்குழு ‘குலம்’ ஆகும். இரத்த உறவுடைய பங்காளிகள் ஒரு குலத்தைச் சேர்ந்தவர்களாகக் கருதப்படுவர். இவர்களுக்குள் திருமண உறவு நடைபெறாது. இவ்வாறமையும் ஒவ்வொரு குலத்திற்கு தனித்தனி தெய்வமும், கோயிலுமுண்டு. இது குலதெய்வம் என்றும், குலதெய்வக்கோயில் என்றும் குறிப்பிடப்படுகிறது. ‘குலதெய்வத்தை வணங்கினால் கோடி நன்மை உண்டு. ‘குருவை மறந்தாலும் குலதெய்வத்தை மறக்காதே’ என்ற பழமொழிகள் குலதெய்வ வழிபாட்டினையும், அதன் முக்கியத்துவத்தையும் எடுத்துக்காட்டி நிற்கின்றன. “குடும்பத்தெய்வமே நாளடைவில் குலதெய்வமாக பங்காளிகளுக்குள் வழிபடப் பெறுகிறது. குடும்பத்தெய்வமும், குலதெய்வமும் ஒன்றின் அடிப்படையில் தோன்றியவை என்னும் காரணத்தைக் கொண்டு இவற்றை குலதெய்வம் எனும் ஒரு பிரிவுக்குள் அடக்கலாம்”[16] எனும் கருத்தையும் நாம் ஒப்புநோக்கத்தகும்.

### 2.1.3 ஊர்த் தெய்வங்கள்

வீட்டுத்தெய்வம் குலதெய்வமாக பரிமாணம் பெறுவதனைப் போன்று “குலதெய்வங்கள் ஊர்த்தெய்வங்களாக வளர்ச்சியடைகிறது”[17] குறிப்பிட்ட குலத்தாரைத் தவிர்த்து அவ்வூரிலுள்ள மக்கள் அனைவரும் கும்பிடப்படும் தெய்வமாக மாற்றம் அடைகிறது. அக்கோயில் தமது ஊரினையும், ஊர் சார்ந்த மக்களையும் பாதுகாத்து நன்மை அளிக்கிறது என்ற நம்பிக்கையின் வளர்ச்சிநிலை தெய்வத்தின் வளர்ச்சி நிலையாக மாறுகிறது. இத்தெய்வங்கள் பெரும்பாலும் ஊரின் மையப்பகுதியில் அமைந்திருக்கும். இனம், சாதி, மதம்,

பொருளாதாரம் போன்றவற்றின் வேறுபாடில்லாமல் இக்கோயிலின் திருவிழாக்களில் அனைவரும் கலந்துகொள்வர். “ஒவ்வோர் ஊரிலும் பல தெய்வங்கள் காணப்பட்டாலும் ஒரு தெய்வமே அவ்வூரின் சிறப்புத் தெய்வமாக விளங்கும். அம்மனைத்தான் மிகுதியாக பல கிராமங்களில் ஊர்த்தெய்வமாக வழிபடுகின்றனர்.”[18] பழங்காலத்தில் இருந்தே பெண் தெய்வ வழிபாடு உலகின் பல இன மக்களிடையேயும் பரவலாக இருந்து வந்த ஒன்றாகும். பெண் தெய்வங்களை தாய்த்தெய்வங்கள் என்று சமூகமும், இலக்கியங்களும் கட்டமைத்து உள்ளன.

### 2.1.4 காவல் தெய்வங்கள்

மக்களையும், அவர்கள் வாழும் பகுதியினையும் கெட்ட ஆவிகள் மற்றும் பகைவர்களிடமிருந்து தெய்வங்கள் காத்து அருள்வதாக நம்புகின்றனர். இத்தெய்வங்களைக் காவல் தெய்வங்கள் என்ற பெயரில் அழைக்கின்றனர். இவை குலதெய்வங்களாகவும், ஊர்த்தெய்வங்களாகவும் காணப்படுகின்றன. கடலுக்குக் காவல்தெய்வமாக இருந்த மணிமேகலா தெய்வத்தினை மணிமேகலை காப்பியம் எடுத்துக்காட்டி இருக்கிறது. சம்பாபதி எனும் காவல் தெய்வத்தையும் மணிமேகலை காப்பியத்தில் காணமுடிகிறது. மதுராபதி தெய்வம் மதுரையைக் காவல்காத்ததாக சிலப்பதிகாரம் பதிவு செய்துள்ளது. இக்கோயில்கள் சாலைகளின் ஓரங்களிலும், ஊர்ப்புறத்திலும், நீர்நிலைகளின் கரையோரங்களிலும் அமர்ந்து இருந்து காவல் காப்பதனை காணமுடிகிறது. “நாட்டுப்புறங்கள் தோறும் காவல் தெய்வமென்ற பெயரில் சிறிய அல்லது பெரிய கோயில் இருக்கக்காணலாம்”[19] என்பர். இத்தெய்வங்கள் ஊருக்குத் தீங்கு செய்வாரையும், ஊருக்குள் வரும் வேண்டாதவர்களையும் தடுத்து நிறுத்துவதாகவும், அவர்களைத் தண்டிப்பதாகவும் மக்கள் நம்புகின்றனர்.

பழங்காலத்தில் பெண் தெய்வங்கள் காவல்தெய்வமாக இருந்ததாக இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. இவற்றைக் கிராம தேவதைகள் என்றும்

கூறுவர். காலப்போக்கில் ஐயனார், கருப்பர், முனீஸ்வரர் போன்ற ஆண் தெய்வங்கள் காவல்தெய்வங்களாக மாற்றம் பெற்று இருக்கின்றது. இது ஆணாதிக்கச் சமூகத்தின் குறியீடுகளாக எடுத்துக் கொள்ளலாம்.

**2.1.5 பிடிமண் தெய்வங்கள்**

மூலதெய்வத்திலிருந்து எடுக்கப்பட்ட மண்; பிடிமண் தெய்வமாகக் கருதப்பெறுகின்றது. ஒரு தெய்வப் பெயரில் வெவ்வேறு இடங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட தெய்வங்கள் இருக்கின்றன என்பதனைக் கள ஆய்வின் வழி காண முடிகின்றது. இப்பிடிமண் தெய்வங்கள் உருவாவதற்கு மூலக்காரணம் மனிதனின் இடப்பெயர்ச்சியாகும். மனிதனின் வாழ்வியல் சூழல்களை மையமிட்டதாக அமைகிறது. அதாவது பொருளீட்டல், பணி நிமித்தம், இன்னபிறசூழல்களின் நிமித்தமாகப் புலம்பெயர்ந்து வாழவேண்டிய கட்டாயத்திற்கு ஆளாக்கப்படுகிறான். இவ்வாறு செல்வோர் தம் குலதெய்வத்தை அல்லது விருப்ப தெய்வத்தை அடிக்கடி வந்து வணங்கிச்செல்வது இயலாத செயலாகும். இதனால் தாம் இருக்கும் இடத்திற்கு தம் தெய்வங்களை இடப்பெயர்ச்சி செய்கின்றனர்.

பிடிமண் எடுத்து தெய்வங்களை இடப்பெயர்ச்சி செய்யும் பொழுது அத்தெய்வங்களின் அனுமதி கேட்பது வழக்கத்திலுள்ளது. உத்தரவு கொடுத்தால் பிடிமண் எடுக்கப்படுகிறது. இல்லையெனில் எடுக்கப்படுவதில்லை. "புலம் பெயர்ந்த நிலையில் தனிக்குடும்பம், பங்காளிகள், ஊர்மக்கள் போன்றோர் தாங்கள் முன்பிருந்த இடத்திலிருந்து வழிபட்ட தெய்வத்தை தாங்கள் வசிப்பிடத்திற்கு கொண்டு வருவது குறித்து தங்களுக்குள் உடன்படிக்கை செய்துகொள்வர். தெய்வத்தை இடப்பெயர்ச்சி செய்ய மக்கள் விரும்பினாலும் தெய்வம் உடன்படவில்லையாயின் தெய்வ குற்றத்திற்கு ஆட்படுவோம் என்னும் அச்சத்தால் இடப்பெயர்ச்சி செய்ய தெய்வத்திடம் உத்தரவு கேட்பர். சாமியும் அருள் வந்து ஆடி தெய்வத்தை இடமாற்ற இசைவு

கொடுக்கும்."[20] இவ்வாறாக குலதெய்வம், ஊர்த்தெய்வம், காவல்தெய்வம், பிடிமண் தெய்வங்கள் என்னும் வகைகளால் வகைமைப்படுத்த முடிகிறது.

**தேவகோட்டை வட்டார ஆய்விற்குட்படுத்தப்பட்ட பெண் தெய்வங்கள் குறித்த வகைப்பாடு**

| வ.எண் | கோயிலின் பெயர் | ஊர் | வகைப்பாடு |
|---|---|---|---|
| 1. | முத்துமாரியம்மன் | அருணகிரிப்பட்டணம் | ஊர்த்தெய்வம் |
| 2. | ரேணுகாதேவி முத்துமாரியம்மன் | நித்திய கல்யாணிபுரம் | ஊர்த்தெய்வம் |
| 3. | சமயபுரத்து மாரியம்மன் | தேவகோட்டை வாடியார்வீதி | பிடிமண்தெய்வம் |
| 4. | மாரியம்மன் | பொன்னத்தி | பிடிமண்தெய்வம் |
| 5. | காளியம்மன் | வாழ்கின்றமாணிக்கம் | காவல்தெய்வம் |
| 6. | கள்ளாம்பிரம்புக் காளியம்மன் | தேவகோட்டை அழகாபுரிநகர் | காவல்தெய்வம் |
| 7. | மலையாளக்காளியம்மன் | பரமக்குடி | காவல்தெய்வம் |
| 8. | பிள்ளைமடத்துக் காளியம்மன் | மோயன்வயல் | காவல்தெய்வம் |
| 9. | மடக்கரைக்காளியம்மன் | தேவகோட்டை அண்ணாநகர் | காவல்தெய்வம் |
| 10. | செட்டியாஊருணிக் காளியம்மன் | நாச்சாங்குளம் | காவல்தெய்வம் |
| 11. | கள்ளாம்பிரம்புக் காளியம்மன் | தேவகோட்டை அண்ணாநகர் | பிடிமண்தெய்வம் |
| 12. | சமுத்திரக்காளி | கோட்டூர் | குலதெய்வம் |
| 13. | மூக்கரைக்காளியம்மன் | வெங்களூர் | குலதெய்வம் |
| 14. | தட்டாரக்காளியம்மன் | தேரளப்பூர் | குலதெய்வம் |

| 15. | மூக்கரைக்காளியம்மன் | இளக்கினிவயல் | குலதெய்வம் |
|---|---|---|---|
| 16. | ஆற்றங்கரை காளியம்மன் | தச்சவயல் | ஊர்த்தெய்வம் |
| 17. | கூத்தாடி முத்துப்பெரியநாயகியம்மன் | தாழையூர் | ஊர்த்தெய்வம் |
| 18. | காடேரியம்மன் | மஞ்சனி | காவல்தெய்வம் |
| 19. | செல்லியம்மன் | கல்லங்குடி | ஊர்த்தெய்வம் |
| 20. | மஞ்சனப்பேச்சி | இறகுசேரி | ஊர்த்தெய்வம் |
| 21. | நாகாத்தம்மன் (இராஜநாகேஸ்வரி அம்மன்) | தேவகோட்டை இராம்நகர் | காவல்தெய்வம் |
| 22. | ஆற்றங்கரை நாச்சியம்மன் | ஈகரை | ஊர்த்தெய்வம் |

**2.2 பெண் தெய்வங்கள்**

சிறுதெய்வ வழிபாட்டில் ஆண் தெய்வங்களைவிட பெண் தெய்வங்கள் மிகுதியாகும். ஏனெனில் பெண் என்பவள் வளமையின் குறியீடாகவும், வளர்ச்சியின் அடையாளமாகவும் சமூகத்தில் அங்கீகரிக்கப்பட்டனர். பெண்தெய்வங்களை வணங்கினால் ஊரும், சமூகமும் வளர்ச்சியடையும், விருத்திபெறும் என்று மக்களால் காலம் காலமாக நம்பப்பட்டு வருகிறது. அவ்வடிப்படையில் பெண்தெய்வங்கள் இல்லாத சிற்றூர்களைக் காண்பதரிதாகும். ஆய்விற்கு உட்படுத்தப்பட்ட பெண் தெய்வங்கள் அட்டவணைப்படுத்தப்பட்டுள்ளன.

**2.3 மாரியம்மன் பொதுவரலாறு**

ஒவ்வொரு கோயிலுக்கும் வரலாறு உள்ளது. அவ்வரலாறு பற்றிக் கூறுவது தலவரலாறு ஆகும். இதில் கோயில் வரலாறு மட்டுமல்லாது அப்பகுதியைப் பற்றிய வரலாறும் நமக்குக் கிடைக்கிறது என்கிறார் அறிவுநம்பி. எனவே கோயில் தோற்றம் பெற்ற வரலாறே தலவரலாறு என்பது தெளிவாகிறது.

ஒரு நாட்டின் முன்னேற்றம் விவசாயத்தில் அடங்கியிருக்கிறது. விவசாயத்தின் முதுகெலும்பாக விளங்குவது கிராமங்கள் ஆகும். இத்தொழிலுக்கு அடிப்படையான மழையைத் தரும் தெய்வமாக மாரியை மக்கள் வணங்குகின்றனர். மற்ற தெய்வங்கள் இல்லாத கிராமங்களில் கூட மாரியம்மன் தெய்வமாக வழிபடப்படுகின்றன. இதனை தேவகோட்டை வட்டாரத்தில் காணமுடிகிறது. அனைத்துக் கிராமங்களிலும் மாரியம்மன் வழிபடு தெய்வமாக இருக்கிறார்.

**"நீர் இன்றி அமையாது உலகுஎனின் யார்யார்க்கும்**
**வான்நின்று அமையாது ஒழுக்கு" (குறள்.20)**

இக்குறளின் மூலம் நீரின் முக்கியத்துவம் புலனாகிறது. நீருக்கு அடிப்படை மழை. மழைக்குரிய தெய்வம் மாரி என்று மக்களால் நம்பப்படுகிறது. மாரி என்றால் மழை என்று பொருள் உண்டு என்பதனையும் கருத்தில் கொள்ளத்தகும்.

இத்தெய்வம் ஊர்த்தெய்வமாகவும் "முத்து மாரியம்மன் சிற்றூர் தோறும் மக்களைக்காக்கும் காவல்தெய்வமாகவும் அமைக்கப்பெற்றுள்ளது".[21] "கி.பி. இரண்டாம் நூற்றாண்டு முதல் தமிழ்நாட்டில் மாரியம்மன் வழிபாடு இருந்தது என்பதன் மூலம் பண்டைக்காலம் தொட்டு இவ்வழிபாடு இருந்துள்ளது என்பதனை அறியமுடிகிறது".[22] இத்தெய்வம் கிராமங்களில் மாரியம்மன் என்றும், முத்துமாரி என்றும் அழைக்கப்பட்டு வருகின்றன என்றாலும் "மாரி, மகமாயி, மகாமாரி, சீதலாதேவி, கங்கம்மா, முத்தம்மா, முத்தாலம்மா என்று பல காரணப்பெயர்கள் உள்ளன"[23]

**"ஆருகடன் நின்றாலும் மாரிகடன் ஆகாது**
**மாரிகடன் தீர்த்தவருக்கு மனக்கவலை தீருமம்மா"[24]**

நம்பிக்கையின் விளைவாக நேர்த்திக்கடன்களை முறையாக செலுத்தினால் கவலைகள் தீரும் என்பது மக்களின் நம்பிக்கை.

### 2.3.1 முத்துமாரியம்மன்

தேவகோட்டையின் விரிவாக்கப் பகுதியான அருணகிரிப்பட்டிணத்தில் முத்துமாரியம்மன் திருக்கோயில் அமைக்கப்பட்டுள்ளது. தேவகோட்டை வட்டாரத்தைச் சுற்றியுள்ள முத்துமாரியம்மன் திருக்கோயில்களில் இத்தலம் சிறப்புப்பெற்றதாகும்.

**தலவரலாறு**

பல நூற்றாண்டு காலமாக சிவகங்கை மாவட்டத்திலுள்ள தாயமங்கலத்தில் அருள்பாலித்துவரும் தாயமங்கலம் முத்துமாரியம்மன் ஆகும். இக்கோயிலுக்குத் தேவகோட்டை பகுதியில் இருந்து பல ஆண்டுகளாக அம்மனை வழிபட சென்று வந்துள்ளனர். தொலைவின் காரணமாகவும், அடிக்கடி சென்றுவர முடியாத காரணத்தினாலும் தாயமங்கலத்தில் பிடிமண் எடுத்து வரப்பட்டுத் தேவகோட்டை அருணகிரிப்பட்டிணத்தில் இடம் தேர்வு செய்து சிறிய பீடம் அமைத்து 'ஆதிமுத்துமாரியம்மன்' எனப்பெயரிட்டு வணங்கி வந்துள்ளனர்.

இக்கோயில் வழிபாட்டில் குறிப்பிட்ட சாதியினரை அனுமதிக்க வில்லை எனக்கூறப்படுகிறது. இதனால் தங்களுக்கென தனிக்கோயிலை கட்டத் தீர்மானிக்கின்றனர். இதில் இல்லத்துப் பிள்ளைமாரும், அகமுடையார் என்ற சேர்வை இனத்தவரும் இதில் முக்கியப் பங்காற்றியுள்ளனர். இவர்களுக்கு மட்டும் உரிமை உடைய இம்முத்துமாரியம்மன், ஆதி முத்துமாரியம்மன் கோயிலுக்கு அருகில் உருவாக்கப்பட்டுள்ளது. மிகப் பரந்து விரிந்த விசாலமான இடத்தில் உருவாக்கப்பட்டுள்ளது. அனைத்துச் சாதியினரும் சென்று வழிபடப்படும் தலமாக இது இருப்பினும் குறிப்பிட்ட இரண்டு சமூகத்திற்கு மட்டும் உரிமை உடையதாகும். இவர்களால் நியமனம் செய்யப்பட்ட ஆறுமுகம் என்ற பண்டாரம் இக்கோயிலுக்கான வழிபாடு செய்து வருகிறார்.

**கோயில் அமைப்பு**

மூலக்கோபுரத்துடன் கூடிய கருவறையில் அம்மன் வீற்றிருக்கிறாள். முன்மண்டபம், மகா மண்டபத்துடன் அமையப்பெற்றுள்ளது. அம்மனுக்கு எதிரில் நந்தி அமைக்கப்பட்டுள்ளது. அம்மனின் வலதுபுறம் விநாயகருக்கும், இடதுபுறம் முருகனுக்கும் தனித்தனி கருவறை அமைக்கப்பட்டுள்ளது. நான்கு கரங்களுடன், வலதுகாலை மடக்கி, இடதுகாலை தொங்கவிட்டு அம்மன் அமர்ந்த நிலையில் குழந்தை முகத்துடன் அமர்ந்துள்ளார். நான்கு கரங்களில் சூலம், உடுக்கை, குங்குமச்சிமிழ், விசில் போன்றவை வைத்துள்ளார். ஆலயத்தின் தலவிருட்சமாக வில்வமரமும், வேப்பமரமும் உள்ளன. சுற்றிலும் சுற்றுச்சுவர் கட்டப்பட்டுள்ளது. கொடிமரமில்லை. 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை குடமுழுக்கு செய்யப்படுகிறது. தினமும் இரண்டு கால வழிபாடு அம்மனுக்கு நிகழ்த்தப்பெறுகின்றன.

### 2.3.2 ரேணுகாதேவி முத்துமாரியம்மன்

தேவகோட்டை நகரின் விரிவாக்கப் பகுதியான நித்தியகல்யாணிபுரத்தில் அமையப்பெற்றுள்ளது ரேணுகாதேவி முத்துமாரியம்மன் திருக்கோயில்.

**தலவரலாறு**

“இக்கோயில் உருவாக்கம் பெற்று கிட்டத்தட்ட 150 ஆண்டுகள் ஆகியிருக்கும் என்று இப்பகுதி மக்கள் கூறுகின்றனர்.”[25] பள்ளியில் படிக்கும் சிறுவர்கள் மாலை நேரங்களில் காலியாகக் கிடந்த அப்பகுதியில் செங்கல் வைத்து சாமிகும்பிட்டு விளையாடியுள்ளனர். இவ்விளையாட்டு வருடக்கணக்கில் நடைபெற்று வந்திருக்கிறது, அதன்பிறகு அச்சிறுவர்கள் விளையாடிய இடத்தில் மாரியம்மன் கோயில் கட்டிவிடுவோம் என அப்பகுதி மக்கள் முடிவு செய்துள்ளனர். அதன்படி செங்கல் வைத்து வழிபாடு நிகழ்த்திய இடத்தில் இருந்து நூறு அடி தூரம் தள்ளி அப்பகுதி மக்களில் ஒருவரான “சி.டி.ஏ. இராமநாதமுதலியார் என்பவரின் முயற்சியால் அம்மன் சிலை பிரதிட்டை

செய்யப்பட்டு மூன்று சாலைகள் சந்திக்கும் சந்திப்பில் வைத்து வழிபடு தெய்வமாக்கியுள்ளார்."[26]

இதற்கு ரேணுகாதேவி முத்துமாரியம்மன் என்ற பெயரினை முதலியார் வைத்ததாகக் கூறுகின்றனர். முத்துமாரியம்மனுக்கு விளக்கம் அளிக்கும் கலைக்களஞ்சியம் அவளது இயற்பெயர் ரேணுகாதேவி என்கிறது. "சமதக்கினி மனைவி ரேணுகை நீர் கொண்டுவரச் சென்றபோது நீரில் கந்தருவன் ஒருவனுடைய நிழலில் மயங்கி சமதக்கினியால் வெறுக்கப்பட்டு, மகன் பரசுராமனால் தலைவேறு, உடல்வேறாக துண்டிக்கப்பட்டதால், பரசுராமன் தன் தந்தையை வேண்டியதால் இவளை மீண்டும் உயிருடன் எழுப்பினான். இவள் தலை வேற்றுடலில் பொருத்தப்பட்டதால் நிலைகெட்ட இவளை கிராமங்களில் சென்று தெய்வமாகி அவர்களுக்கு உண்டான நோயை போக்கி வழிபாடு பெறுக என சமதக்கினி ஏவியதாகக் கூறுவர்"[27] என்று விளக்கம் தருகிறது. இச்செய்தியின் அடிப்படையில் ரேணுகாதேவி; மாரியம்மன் என்னும் வடிவம் தாங்கியதாக அமையப்பெற்றிருக்கிறாள் எனக் கருதமுடிகிறது. அனைத்து இடங்களில் முத்துமாரியம்மன் எனும் பெயர் பெற்றிருக்க நித்தியகல்யாணிபுரத்தில் அமையப் பெற்றுள்ள இத்தெய்வம் ரேணுகாதேவி முத்துமாரியம்மன் எனப்பெயர் பெற்றிருக்க மேற்சொன்ன செய்தி காரணமாக இருக்கலாம்.

**கோயில் அமைப்பு**

கருவறையுடன் கூடிய சிறிய கோபுரத்துடன் இக்கோயில் அமையப் பெற்றுள்ளது. முன்மண்டபம், சுற்றுச்சுவர், பரிவாரத் தெய்வங்களும் இக்கோயிலில் இல்லை.

**2.3.3 சமயபுரத்துமாரியம்மன்**

தேவகோட்டை நகரின் மையப்பகுதியான வாடியார் வீதியில் இக்கோயில் அமையப்பெற்றுள்ளது.

**தலவரலாறு**

திருச்சியிலிருந்து சென்னை செல்லும் சாலையிலுள்ளது சமயபுரம் மாரியம்மன். இங்கிருந்து பிடிமண் எடுத்துவந்து கோயில் கட்டியுள்ளனர். தேவகோட்டையைச் சேர்ந்த "வாழவந்தான் ஆசாரி என்பவர் பல ஆண்டுகளாக திருச்சி அருகே உள்ள சமயபுரம் மாரியம்மன் கோயிலுக்கு சென்று வருவதனை வழக்கமாகக் கொண்டுள்ளார்."[28] அம்மனின் மீதுள்ள அளவற்ற பக்தியின் காரணமாக அடிக்கடி சென்றுவர முடியாததாலும், அம்பாளின் அருள் தேவகோட்டை மக்களுக்கும் கிடைக்க வேண்டும் என்ற காரணத்தினாலும் தேவகோட்டையில் சமயபுரத்தாள் கோயில் கட்டிவிடவேண்டும் என்ற வேட்கையோடு இருந்துள்ளார்.

அளவற்ற பக்தியும், அம்மனின் அருளும் அவர்பெற்றிருந்ததனால் சமயபுரம் கோயில் நிர்வாகிகளிடம் ஒப்புதல் பெற்று மாரியம்மன் திருத்தலத்தில் பிடிமண் எடுத்து வந்து தேவகோட்டையில் தற்பொழுது கோயில் கொண்டுள்ள இடத்தில் எடுத்து வந்த பிடிமண்ணை குறிப்பிட்ட இடத்தில் வைத்து வழிபாடு செய்துள்ளனர். ஆரம்பத்தில் ஒரு ஓட்டுக்குடிலில் மேடை போன்ற பீடம் மட்டும் அமைத்து வழிபட்டு வந்துள்ளனர்.

2004-ஆம் ஆண்டு காஞ்சி சங்கராச்சாரியார் தேவகோட்டை சமயபுர மாரியம்மன் கோயிலுக்கு வழிபட வந்துள்ளார். பூசை செய்துவந்த வாழவந்தான் ஆசாரியின் சகோதரர் லெட்சுமணன் ஆசாரியிடம் அம்மனுக்குச் சிலைவைக்கச் சொல்லி உத்தரவிட்டுச் சென்றாராம். காஞ்சிப்பெரியவரின் உத்தரவிற்குப் பிறகு தேவகோட்டை சமயபுர மாரியம்மனும் சிலையாக வடிக்கப்பட்டுள்ளது.

காஞ்சிப்பெரியவரின் மேற்பார்வையில் காஞ்சிபுரத்தில் சிலை செய்ய பணிகள் மேற்கொள்ளப்பட்டன. செய்து முடித்தபின் சங்கராச்சாரியார் சிலையைத் தொட்டுக் கொடுக்க லெட்சுமணன் ஆசாரி உள்ளிட்டோர்

சிலையைப் பெற்றுக்கொண்டு 2004-ஆம் ஆண்டு தைமாதம் 14-ஆம் நாள் பிடிமண் வைத்து வணங்கிய இடத்தில் அம்பாள் சிலை நிறுவப்பட்டது. இது பிடிமண் வகைத் தெய்வமாகும்.

**கோயில் அமைப்பு**

அம்மன் எட்டுத் திருக்கரங்களுடன் கருவறையில் வீற்றிருக்க, சிறிய கோபுரத்துடன் கருவறை கட்டப்பட்டுள்ளது. அம்பாளுக்கு நேர் எதிரில் பலிபீடம் அமைக்கப்பட்டுள்ளது. சிறிய முன் மண்டபம் காணப்படுகிறது. கருவறையின் வலதுபுறத்தில் விநாயகரும், இடப்புறத்தில் முருகனும் காணப்படுகின்றனர். சுற்றுச்சுவர், கொடிமரம், மூலகோபுரம் இக்கோயிலில் காணப்படவில்லை.

**2.3.4 பொன்னத்தி மாரியம்மன்**

தேவகோட்டையில் இருந்து 15 கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது பொன்னத்தி. இங்கு அருள்பாலித்து வருவது பொன்னத்தி மாரியம்மன் திருக்கோயிலாகும்.

**தலவரலாறு**

இத்திருக்கோயில் நூறாண்டுகளுக்கு மேலாக பழமை வாய்ந்த கோயிலாகும். இவ்வூரின் ஊர்த்தெய்வமாக மாரியம்மன் வழிபாடு நடைபெற்று வருகிறது. இக்கோயில் பிடிமண் வகைகளில் வகைமைப்படுத்தப்படுகிறது. தேவகோட்டைக்கு அருகிலுள்ள மஞ்சனியில் முத்துமாரியம்மன் கோயில் பிடிமண் எடுத்துவரப்பட்டு பீடம் அமைத்து வழிபடப்பட்டு வருகிறது. பொன்னத்திக்கும், மஞ்சனிக்கும் திருமண உறவுகள் பழங்காலத்தொட்டு இருந்து வருகிறது. இதன் காரணமாக மஞ்சனியிலிருந்து பொன்னத்திக்குக் குடியேற்றம் நடைபெற்றிருக்கிறது. இதனால் பிடிமண் எடுத்து வழிபாடு செய்துள்ளனர்.

**கோயில் அமைப்பு**

மூலகோபுரம் இல்லாமல் கூம்பு வடிவிலான அமைப்பில் மேல்கூரை அமைக்கப்பட்டுள்ளது. முன் மண்டபம் கட்டப்பட்டுள்ளது. சிலை எதுவும்

இல்லை. பீடம் அமைக்கப்பட்டுள்ளது. பீடத்திற்கு அனைத்து வழிபாடுகளும் நடைபெறுகிறது. திருவிழாக்காலங்களில் மட்டும் சிலை வடிவில் அம்மன் அலங்காரம் செய்து வழிபாடு நிகழ்த்தப் பெறுகின்றது. கோயில் வலதுபுறம் சோனையா காவல் காத்துக் கொண்டிருக்கிறார். இதற்கு சிலையில்லாமல் சூலாயுதம் மட்டும் ஊன்றப்பட்டுள்ளது.

**2.4 காளியம்மன் பொதுவரலாறு**

கொற்றவை என்னும் பெண் தெய்வத்தினை தொல்காப்பியம், சங்க இலக்கியம் பதிவு செய்துள்ளது. இதன் வளர்ச்சி மற்றும் பிற்கால படிநிலைகள் காளியம்மன் போன்ற தெய்வங்களாக இருக்கக்கூடும் எனக் கருத இடமுண்டு. "கொற்றவை வழிபாட்டின் மரபாகக் கருதப்படும் காளி, பத்திரகாளி, பிடாரியம்மன் என்று வேறு பெயர்களிலும் அழைக்கப்படுகின்றன"[29] என்பது அறிவுநம்பியின் கருத்து இதனை உறுதிசெய்கிறது. பெண் தெய்வ வழிபாட்டில் தாய்த்தெய்வ வழிபாடாக கொற்றவை வழிபாடு விளங்குகின்றது. "பழந்தமிழர்களின் தாய்த்தெய்வம் கொற்றவை என்பது தெளிவாகத் தெரிகின்றது."[30]

"சங்ககாலத்தும், சங்கம் மருவிய காலத்தும் தமிழரால் வழிபடப்பட்ட மிக முக்கியமான பெண்தெய்வம் கொற்றவை என்பதை குறிப்பிட்டாக வேண்டும்"[31] பண்டைக்கால முதன்மை தெய்வமாக கொற்றவை வழிபாடு உள்ளது.

> **"மறங்கடைக் கூட்டிய துடிநிலை சிறந்த**
> **கொற்றவை நிலையும் அத்திணைப்புறனே" (தொல்.பொருள்.62)**

எனக் கொற்றவை குறித்துத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

இக்கொற்றவை வழிபாடு சமய எழுச்சிக் காலத்தில் துர்க்கையாகவும் (சமயம் தழுவிய வழிபாடு), நாட்டார் வழிபாட்டில் காளியாகவும் வழிபடப்பட்டு வந்துள்ளன. "வெற்றித்தெய்வம் எனப் பழந்தமிழர்களால் வழிபடப்பட்ட

கொற்றவை, சமயங்களின்' எழுச்சி மற்றும் புராணங்களின் ஒருங்கிணைப்புக் கதைகளால் துர்க்கையாக மாற்றம் பெற்றாள்."[32] சமய நிலையில் கொற்றவை துர்க்கையாக பரிமாணம் செய்துள்ளனர். இது சமய தெய்வமாக இன்றும் பெருந்தெய்வ நிலையில் காணப்படுகிறது.

நாட்டுப்புற வழிபாட்டு நிலையில் "இந்திய மக்கள் காளி என்ற பொதுப்பெயர் கொண்ட அறுபத்து நான்கு உருவங்கள் கொண்ட துர்க்கையை வழிபடுகின்றனர் என்று பி.ஆ. சீனிவாசன் கூறும் கருத்தால் துர்க்கையும் காளியும் ஒன்றென்று கூறுவதற்கு சான்றாக உள்ளது என்கிறார் நாட்டுப்புற ஆய்வாளர் கருப்பாயி."[33]

தாய்த்தெய்வ வழிபாட்டு நிலையில் கீழ்க்காணும் கூறுகளை ஆராயுமிடத்து கொற்றவையின் வழித்தோன்றல்களாக பிற்கால பெண்தெய்வ வழிபாடு தோன்றவும், காளி தோற்றம்பெறவும் காரணமாக இருந்துள்ளது. இவ்வரலாற்றுப் படிநிலைகளைக் கீழ்கண்ட அட்டவணைத் தெளிவுபடுத்துகின்றன.

| **தெய்வங்கள்** | **கொற்றவை** | **காளி** | **துர்க்கை** |
|---|---|---|---|
| தோற்றம் | தொல்காப்பியம் சங்க இலக்கியம் கொற்றவையை முன்னிலைப் படுத்துகின்றன | நாட்டார் வழிபாட்டில் கொற்றவையின் உருமாற்றம் | சமயங்களின் வழிபாடு தெய்வமாகக் கொற்றவையை மாற்றியுள்ளனர் |
| உயிர்ப்பலி | உயிர்ப்பலி உண்டு | உயிர்ப்பலி உண்டு | உயிர்ப்பலி இல்லை |
| உருவநிலை | அச்சம் மிகுந்த உருவம் | அச்சம் மிகுந்த உருவம் | சாந்தமான உருவநிலை |
| தெய்வநிலை | வெற்றிக்குரிய தெய்வம் | காவல் தெய்வம் | அருள்பாலிக்கும் தெய்வம் |

### 2.4.1 காளியம்மன்

தேவகோட்டை - கண்டதேவி சாலையில் ‘வாழ்கின்ற மாணிக்கம்’ என்னுமிடத்தில் காளியம்மன் அமையப்பெற்றுள்ளது.

**தலவரலாறு**

சிற்றூர்களில் மாரியம்மன் வழிபாடு போன்று காளியம்மனும் முக்கியத்துவம் வாய்ந்த தெய்வமாக போற்றப்படுகிறாள். உருவ அமைப்புகளுக்கு ஏற்ப பல்வேறு பெயர்களால் அழைக்கப்படுகிறாள்.

காவலுக்கு உரியவள் என்பதாலும், அச்சத்தின் காரணமாகவும் இவ்வாறு அழைக்கப்பட்டிருக்கலாம். “மூன்று தலைமுறைகளுக்கு முன்பாக கண்டதேவியைச் சேர்ந்த ஆண்டியப்ப நாடார் என்பவர் ‘வாழ்கின்ற மாணிக்கம்’ எனும் பகுதியில் சாலையின் ஓரத்தில் பீடம் அமைத்து, கல்நட்டு வழிபட்டு வந்துள்ளார்.”[34] தலைமுறை தலைமுறைகளாக வணங்கி வந்துள்ளனர். மதுரைவீரன் நாடார், காளிமுத்து நாடார் இருவரும் சிறிய கோபுரத்துடன் கூடிய சிலையும் செய்து வைத்துள்ளனர்.

இக்கோயிலின் நிருவாகம் மற்றும் வழிபாடு செய்வது ஆண்டியப்ப நாடாரின் வாரிசுகளான செல்வராசு, காளைராசன் ஆகியோரால் வழிநடத்தப் பெறுகின்றன.

**கோயில் அமைப்பு**

மூலகோபுரம், கருவறை, அர்த்தமண்டபம், முன்மண்டபம் ஆகியன உள்ளடக்கியதாக இக்கோயில் அமைந்துள்ளது. நான்கு கைகளுடன் அமர்ந்த கோலத்தில் அம்மன் கிழக்குப் பார்த்திருக்கிறார். ஒரு கால் மடித்தும், மறுகால் தொங்கவிடப்பட்டும் அமைந்துள்ளது. கருவறையில் காளிமட்டும் வீற்றிருக்கிறாள். பலவிதமான வண்ணங்களால் தீட்டப்பட்ட ஓவியங்கள் சிறப்புச் செய்கின்றன.

கருவறைக்கு இடதுபுறத்தில் முனீஸ்வரரும், வலது பக்கத்தில் சின்னக் கருப்பர், பெரிய கருப்பரும் உள்ளனர். சிலைகள் எதுவும் இல்லாமல் சூலாயுதம் மட்டும் ஊன்றப்பட்டுள்ளது. மாரியப்பபிள்ளை இக்கோயிலுக்குத் தானமாகக் கொடுத்த காளைமாடு இறந்துபோக தேவகோட்டையிலுள்ள சிற்பியிடம் சிற்பம் செதுக்கப்பட்டு அம்பாளின் இடதுபுறம் நூறுமீட்டர் தொலைவில் தத்ரூபமாக உயிருள்ள மாடு படுத்துக்கிடப்பதைப் போன்ற அமைப்புடன் அமைக்கப்பட்டுள்ளது. அம்மனுக்கு வழிபாடு செய்யும் ஒவ்வொரு முறையும் காளைக்கும் வழிபாடு நடைபெறுகிறது.

ஆலயத்தைச் சுற்றி காஞ்சரா மரம், பூவரச மரம், வேப்பமரம், அரசமரம் ஆகியவை காணப்படுகின்றன. காஞ்சரா மரம் காளிக்கு உகந்ததாக கூறுகிறார்கள். இம்மரத்தின் குச்சி, இலை, பழம் ஆகியன அனைத்தும் மருத்துவக் குணம் உடையவை. நோய் நீக்குபவை. அதுபோல அம்பாளும் நோய் நீக்கி பக்தர்களுக்கு ஆரோக்கியமான வாழ்வினை அருள்கின்றாள் என்று மக்களால் நம்பப்படுகிறது.

### 2.4.2 கள்ளாம்பிரம்புக் காளியம்மன்

தேவகோட்டை அழகாபுரி நகரில் ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரியை அடுத்து இக்கோயில் அமைந்துள்ளது.

**தலவரலாறு**

சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பாக "பிச்சை என்பவர் சிறிய அளவிலான ஒரு கல்லினை வெட்டவெளியான பொட்டலில் பாதியளவு புதைக்கப்பட்டு மீதி மேல் தெரியுமாறு வைத்து வழிபட்ட அவர் தற்பொழுது எங்கு இருக்கிறார் என்பது தெரியவில்லை."[35] அதன் எதிரில் ஒரு ஆலமரக் கன்றையும் நட்டுவைத்து அது பெரிய ஆலமரமாக வளர்ந்துள்ளது. முப்பது வருடங்களுக்கு முன்பு எழுவங்கோட்டையைச் சேர்ந்த துரைராஜ்

இக்கோயிலுக்கு கோபுரத்துடன் கூடிய கட்டிடம் கட்ட மனதில் தோன்றியிருக்கிறது. அதனால் கட்டிடம் கட்டி முடித்துள்ளார்.

**கோயில் அமைப்பு**

இத்திருக்கோயில் சுற்றுச்சுவருடன் மூலகோபுரம் மட்டும் தாங்கிய கருவறையுடன் அமைந்துள்ளது. முன்மண்டபம், பலிபீடம் அமைக்கப்பட்டுள்ளது. கருவறையில் காளியம்மன் சாந்த வடிவமாக காட்சி அளிக்கிறார். பரிவாரத் தெய்வங்களாக அம்பாளின் கருவறைக்கு இடதுபுறம் சோனையும், கருப்பரும் இருக்கின்றனர். இவர்களுக்கு உருவ அமைப்புகள் இல்லாமல் சூலாயுதம் மட்டும் நடப்பட்டுள்ளது.

**2.4.3 மலையாளக் காளியம்மன்**

தேவகோட்டையிலிருந்து சருகனி செல்லும் வழியில் பத்து கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. பரமக்குடி என்னும் சிற்றூர். பாவனக்கோட்டைக்கு அருகில் அமைந்துள்ள இக்கிராமத்தில் அருள்பாலித்து வருகிறது இத்தெய்வம்.

**தலவரலாறு**

மலையாளக் காளியம்மன் இத்தெய்வம் கேரளாவிலிருந்து கொண்டு வந்ததால் காளியம்மன் என்னும் பெயருடன் மலையாளம் எனும் அடைமொழி கொடுத்து அழைத்து வருகின்றனர். இது பல தலைமுறைகளை கடந்துவிட்டதால் யாரால் அங்கிருந்து கொண்டு வரப்பட்டது என்பது தெரியவில்லை. மண்ணால் செய்யப்பட்ட கலயத்தில் (பச்சைமண் கலயம்) “காளியை பிடித்து அடைத்து கேரளாவில் இருந்து கொண்டு வந்தார்கள். வரும் வழியில் வலையங்கண்மாயில் (தற்போதுள்ள பரமக்குடி கண்மாய்) திட்டுப்போல ஒரு பகுதி இருந்துள்ளது. இப்பகுதியில் மண்கலயத்தை இறக்கி வைத்துவிட்டு வெளியில் சென்றார்கள். அவ்விடத்தில் மண்கலயம் உடைந்துவிட காளி வெளியேறி திட்டுப்போன்ற பகுதியில் அமர்ந்து கொண்டதாகக் கூறுகிறார்.”[36]

வந்தவர்கள் நடந்த நிகழ்வுகளை பார்த்துவிட்டு அவ்விடத்தில் வைத்து சென்றுவிட்டதால் காளியம்மன் உக்கிரம் அதிகரித்துவிட்டது. காளி இருப்பது ஊரார்கள் யாவருக்கும் தெரியவில்லை. அவர்களுக்கு தெரியப்படுத்த காளியம்மன் சில நிகழ்வுகளை நிகழ்த்துகிறார். "அம்மனின் குடியேற்றத்திற்குப் பிறகு குறிப்பிட்ட பல ஆண்டுகளாக ஆண்வாரிசு இல்லாமல் போய்விட்டதாகச் சொல்கிறார்கள். இது குறித்து ஊர்ப்பொது மக்கள் ஒன்றுகூடி பல இடங்களில் விருச்சி கேட்டதாகவும், அப்பொழுது தான் குறிப்பிட்ட அந்த இடத்தில் காளி இருப்பதாகவும் அதற்கு உரல் சத்தமும், உலக்கைச் சத்தமும் கேட்கக்கூடாது. இதுபோன்ற சத்தங்கள் கேட்டதால் கோபப்பட்ட காளி ஆண்வாரிசு இல்லாமல் ஆக்கிவிட்டாள்"[37] என விருச்சி சொல்லப்பட்டிருக்கிறது. இதனைக்கேட்ட சிற்றூர் மக்கள் அதன்பிறகு காளியைப் பார்த்து உள்ளனர். ஊருக்கு அருகில் இருந்ததை எடுத்து வெளியில் வைக்க ஏற்பாடு செய்துள்ளனர். பரமக்குடிக்கு வெளியில் சருகனி செல்லும் சாலை ஓரத்தில் (ஊரில் இருந்து இரண்டு கிலோமீட்டர் தூரம் இருக்கும்) பனை நிழலில் பீடம் அமைத்து வெட்ட வெளியில் வைத்து வழிபட்டு உள்ளனர். அதன்பிறகு ஊராரால் சிலை செய்து இன்று கட்டிட அமைப்புகளுடன் காணப்படுகிறது.

**கோயில் அமைப்பு**

இக்கோயில் கருவறையுடன் கூடிய அர்த்தமண்டபம் மற்றும் முன்மண்டபத்துடன் சிறிய கோபுரமும் அமைந்து காணப்படுகிறது. சாலையின் ஓரத்தில் அமையப்பெற்று ஊருக்கும் மற்றும் வழிப்போக்கர்களுக்கும் காவல் தெய்வமாய் அமையப்பெற்று இருந்தது. கடந்தகால சிலை அகற்றப்பட்டு கிராமத்தார்களால் புதிய சிலை செய்யப்பட்டு சாந்த உருவத்துடன் காட்சி அளிக்கிறது.

கருவறையில் காளியம்மன் அமர்ந்த கோலத்தில் இடதுகால் ஊன்றி வலதுகால் மடக்கி இரண்டு கைகளுடன் வடக்குத்திசை நோக்கி அமர்ந்து இருக்கிறாள். முன்மண்டபத்தில் காளிக்கு எதிரான திசையில் பலிபீடம் அமைக்கப்பட்டுள்ளது. அர்த்த மண்டபத்தின் முன் வலது மற்றும் இடது பக்கங்களில் பூதங்கள் பெரிய அளவில் வைக்கப்பட்டுள்ளது. இராசகோபுரம், கொடிமரம் இல்லை. கோயிலுக்கு முன்பாக முனீஸ்வரர் இருக்கிறார் இதற்கு சிலை கிடையாது. சூலாயுதம் மட்டும் ஊன்றப்பட்டுள்ளது. முதல் வழிபாடு முனீஸ்வரருக்கு கொடுக்கப்படுகிறது. அதன் பிறகு அம்மனுக்கு வழிபாடு செய்யப்படுகிறது.

### 2.4.4 பிள்ளைமடத்துக் காளியம்மன்

தேவகோட்டையிலிருந்து சருகனி செல்லும் வழியில் மோயன்வயல் கிராமத்தில் இக்கோயில் அமைந்துள்ளது.

**தலவரலாறு**

உழவுத் தொழிலை அடிப்படையாகக்கொண்டது இப்பகுதி ஆகும். இதனால் நீர்வளங்களைப் பாதுகாக்க ஆங்காங்கே மடைகள் கட்டப்பட்டிருக்கின்றன. ஆங்கிலேயர்கள் ஆட்சிக்காலத்தில் இவ்வூரின் விவசாயப் பகுதிகளுக்கு நீர் பாய்ச்சுவதற்கென்று மடை கட்டப்பட்டது. விவசாயப்பணியில் ஈடுபட்டிருந்த பெண் அம்மடையின் அருகில் தன் குழந்தையை விளையாடவிட்டு வேலைசெய்து கொண்டு இருந்திருக்கிறார். சிறிதுநேரம் கழித்து குழந்தை திடீரென காணாமல்போக, அதிர்ச்சியுற்ற தாய் அங்கும் இங்குமாக தேடி அழுதுள்ளார். எங்கு தேடியும் கிடைக்கவில்லை.

அருகிலிருந்த மடைக்குள் குழந்தை அழும் சத்தம்கேட்க அங்கு பார்த்துள்ளனர். பெண்வடிவில் ஒருவர் அக்குழந்தையை வைத்திருந்திருக்கிறார். என் பிள்ளையைக் கொடு, குழந்தை என்னுடையது என அழுது புலம்பி

கேட்டிருக்கிறாள். ஆனால் மடைக்குள் இருந்தபெண் குழந்தையைக் கொடுக்கவில்லை. சத்தம் போட்டுக் கேட்டதால் அப்பெண் கோபமுற்று குழந்தையின் கையை பிய்த்துக்கொடுத்திருக்கிறார். இதனைக் கண்ட குழந்தையின் தாய் மற்றும் சுற்றி இருந்தவர்கள் செய்வதறியாது திகைத்துப்போய் நின்றுள்ளனர். இறுதியில் அக்குழந்தை இறந்து போய்விட்டது. பின் ஊரார் சார்பாக பலஇடங்களில் நிமித்தங்கள் பார்த்ததில் மடைக்குள் இருப்பது காளி என்றும், அதனை கோயில் கட்டி கும்பிட்டால் ஊருக்கு நல்லது நடக்கும் எனக் கூறப்பட்டுள்ளது. அதன்பிறகு காளிக்குக் கோயில் கட்டியுள்ளனர். பிள்ளையைக் கொன்றதால் அதற்கு பிள்ளைமடத்துக்காளி என பெயர் சூட்டி அழைத்து வருகின்றனர்.

**கோயில் அமைப்பு**

ஊரின் ஒதுக்குப்புறத்தில் சாலையை ஒட்டிய பகுதியில் இத்தெய்வம் அமைக்கப்பட்டுள்ளது. காவல் தெய்வமாகவும், குலதெய்வமாகவும் காட்சியளிக்கிறது, ஆரம்பகாலத்தில் காராஞ்செடிக்குக்கீழ் கருங்கல் மட்டும் வைத்து வழிபடப்பட்டு வந்துள்ளது. பிற்காலத்தில் கருங்கல்லைச் சுற்றி பீடம் அமைக்கப்பட்டு வழிபடப்பட்டிருக்கிறது. அதனையடுத்துச் சாந்தமுகத்துடன் கூடிய காளிசிலை நிறுவப்பட்டுள்ளது. பீடத்திற்கு ஏறிச்செல்வதற்குப் படிகள் கட்டப்பட்டுள்ளன. வேறு கட்டிட அமைப்புகள் இல்லை. பீடத்திற்கு அருகில் முனீஸ்வரருக்குச் சூலாயுதம் ஊன்றப்பட்டுள்ளது. பிள்ளை வேண்டி கட்டப்பட்ட தொட்டில்களும், வெங்கள மணிகளும் கோயிலின் முன் காணப்படுகின்றன.

**2.4.5 மடக்கரை காளியம்மன்**

தேவகோட்டை ஊராட்சி ஒன்றிய அலுவலகத்திலிருந்து அரசு மருத்துவமனை வழியாக அண்ணாநகரின் நுழைவு வாயிலில் உதியமர நிழலில் அமைந்துள்ளது.

**தலவரலாறு**

சிலம்பணி ஊருணிக்குத் தண்ணீர் செல்லும் குளக்கரையில் இக்கோயில் அமையப்பெற்றுள்ளதாலும், குளக்கரையின் நடுவில் பெரியமடை (தண்ணீர் செல்லும்வழி) ஒன்று இருப்பதாலும் இதற்கு மடக்கரை காளியம்மன் என்னும் பெயர் வந்தது எனக் கூறுகின்றனர். "இக்கோயில் தற்பொழுது மூன்றாவது தலைமுறையைக் கண்டுள்ளது"[38] கோயில் உருவாக்கப்பட்ட காலத்தில் அந்தப்பகுதியில் வீடுகள் எதுவும் இல்லாத அடர்ந்த காட்டுப் பகுதியாக இருந்துள்ளது. அவ்வழியாக கிராமப்புறங்களுக்கும், மற்ற வேலைகளுக்கும் போவோர், வருவோரைக் காவல் காப்பதற்கு இத்தெய்வம் உருவாக்கப் பட்டிருக்கிறது. பள்ளிக்குடத்தான் பரம்பரையினர் இக்கோயிலை உருவாக்கி உள்ளனர். ஆரம்பத்தில் ஒரு கல்லும், சூலாயுதமும் நட்டுவைத்து வழிபடப்பட்டு இருந்திருக்கிறது. பின்பு அவர்களது பரம்பரையில் வந்தவர்கள் காளியின் சிலையும், சூலாயுதமும் வைத்து வழிபட்டு வருகின்றனர்.

**கோயில் அமைப்பு**

கட்டிடம் எதுவும் இல்லாமல் திறந்தவெளியில் அமையப்பெற்றுள்ளது. ஒரு சிறிய பீடம் மட்டும் அமைக்கப்பட்டு அதில் காளிசிலை கிழக்குப் பார்த்த முகமாக அமையப்பெற்றுள்ளது. தல விருட்சமாக உதியமரமுள்ளது. இந்த உதியமரத்தின் நிழலில் தான் அம்பாள் அமர்ந்துள்ளாள். பரிவாரத் தெய்வங்கள் இல்லை. பீடத்தைச் சுற்றி முள்கம்பிகளால் வேலி அமைக்கப்பட்டுள்ளது.

**2.4.6 செட்டியா ஊருணிக் காளியம்மன்**

வேலாயுதபட்டிணம், நாச்சாங்குளத்திற்கு இடைப்பட்ட காட்டுப் பகுதியில் சாலையின் ஓரத்தில் இத்திருக்கோயில் அமையப்பெற்றுள்ளது.

**தலவரலாறு**

விடுதலைப்போராட்ட வரலாற்றில் வேலாயுதப்பட்டிணம் சிறப்பிடம் பெற்ற பகுதியாகும். "வேல் ஆயுதம் போன்றவற்றால் போர் புரிந்த இடம்

வேலாயுதப்பட்டிணம்"[39] என்கிறது வரலாறு. ஆங்கிலேயர்கள் ஆட்சியில் ஆங்காங்கு கலவரங்களும், அதன் காரணமாக ஊர்விட்டு ஊர் ஓடுதலும் அடிக்கடி நடந்தன இதுபோன்ற நிகழ்ச்சி வேலாயுதப்பட்டிணம் கிராமத்திலும் நடைபெற்றது.

வெள்ளையர்கள் விரட்டியடிக்க வேலாயுதபட்டின ஊர்க்காரர்கள் ஊரைவிட்டு நடுஇரவில் ஓடியிருக்கிறார்கள். அச்சமயத்தில் சிறுபெண்குழந்தைக்கு (பல நூற்றாண்டு ஆகிவிட்டதால் தாய், தந்தை பெயர் தெரியவில்லை எனக்கூறி விட்டனர்). அம்மை பார்த்திருந்திருக்கிறது. நடுஇரவில் அப்பெண் குழந்தையையும் தூக்கிக்கொண்டு ஓடியிருக்கிறார்கள். காட்டுப்பகுதியில் இரவுநேரத்தில் தங்கியிருக்கின்றனர். அவ்விடத்தில் இக்குழந்தை இறந்துபோய்விட்டது. "இறந்தொழிந்த உறவினர் அல்லது முன்னோர்கள் ஆகியோரை வழிபடு பொருளாகக் கொள்கின்ற இந்த வழக்காறுதான் மனித இனவளர்ச்சியின் ஆரம்ப கட்டம்"[40] என்கிறார்.

அம்மை பார்த்து இறந்துபோன குழந்தையை ஊருக்குள் கொண்டு செல்லாமல் தங்கியிருந்த காட்டுப்பகுதியிலேயே புதைத்துவிட்டனர். புதைக்கப்பட்ட இடத்தின் அருகில் முனீசுவரர் கோயில் இருந்திருக்கிறது. ஒருகல் மட்டும் ஊன்றப்பட்டுள்ளதால் இதனை ஒத்தக்கல் முனீஸ்வரர் என்று அழைக்கின்றனர். குழந்தை புதைக்கப்பட்ட பகுதி முனீஸ்வரர் குடிகொண்டிருக்கும் இடம் என்பதால் அக்குழந்தை தெய்வநிலைக்கு உயர்ந்துவிட்டது. இச்செய்தி கனவின் மூலம் உணர்த்தப்பட்டுள்ளது.

"நாச்சாங்குளம் சிற்றூரில் வசிப்பவர்கள் செட்டிநாட்டு வலையர் இனத்தார்கள். இவர்களில் தற்போது வழிபாடு செய்யும் கணபதி, வெள்ளைச்சாமி ஆகியோரின் மூதாதையர்களிடம் கனவில் வழிபடச் சொன்னதாகச் சொல்லப்படுகிறது."[41] அதன்பிறகு புதைக்கப்பட்ட இடத்தில்

கல்ஊன்றி வழிபாடு செய்து வழிபட்டு உள்ளனர். இன்றளவும் இவர்களது வகையறாக்கள் பூசை செய்கின்றனர். வேறு யாரும் பூசை செய்வதில்லை. இறந்துபோன குழந்தையின் மூதாதையர்கள் தஞ்சாவூர் மாவட்டம் ஒரத்தநாட்டில் வசித்து வருகின்றனர். தற்பொழுது அவர்கள் இங்கு வந்து சாமிகும்பிட்டுச் செல்கின்றனர். குத்துக்கல் முனீசுவரர் அருகில் இருந்தாலும் செட்டியாஊருணிக்காளி என்ற பெயர் விளங்குகிறது.

**கோயில் அமைப்பு**

கோபுரங்கள், கட்டிடங்கள் கிடையாது. “மக்கள் உருவாக்கிய தெய்வங்கள் கொட்டும் மழையிலும், கொளுத்தும் வெயிலிலும், வீசும் காற்றிலும், அடர்ந்த பனியிலும், வெட்ட வெளியில் ஆகாசம் பார்த்து, ஆள் அரவமற்ற காட்டுக்குள்ளே தன்னந்தனியாக நின்றுகொண்டிருப்பவை.”[42] இக்காளியம்மன் கோயிலும் இதுபோன்ற அமைப்புடன் காணப்படுகிறது.

செங்கற்களால் பீடம் அமைக்கப்பட்டு பீடத்தைச் சுற்றி முள்கம்பியால் வேலிபோடப்பட்டுள்ளது. முனீஸ்வரருக்கும், காளியம்மனுக்கும் தனித்தனி பீடம் அமைக்கப்பட்டு உள்ளது. பீடத்தின் மீது முனீசுவரருக்குக் குத்துக்கல் மட்டும் நிறுவப்பட்டு உள்ளது. அம்மனுக்கு சிலைசெய்து நிறுவப்பட்டுள்ளது. உட்கார்ந்த நிலையில் உள்ள அம்மன் கிழக்கு நோக்கி உள்ளாள். அம்மனுக்கு எதிரில் சோனை இருக்கிறார். இவர் அம்மனுக்குக் காவல் தெய்வமாகும். “மக்களைக் காக்க தெய்வங்கள் இருப்பது போல் தெய்வங்களை காக்கின்ற பணியில் உறுதுணையாக துணைத்தெய்வங்கள் விளங்குகின்றன.”[43] பெரும்பாலும் தெய்வங்களை காவல்காக்கும் பணியில் சோனைய்யா தெய்வம் ஈடுபடுத்தப்படுகிறது. இக்கோயில் இருப்பது மிகவும் அடர்ந்த காட்டுப்பகுதி என்பதால் இரவுநேரங்களில் யாரும் செல்வதில்லை. பரம்பரை பரம்பரையாக செட்டிநாட்டு வலையர் மட்டுமே இதனை நிர்வகித்து வருகின்றனர். இக்கோயில் தென்கலை நாட்டைச்சேர்ந்த எட்டரை கிராமத்திற்கு சொந்தமானது ஆகும்.

### 2.4.7 அண்ணாநகர் கள்ளாம்பிரம்புக் காளியம்மன்

இத்திருக்கோயில் தேவகோட்டை ஊராட்சி ஒன்றிய அலுவலகத்தில் இருந்து மருத்துவமனை செல்லும் சாலையில் ஒரு கிலோமீட்டர் தூரத்தில் அமைந்துள்ளது. கோயில் அமைந்திருக்கும் பகுதி அண்ணாநகர் என அழைக்கப்படுகிறது.

**தலவரலாறு**

கோயில் இருக்கும் இடம் சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு முட்செடிகளும், கள்ளிச்செடிகளும் அடர்ந்து இருக்கும் காட்டுப்பகுதி ஆகும். வீடுகள் எதுவும் இல்லாத காடாகவே காட்சி அளித்து இருக்கிறது. இரவு நேரங்களில் அருகில் உள்ள கிராமங்களுக்கு செல்லும் பொழுது மிகுந்த அச்சம் காணப்படும்.

அவ்வச்சத்துடன் செல்லும்பொழுது குறிப்பிட்ட ஒரு இடத்தில் இருந்து முன்னால் ஒரு ஆள் செல்வதுபோல் இருக்கும். சிறிது தூரம் கழித்து அந்த நபர் எங்கு சென்றார் என்பது தெரியாமல் காணாமல் போய்விடுவர். “அச்சத்தின் காரணமாகவும், அவ்வச்சத்தை நீக்குதற்குரிய நம்பிக்கைகளின் காரணமாகவும் வழிபாடு தோன்றியது”[44] என்கிறார் அறிவுநம்பி. இங்கும் அச்சம் என்ற நிலை முதன்மை வகிக்கிறது. அதன்பின் தெய்வம் தன்மைக் காக்கும் நம்பிக்கையின் அடிப்படையில் துணைக்கு ஆள் போல் வரும் அந்த இடத்தில் இருந்த கல்லினை வழிபடத் துவங்கியுள்ளனர். போவோர், வருவோர் அந்தக் கல்லிற்கு மஞ்சள் பூசுவது, சூடம் ஏற்றுவது, ஊதுபத்தி வாசனை போடுவது போன்ற நிகழ்ச்சிகள் தொடர்ந்து செய்து வந்துள்ளனர். பின்னர் காலங்கள் கடக்கிறது. காடாக இருந்த பகுதியில் வீடுகள் கட்ட ஆரம்பிக்கின்றனர். இதற்கு சுப்புராயன் அம்பலம், குப்புச்சாமிக் கவுண்டர், சுந்தராசன் சேர்வை, செல்வம் பிள்ளை ஆகியோரின் தீவிரமுயற்சியால் கல் இருந்த இடத்தில் கோயில் கட்டத் தீர்மானிக்கின்றனர்.

“தேவகோட்டை விவசாயப் பண்ணைக்கு உள்ளே அமைந்திருக்கும் காளியம்மன் கோயிலில் பிடிமண் எடுத்து வந்து கல் நடப்பட்டு இருந்த இடத்தில் வைத்து கோயிலாகக் கட்டி உள்ளனர்.”[45] இது இன்றைய காலகட்டத்தில் வளர்ச்சிநிலை அடைந்த கட்டிடங்களாகக் காணப்பட்டு அப்பகுதியில் பிரசித்தி பெற்ற ஆலயமாக வணங்கப்பட்டு வருகிறது. இக்கோயில் அமைந்திருக்கும் பகுதி முற்காலத்தில் கள்ளாம்பிரம்புக் காடாக இருந்ததால் இதனைக் கள்ளாம்பிரம்புக்காளி என அழைக்கின்றனர்.

**கோயில் அமைப்பு**

கருவறையுடன் கூடிய சிறிய கோபுரத்துடன் காணப்படும் இத்திருக்கோயிலில் முன்மண்டபம் கட்டப்பட்டுள்ளது. முன் மண்டபத்திற்கு முன்பாக சூலாயுதமும் பலிபீடமும் அமைக்கப்பட்டுள்ளது. பெரும்பான்மையான கோயில்களில் முன் மண்டபத்தில் தான் பலிபீடம் அமைக்கப்பட்டிருக்கும். இங்கு அதனையும் தாண்டி வெளியில் உள்ளது.

கிழக்குத் திசை நோக்கிய அம்மன் அமர்ந்த கோலத்தில் காணப்படுகிறாள். சாந்த முகத்துடனும், நான்கு கரங்களுடனும் காணப்படும் அம்பாளின் வலதுகையின் மேல் சூலாயுதமும், வலது கீழ்க்கையில் உடுக்கையும், இடதுகையின் மேல் நாகமும், இடது கையின் கீழ் அங்குசக் கயிறும் வைத்துள்ளார்.

அம்பாளின் கருவறை முகப்பில் முருகனும், விநாயகரும் வலது, மற்றும் இடது புறங்களில் அமர்ந்துள்ளனர். அம்மனின் ஆலயத்திற்கு இடதுபக்கம் சிறிது தூரம் தள்ளி முனீஸ்வரர் உள்ளார். இதற்கு தனிச்சிலை எதுவும் கிடையாது. பீடமும், பீடத்தின் மீது சூலாயுதம் மட்டும் ஊன்றப்பட்டுள்ளது. இவர் அம்மனைக் காக்கும் காவல்தெய்வம் என்கின்றனர். விழாக்காலங்களில் முனீஸ்வரருக்கும் பூசைகள் செய்யப்படுகின்றன.

### 2.4.8 சமுத்திரத்துக்காளி

தேவகோட்டை நகரில் இருந்து ஏழு கிலோமீட்டர் தொலைவில் இருக்கிறது. கோட்டூர் எனும் கிராமம். இவ்வூரின் எல்லையில் ஊர் ஒதுக்குப்புறமாக இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

**தலவரலாறு**

இக்கோயில் பல ஆண்டுகள் பழமை வாய்ந்தது. தற்பொழுது கோயில் அமைந்துள்ள இடத்தில் முன் ஒரு காலத்தில் ஒரு பெரிய ஊருணி அமைந்திருந்தது. இந்த ஊருணி முழுவதும் நீர் நிறைந்து காணப்பட்ட காலத்தில் "வெளியூரில் இருந்து (எந்த ஊர் என்று தெரியவில்லை என்று கூறிவிட்டனர்). ஒரு பெண் அந்த வழியாக வந்துள்ளார் வரும் வழியிலிருந்த, அவ்வூரணியில் இறங்கி தண்ணீர் குடித்து ிட்டு தண்ணீருக்குள்ளேயே இறங்கி நடக்க ஆரம்பித்துவிட்டார்."[46] ஒரு கட்டத்தில் நீருக்குள் மூழ்கிவிட்டார். இதனைக் கண்ட சிலர் ஊருக்குள் சென்று நடந்த நிகழ்வுகளை கூறி உள்ளனர். அதற்குள் பொழுது சாய்ந்து இரவுநேரம் ஆகிவிட்டதால் யாரும் தண்ணீருக்குள் இறங்க முடியவில்லை.

"மறுநாள் காலையில் கிராமத்தினர் ஊருணிக்குள் இறங்கி தேடிப்பார்த்துள்ளனர். எங்கு தேடியும் அப்பெண் கிடைக்கவில்லை."[47] குறிப்பிட்ட ஒரு இடத்தில் மட்டும் திட்டுப்போன்ற பகுதி உருவாகியிருந்தது. இப்பகுதி இதற்கு முன்பாக அங்கில்லை. பின்பு "அவ்வூரிலுள்ள ஒருவரின் கனவில் வந்து திட்டுப் போன்ற பகுதியில் தான் புதையுண்டு இருப்பதாகவும் எனக்குக் கோயில் கட்டி கும்பிட்டால் நல்லது நடக்கும் எனக் கூறியுள்ளது."[48] தொடர்ந்து அவள் தெய்வமாகக் கருதப்பட்டு மண்திட்டுப்பகுதியில் பூசை செய்து வழிபட்டு வந்துள்ளனர். பிற்காலத்தில் சிலை செய்து வழிபட்டு வருகின்றனர். சமுத்திரம் என்ற சொல்லிற்கு நீர் என்று பொருள். நீரில் இறந்துபோன பெண் என்பதால் சமுத்திரக்காளி எனப் பெயரிட்டுள்ளனர்.

**கோயில் அமைப்பு**

சிறிய கருவறையுடன் கோபுரம் கட்டப்பட்டுள்ளது. எட்டுக் கைகளுடன் அமா்ந்து உள்ளாள். ஒருகால் கீழே தொங்கவிட்டும், மற்றொரு கால் மடக்கியும் அமா்ந்த நிலையில் உள்ளாள். அம்பாளுக்கு அருகே கருப்பா் மற்றும் சன்யாசி தெய்வங்களுக்குத் தனித்தனி கருவறையுடன் கூடிய கோயில் உள்ளது. முன்மண்டபம் எதுவும் இல்லை.

**2.4.9 மூக்கரைக் காளியம்மன்**

இக்கோயில் தேவகோட்டையிலிருந்து பத்துக்கிலோமீட்டா் தூரத்திலுள்ள வெங்களூா் எனும் ஊரில் அமையப்பெற்றுள்ளது.

**தலவரலாறு**

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பாக இவ்வூரில் அமையப் பெற்றுள்ளது. பல தலைமுறைகளைக் கடந்துவிட்டதால் யாரிடமும் தெளிவான வரலாறு கிடைக்கவில்லை. அக்கோயிலில் தற்போது பூசாரியாக இருக்கும் மாயாண்டி என்பவா் கூறுகையில் “இக்காளி இங்கு உருவாகியது இல்லை. பா்மாவில் உருவாகி அங்கிருந்து இங்கு வந்ததாகக் கூறுகிறாா்.”[49] பழங்காலத்தில் தமிழகத்திற்கும் பா்மாவிற்கும் ஏற்றுமதி, இறக்குமதி மற்றும் வேலை நிமித்தமாக செல்லுதல் போன்ற நடைமுறைகள் வழக்கத்தில் இருந்தன. அதனால் பா்மாவிற்குச் சென்றவா்கள் அங்கிருந்து தெய்வத்தைக் கொண்டு வந்திருக்கலாம். காலம் காலமாக வண்டிக்கார மாயாண்டி வகையறாக்கள் இக்கோயிலுக்கு வழிபாடும், பணிவிடையும் செய்து வருகின்றனா். “யாா் தவறு செய்தாலும் சும்மா விடாது”[50] என்கிறாா் கோயில் பூசாரி.

**கோயில் அமைப்பு**

சிறிய கோபுரத்துடன் கூடிய கருவறையும், அதற்கு முன்பாக சிறிய முன்மண்டபமும் காணப்படுகிறது. கருவறையில் காளியின் சிலையில்லை.

ஐந்தடிக்குக் குறையாத அளவில் பீடம் கருங்கல்லால் அமைக்கப்பட்டுள்ளது. அதன் மேல்பகுதியில் குங்குமம் எப்பொழுதும் பரப்பப்பட்டிருக்கிறது.

அருகில் பிரம்பு வைக்கப்பட்டுள்ளது. வடக்குத்திசை பார்த்து இருக்கும் இக்காளியம்மன் கோயில் முன்பாக வண்டிக்கார மாயாண்டி வகையறாவால் வெட்டப்பட்ட ஊருணி காணப்படுகிறது. இக்குளத்தில் யாரும் அசுத்தம் செய்வதில்லை. இதிலுள்ள நீரினை எடுத்து அம்மன் மற்றும் பரிவாரத்தெய்வங்களை நீராட்டுகின்றனர்.

பரிவாரத்தெய்வங்களாக முனீஸ்வரர் மற்றும் நொண்டி ஐயா, சப்தகன்னியர், பேச்சியம்மன், கருப்பர் போன்றவை காணப்படுகின்றன. காளிக்கு திருவிழா நடக்கும் காலங்களில் இப்பரிவாரத் தெய்வங்களுக்கும் வழிபாடு செய்யப்படுகிறது.

மூலத்தெய்வமான காளியம்மனுக்கும், பரிவாரத்தெய்வங்களுக்கும் கல்லும், சூலாயுதமும் மட்டுமே நடப்பட்டுள்ளது. சப்தகன்னியர் ஏழுபேர் என்பதனை உணர்த்தும் பொருட்டு ஏழு சூலாயுதம் நடப்பட்டுள்ளதனைக் காணமுடிகிறது.

### 2.4.10 தட்டாரக்காளியம்மன்

தேவகோட்டையில் இருந்து கண்ணங்குடி செல்லும் சாலையின் தேரளப்பூர் என்னும் ஊரில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

**தலவரலாறு**

இக்கோயில் நூறு ஆண்டுகளுக்கு மேலாக ஊர் மக்களைக் காக்கும் காவல் தெய்வமாக காட்சியளிக்கிறாள். டி.சிறுவனூர் மற்றும் தேரளப்பூர் எனும் இரு கிராமங்களுக்கு நடுவினில் காட்டுப்பகுதியில் அமைந்துள்ளது. ஒரு பெண் தலையில் கூடையுடன் வடக்குத்திசையில் இருந்து வந்திருக்கிறாள். தற்பொழுது கோயில் கொண்டுள்ள இடத்தில் அமர்ந்திருக்கிறாள். அவளுக்கு அப்பகுதியைச் சேர்ந்த தட்டார ஆசாரி என்பவர் அடைக்கலம் கொடுத்துள்ளார்.

சிலநாள் கழித்து அப்பெண் இறந்து போய்விட்டார். ஒரு நாள் ஆசாரியின் கனவில் வந்து அப்பெண் தன்னை வணங்குமாறு கூறியுள்ளார். ஆரம்ப காலத்தில் அவளது நினைவாக கருங்கல் மட்டும் நடப்பட்டு வழிபாடு செய்துள்ளனர். தட்டார ஆசாரியின் அரவணைப்பில் இருந்து அவரது கனவில் வந்து சொன்னதால் இத்தெய்வத்திற்குத் தட்டாரக்காளியம்மன் எனப் பெயரிட்டுள்ளனர்.

**கோயில் அமைப்பு**

கருவறையுடன் கூடிய சிறிய கோபுரம், முன்மண்டபம், பலிபீடம் அமைக்கப்பட்டுள்ளது. நான்கு கரங்களுடன் கூடிய சிலையில் இடது காலினை மடக்கியும், வலது காலில் அரக்கனை மிதித்தபடியும் அமர்ந்த நிலையில் அம்மன் காணப்படுகிறாள். வடக்கிலிருந்து வந்ததால் அத்திசை பார்த்து அமர்ந்துள்ளாள். நேர்த்திக்கடனாகச் செலுத்தப்பட்ட வெண்கலமணிகளும், குழந்தைவரம் வேண்டி கட்டப்பட்ட தொட்டில்களும் ஆங்காங்கே காணப்படுகின்றன.

**2.4.11 இளக்கினிவயல் மூக்கரைக் காளியம்மன்**

தேவகோட்டையில் இருந்து கண்ணங்குடி செல்லும் சாலையில் பத்துக்கிலோமீட்டர் தூரம் கடந்ததும் இளக்கினிவயலை அடையலாம். வரலாற்றுச் சிறப்புமிக்க இவ்வூரில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

**தலவரலாறு**

பல நூற்றாண்டுகளுக்கு முன் இளக்கினிவயலில் ஒரு பள்ளர் வீடு மட்டும் இருந்துள்ளது. ஒரு வீடு மட்டும் இருந்ததால் ஊர்ப்பெயர் எதுவுமில்லை. “இராமேஸ்வரத்தில் இருந்து வரும் வழியில் இராமர், சீதை, இலக்குமணன் மூன்றுபேரும் இவ்வூரில் ஓய்வெடுத்துள்ளனர்.

அங்கிருந்ததொரு மரத்தில் பழங்கள் பழுத்துக்கிடந்திருக்கின்றன. மூன்றுபேரும் அப்பழங்களைப் பறித்துத் திண்ண அதன் சுவை அவர்களை அதிசயிக்க வைத்திருக்கிறது. அதன் சுவைகண்டு அவ்விடத்திற்கு இளக்கனிவயல் என்று பெயர் சூட்டியதாகவும், பின்பு இளக்கினிவயல் என மருவியதாகவும் கூறுகின்றனர்."[51] இவ்வூரில் இருந்த பள்ளர் வீட்டில் பெண்குழந்தை இறந்து போய்விட்டது. சிலநாட்கள் கழித்து இறந்துபோன குழந்தையின் பேசும் சத்தம் கேட்டுள்ளது. குடும்பத்தினர் செய்வதறியாது திகைத்தனர். "அக்குடும்பத்தில் உள்ள பெரியவர்களின் கனவில் அக்குழந்தை தான் சாமியோடு சாமியாக சேர்ந்துவிட்டேன் என்றும்; என்னை நினைத்து வழிபட்டு வாருங்கள் நான் உங்களை காத்து நிற்கிறேன் என்று கூறி மறைந்து இருக்கிறது."[52] தற்பொழுது கோயில் கொண்டுள்ள இடத்தைத் தேர்வு செய்து பீடம் அமைத்து வழிபட்டு வருகின்றனர். ஆரம்பத்தில் காளியம்மன் என்று அழைக்கப்பட்டு பின்பு மூக்கரைக்காளியம்மன் என்று மாற்றம் பெற்றதாகக் கூறப்படுகிறது.

**கோயில் அமைப்பு**

முன்மண்டபத்துடன் கூடிய கருவறையில் காளிக்குப் பீடம் அமைக்கப்பட்டுள்ளது. அனைத்து வழிபாடுகளும், அபிடேகங்களும் கருவறையில் உள்ள பீடத்திற்கே செய்யப்படுகிறது. காளிக்கு காவலாக முனீசுவரர் இருக்கிறார். சிலை எதுவுமில்லை. சூலாயுதம் மட்டும் ஊன்றப்பட்டுள்ளது. வேப்பமரம் தல விருட்சமாக உள்ளது.

**2.4.12 ஆற்றங்கரை காளியம்மன்**

தேவகோட்டையிலிருந்து ஐந்து கிலோமீட்டர் தூரத்தில் உள்ள தச்சவயல் என்னும் கிராமத்தில் இக்கோயில் அமையப்பெற்றுள்ளது.

**தலவரலாறு**

தச்சவயல் எனும் சிற்றூரை ஒட்டி ஆறு (குண்டாறு) ஒன்று செல்கிறது. அவ்வாற்றின் கரையோரத்தில் காளியம்மன் அமையப்பெற்றுள்ளதால் இதனை

ஆற்றங்கரை காளியம்மன் எனக்கூறுகின்றனர். தாயும், மகளும் ஆற்றில் மிதந்து வரும்வழியில் இவ்வூரில் அமையப்பெற்ற ஆற்றின் கரையோரத்தில் ஆவாரஞ்செடியில் ஒதுங்கியதாகக் கூறப்படுகிறது

"இராமன் என்பவர் தச்சவயலில் வீடு கட்டிக் கொண்டிருந்தார். (இந்நிகழ்வு நூற்றாண்டுகளை கடந்தது). மாலையில் வேலை முடித்துவிட்டு பக்கத்து ஊருக்குச் சென்று தங்கிவிடுவார். மீண்டும் மறுநாள் காலையில் வந்து பார்க்கும்பொழுது சுவர் இடிந்து விழுந்துகிடக்கும். இதேபோன்ற நிகழ்வு மூன்று நாட்கள் தொடர்ந்து நடந்திருக்கிறது."[53]

செய்வதறியாது மனவேதனையோடு வீட்டில் இரவு தூங்கியிருக்கிறார். அன்றிரவு கனவில் வந்து சொல்லி இருக்கிறது. ஏண்டா நான் இருக்க இடம்இல்லை. வீடு இல்லை. என்னை தவிக்கவிட்டு நீ மட்டும் வீடு கட்டி குடியிருக்க, விட்டிருவேனா என அழுத்தமான குரலில் அச்சம் தரும் வகையில் பேசியதைக்கேட்ட அவர் பயந்துபோய் இருக்கிறார். நீ இருக்கும் இடம் எது என்றுக் கூறு எனத்திருப்பிக்கேட்க ஆற்றின் ஓரம் உள்ள ஆவரஞ்செடி அருகில் வந்து பார் என்று கூறியதைக் கேட்டதும்; காலையில் எழுந்தவுடன் ஊரில் உள்ளவர்களிடம் நடந்ததனை எடுத்துக் கூறியிருக்கிறார். கனவில் சொன்ன இடத்திலுள்ள ஆவரஞ்செடி அருகே சென்று பார்த்துள்ளனர்.

அங்கு பெரிய மற்றும் சிறிய அளவிலான கால்தடம் தெரிந்திருக்கிறது. அவ்விடத்தை சுத்தம் செய்து; திட்டுப்போல மண்ணாலான கல் ஊன்றி வழிபாடு செய்துள்ளனர். பிறகு வீடுகட்ட ஆரம்பித்திருக்கிறார். சுவர் இடிந்து விழுவது போன்ற நிகழ்வு நடக்கவில்லை. முழுவதுமாக வீடு கட்டி முடிக்கப்பட்டது.

**கோயில் அமைப்பு**

ஊர் மக்கள் பணம் வசூல் செய்து கோயில் கட்டியுள்ளனர். ஆரம்ப நிலையில் திறந்த வெளியில் ஊன்றப்பட்ட கல்லுடன் காட்சி அளித்த

இக்கோயில் தற்போது சிறிய கோபுரத்துடன் கூடிய கருவறையும், ஓட்டுக்கொட்டகையாலான முன்மண்டபமும் கட்டப்பட்டுள்ளது.

கருவறையில் காளியம்மன் ஒரு கால் ஊன்றியும், மற்றொருகால் மடக்கியும் அமர்ந்த நிலையில் காணப்படுகிறார். இரண்டு கைகளையுடைய இவள் ஊரைக் காக்கும் ஊர்த் தெய்வமாகக் காட்சி அளிக்கிறார். பள்ளர்களைத் தவிர வேறுயாரும் வழிபாடு செய்வதில்லை.

### 2.5 கூத்தாடி முத்துப்பெரியநாயகி அம்மன்

தேவகோட்டை நகரின் மையப்பகுதியில் இருந்து மூன்று கிலோமீட்டர் தொலைவில் தாழையூர் கிராமத்திற்குச் செல்லும்முன் மேடான பகுதியில் வேம்பு, ஆலமரம், உசிலை மரம் சூழ இக்கோயில் அமையப்பெற்றுள்ளது.

**தலவரலாறு**

தாழையூரிலுள்ள உசுலாவுடைய ஐயனார் கோயில் பல தலைமுறைகளாக இருந்து வருகிறது. இக்கோயிலுக்கு ஆண்டுதோறும் சிவராத்திரி திருவிழா நடத்துவது வழக்கம். இரண்டாம் நாள் திருவிழாவில் இரவு நாடகம் நிகழ்த்தபடும். பல ஆண்டுகளுக்கு முன் வள்ளி திருமணம் எனும் நாடகம் நடத்த ஊரால் முடிவு செய்தனர். நாடகக் கலைஞர்கள் தேர்வு செய்யப்பட்டு சிவராத்திரி அன்று நாடகம் நடந்துகொண்டு இருந்திருக்கிறது.

நாடக நடிகையான முத்துப்பெரியநாயகி (வருடம் தெரியவில்லை என்று கூறிவிட்டார் கோயில் பூசாரி சக்திவேல்). புதுக்கோட்டை மாவட்டம் கம்மங்காடு எனும் கிராமத்தைச் சேர்ந்தவர் ஆவார். இவருடன் அவளது சகோதரரும் நடிக்க வந்துள்ளார்.

நாடகக் கொட்டகையில் (நடிகர்கள் அமர்ந்து இருக்கும் இடம்) முத்துப்பெரியநாயகிக்கும் அவரது சகோதரருக்கும் வாக்குவாதம் ஏற்பட்டுள்ளது. மனவேதனை அடைந்த முத்துப்பெரியநாயகி தெரியாமல் வெளியில் இருந்த

மரத்தில் தூக்கிலிட்டு இறந்து போகிறாள். “இறந்த முன்னோர் வழிபாட்டை தமிழகமெங்கும் காணலாம்”[54] என்கிறார் சு.சக்திவேல். இறந்தவர்கள் தெய்வங்களாகின்றனர் என்னும் அடிப்படைக்கருத்தின்படி முத்துப்பெரியநாயகி இங்கு தெய்வமாகிறாள். இறந்துபோன இடத்தில் தற்பொழுது கோயில் கட்டப்பட்டு வழிபாடு செய்யப்படுகிறது.

**கோயில் அமைப்பு**

சிறிய அளவிலான மூலகோபுரத்துடன் கூடிய கருவறையில் அம்பாள் வீற்றிருக்கிறாள். அம்பாளின் சிலை மரக்கட்டையால் செய்யப்பட்டுள்ளது. இப்பெண் தூக்கிலிடப்பட்டு இறந்து போனதால் தலை மட்டும் சாய்வான தோற்றத்துடன் காணப்படுகிறது. இக்கோயிலுக்கு அபிடேகம் எதுவும் நடத்தப்படுவது இல்லை. பெண்தெய்வங்கள் பெரும்பாலும் கிழக்குப் பார்த்து அமையப்பெற்றிருக்கும். ஆனால் இக்கோயிலில் அம்மன் தெற்குப் பார்த்த திசையில் அமர்ந்திருக்கிறாள்.

கோயிலின் கருவறையின் முகப்புப் பகுதியில் விநாயகரும், முருகப்பெருமானும் வீற்றிருக்கிறனர். அர்த்த மண்டபம், முன்மண்டத்துடன் கூடிய விசாலமான அளவில் கோயில் கட்டப்பட்டுள்ளது. அம்பாளின் வலதுபுறம் சப்தகன்னிமார்கள் உள்ளனர். கோயிலைச் சுற்றி சின்னக் கருப்பர், பெரிய கருப்பர், உதிரக்காளியம்மன், ராக்கச்சியம்மன், சப்பானிக்கருப்பர், உளிவீரன், சன்னாசி, முனீஸ்வரர் ஆகிய பரிவாரத்தெய்வங்கள் தனித்தனிச் சன்னதிகளில் அமைக்கப்பட்டுள்ளன.

**2.6 காடேரியம்மன்**

தேவகோட்டை நகரில் இருந்து புதுக்குறிச்சி செல்லும் சாலையில் ஏழுகிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. மஞ்சனி எனும் கிராமம். இங்குள்ள கோயில் காடேரியம்மன் ஆகும்.

**தலவரலாறு**

புதுக்கோட்டை மாவட்டம் கீழாநெல்லிக்கோட்டையில் காடேரியம்மன் கோயில் அமைந்துள்ளது. இங்கு அக்காள், தங்கை என்ற இரண்டு தெய்வங்கள் உண்டு. இரண்டும் மிகப்பிரசித்தி பெற்றவை ஆகும். இதனை கடத்திச்செல்ல வேண்டும் என்று இராமநாதபுரம் மன்னர் முடிவுசெய்து ஆள்வைத்து கடத்திவர ஆணையிட்டார்.

"பிடிமண் எடுத்துச்சென்று ஒரு இடத்தில் இருக்கும் தெய்வத்தை பிரிதோர் இடத்திற்கு கொண்டு செல்வதுபோல் தெய்வச்சிலைகள் களவாடப்பட்டுக் கொண்டு வந்து வைத்து வழிபடுவது சிறுதெய்வ வழிபாட்டில் வழக்கத்தில் உள்ளது."[55] இந்நிகழ்வு காடேரிஅம்மன் கடத்தி வரப்பட்டதிலும் நிகழ்ந்துள்ளது. அக்காள் தெய்வத்தை அங்கு வைத்துவிட்டு, தங்கை தெய்வத்தைக் கடத்தி வந்துள்ளனர். வரும்வழியில் மஞ்சனி கண்மாய்க்கரை அருகே வரும்பொழுது விடிந்து விட்டதாகவும், இதனால் ஊரார் பார்த்துவிடுவர் எனப்பயந்து அவ்விடத்திலேயே மண்ணைத் தோண்டிப் புதைத்து வைத்து விட்டுச் சென்றுவிட்டனர். அவ்வூரைச் சேர்ந்த பெத்தபெருமாள் என்பவரின் மூதாதையர்களில் ஒருவரான இராமையா என்பவர் காலைநேரத்தில் அவ்வழியாகச் சென்றுள்ளார்.

"குறிப்பிட்ட ஒரு இடத்தில் இருந்து மிகப் பிரகாசமான ஒளி முகத்தில் அடித்துள்ளது. முகத்தில் பட்ட ஒளியால் திகைத்துப்போன இராமையா மண்ணை கிளரிப்பார்த்து (தோண்டுதல்) உள்ளார். மண்ணுக்குள் ஒளி பொருந்திய சிலையைக் கண்டு அதிர்ச்சியுற்றார். தன்னிடம் இருந்த துணியால் சிலையை மூடி மறைத்து வைத்துவிட்டு ஊருக்குள் ஓடிவந்து நடந்த நிகழ்வினை கூறி இருக்கிறார்."[56]

ஊரார் அனைவரும் சிலைகிடக்கும் இடத்திற்குச் சென்று அம்மனின் சிலையைப் பார்த்து பரவசப்பட்டுப் பயபக்தியுடன் வணங்கி வந்துள்ளனர். சிலைக்கு வெயில் அடிக்காமல் இருக்க ஓலைக்குடிசை கட்டி வைத்து வழிபாடு

செய்து வந்துள்ளனர். மின்சாரம் இல்லாத காலம் என்பதால் இரவுநேரத்தில் மண்ணெண்ணெய் விளக்குப்போட்டு வந்துள்ளனர்.

மஞ்சனியில் தேவர் மற்றும் பள்ளர் இனத்தவர்கள் வாழ்கின்றனர். இவர்களில் தேவர் இனத்தைச் சேர்ந்தவர்களுக்குப் புதுக்கோட்டைக்கு அருகிலுள்ள கீழாநெல்லிக்கோட்டையில் உள்ள காடேரியம்மன் தான் குலதெய்வம் ஆகும். இங்கிருந்து வருடாவருடம் புதுக்கோட்டைக்கு வண்டிகட்டி குலதெய்வம் கும்பிடச் செல்வர். அக்காடேரியம்மன் தான் மண்ணில் கண்டெடுக்கப்பட்ட தெய்வம் என்பது பல இடங்களில் சாமிகுறி கேட்டபொழுது கிடைத்த பதிலாகச் சொல்லப்படுகிறது.

"புதுக்கோட்டையில் இருந்து கொண்டு வரப்பட்டது, மஞ்சனியைத் தாண்டிப்போகவில்லை என்பதனை இப்பகுதி மக்கள் வியப்புடன் கூறுகின்றனர்."[57] இந்நிகழ்வு நடந்து பலநூற்றாண்டுகள் கடந்துவிட்டது இன்று வளர்ச்சியடைந்த நிலையில் கோயில் காணப்படுகிறது. இது தேவர் இனத்தார்களுக்கே சொந்தமானதாகவும், அவ்வினத்தைச் சேர்ந்த பெத்தபெருமாள் என்பவரே பூசாரியாகவும் செயல்படுகின்றனர்.

**கோயில் அமைப்பு**

சிறிய கோபுரத்துடன் கூடிய கருவறையும், அர்த்தமண்டமும், முன் மண்டபமும் காணப்படுகிறது. கிழக்குமுகமாக அம்மன் வீற்றிருக்கிறாள். அம்மன் சிலை ஆண், பெண் முகங்கள் கலந்தாற்போல தெரிகின்றது. பழங்கால ஆலமரம் தலவிருட்சமாகவும், விநாயகர், முருகன், வீரப்பர், முனீஸ்வரர் போன்றவை பரிவாரத் தெய்வங்களாகக் காட்சி தருகின்றது. இக்கோயிலில் மயில் ஒன்று நீண்டகாலமாக வாழ்ந்து இறந்து போய்விட்டதாக கூறுகின்றனர். அம்மயிலினை கோயிலுக்கு அருகில் புதைத்து அதன்மேல் பீடம் அமைக்கப்பட்டு வழிபாடு செய்து வருகின்றனர்.

## 2.7 செல்லியம்மன்

தேவகோட்டைக்கு அருகிலுள்ள கல்லங்குடி எனும் சிற்றூரில் இக்கோயில் அமைந்துள்ளது.

**தலவரலாறு**

தேவகோட்டை அருகிலுள்ள இருமதியைப் பூர்வீகமாகக் கொண்ட ராக்கப்பன் வகையறாக்கள் ஐந்து தலைமுறைகளுக்கு முன்பு கல்லங்குடியில் குடியேறியுள்ளனர். இவர்களின் வழி வந்த ராக்கப்பனின் மூதாதையர்களில் ஒருவருக்கு ஆண்வாரிசு இல்லை. வயதாகிய இவர்கள் வயல் வேலைகளுக்கும், காடுகளில் சுண்டைக்காய் பறிப்பதற்கும் செல்வர். ஒருநாள் செல்லும்பொழுது காட்டின் நடுப்பகுதியில் வெள்ளிச் சூலாயுதமும், கல்லும் ஊன்றப்பட்டு இருந்துள்ளதை அவ்வயதான பெண்மணி பார்த்துள்ளார். இதனைக்கண்டு ஆச்சரியமடைந்து ஊருக்குள் சென்று கண்ட நிகழ்வினைக் கூறி இருக்கிறார்.

கல்லங்குடியில் ஐம்பது குடிக்கும் மேலாக அந்தணர்கள் இருந்துள்ளனர், இச்செய்தியைக் கேட்ட அவர்கள் குறிப்பிட்ட அவ்விடத்திற்குச் சென்று ஊன்றப்பட்டு இருப்பது வெள்ளியிலான சூலாயுதம் எனத்தெரிந்து அதனைப் பிடுங்கிச் சென்றுவிட்டு, அப்பெண்ணிடம் ஏதோ ஊன்றப்பட்டுள்ளது என பொய்யாகக் கல்லை மட்டும் காட்டி அதற்கு மஞ்சள், குங்குமமிட்டு வழிபாடு செய்துவர உனக்கு நல்லது நடக்கும் எனக் கூறிவிட்டுப் பிராமணர்கள் சென்றுவிட்டனர். இதனை உண்மையென நம்பி ஏதாவது ஒருநாள் சூடம், சாம்பிராணி புகைப்போடுவதனை வழக்கமாக வைத்துள்ளார்.

வயதாகிய அத்தம்பதியினர் இறந்து போய்விட அவர்களின் வழிவந்தவர்கள் வழக்கமாக வழிபட்டு வந்துள்ளனர். பரமக்குடியைச் சேர்ந்த பட்டுநூல்காரர்களில் (சௌராஷ்டிரா) ஒருவர் மை மந்திரத்தில் கைதேர்ந்தவர். அக்காட்டுப்பகுதியில் சென்று கொண்டிருந்த பொழுது; அனைவரையும்

பார்த்தவுடன் மயக்கச் செய்யும் அழகிய உருவத்துடன் ஒரு பெண் குளித்துக் கொண்டிருந்தாள். இவளது அழகில் மயங்கி அப்பெண்ணை வசியமாக்க நினைத்தபொழுது அப்பெண்ணைக் காப்பாற்றுவதற்கு ராயப்பன் சென்று அம்மந்திரவாதியை அடித்துக்கொன்று விடுகிறார், இந்நிகழ்விற்குப் பிறகு அவ்விடத்தில் இருக்கும் தெய்வம் பெண்தெய்வம் எனத் தெரிகிறது.

குறிபார்த்த இடத்தில் அது செல்லியம்மன் என்றும், வெள்ளி சூலாயுதத்தை எடுத்துச் சென்றவர்களைச் சும்மாவிடாது என்றும் கூறி உள்ளனர். அதுபோலவே அவ்வூரில் இருந்த பிராமணர்கள் ஒவ்வொரு குடும்பமாக வெளியேறத் தொடங்கி உள்ளனர். இன்றைய நிலையில் அந்தணர் குடும்பம் கல்லங்குடியில் இல்லை. அவர்களது வாரிசுகள் எங்கிருக்கிறார்கள் அல்லது இல்லையா என்றும் தெரியவில்லை. அந்தளவிற்குச் சக்திவாய்ந்த தெய்வம். கல்லங்குடிக்கு அருகில் கப்படை எனும் ஊரிலுள்ள கருப்பருக்குத் தங்கை எனக் கூறுகின்றனர். அண்ணனும் தங்கையும் வரும்பொழுது அண்ணன் முன்னே சென்றுவிட தங்கை தற்பொழுது கோயில் கொண்டுள்ள இடத்தில் தங்கிவிட்டாள் என்று கூறுகின்றனர். ராயப்பன் மற்றும் ஊர்த்தெய்வமாக இருக்கிறார்.

**கோயில் அமைப்பு**

ஆரம்பக் காலத்தில் கல் மட்டும் ஊன்றப்பட்டு இருந்தது. பின்பு ஓலையும் அதன் வளர்ச்சியாக ஓடும் வேய்ந்துள்ளனர். தற்பொழுது சுற்றிலும் சுற்றுச்சுவருடன் கூடிய இராசகோபுரம் மற்றும் கொடிமரம் அமையப்பெற்றுள்ளது. அம்மனுக்கு எதிரில் முன்மண்டபமும் அர்த்தமண்டபமும் அமைக்கப்பட்டுள்ளது. பலி பீடம் அமைக்கப்பட்டுள்ளது. கருவறையில் அம்மனைத்தவிர பிற தெய்வங்கள் இல்லை. உட்கார்ந்த நிலையில் வலதுகாலை மடித்தும் இடது காலால் மகிடாசூரன் எனும் அரக்கனை மிதித்தபடியும் அமர்ந்தநிலையில் உள்ளார்.

பரிவாரத் தெய்வங்களாகச் சின்னக்கருப்பர், பெரியகருப்பர். சடச்சி, பேச்சியம்மன், ராக்கச்சியம்மன், பத்திரகாளி ஆகிய தெய்வங்களும், அம்மனின் வலது மற்றும் இடதுபுறங்களில் விநாயகரும், முருகனும் வீற்றிருக்கின்றனர். இவ்வனைத்தும் சிலை வடிவில் அமைக்கப்பட்டுள்ளன. அம்மனுக்கு காவலாக சோனையா மற்றும் ராயப்பன் உள்ளனர்.

### 2.8 மஞ்சனப்பேச்சி

தேவகோட்டைக்கு அருகிலுள்ள இறகுசேரியில் இக்கோயில் அமைந்துள்ளது.

**தலவரலாறு**

கேரளத்தில் இருந்து வேட்டையாட சுடலைமாடன் தன்னுடன் அழைத்து வந்த பெண் மஞ்சனப்பேச்சி ஆகும். தமிழகத்தில் இறகுசேரியில் மஞ்சனப்பேச்சியை ஓய்வு எடுக்கச் சொல்லிவிட்டு மாடன் சுடலைக்குச் சென்றுவிட்டார். இந்நேரத்தில் முத்தாலராவுத்தர் எனும் மந்திரவாதியால் மடக்கப்பட்டு பழிவாங்கப்பட்டாள் மஞ்சனப்பேச்சி. இந்நிகழ்வை மாடன் தன் ஞானக் கண்ணால் கண்டு முத்தால ராவுத்தரைக் கொலை செய்துவிடுகிறார். தற்பொழுது கோயில் கொண்டுள்ள இடத்தில் மஞ்சனப்பேச்சிக்குத் தனிச்சன்னதியுடன் வைத்து சிலை வழிபாடு செய்யப்பட்டு வருகிறது.

**கோயில் அமைப்பு**

சுற்றுச்சுவருடன் கூடிய கோயிலுக்குள் தனிக் கருவறையில் அம்மன் வீற்றிருக்கிறாள். கிழக்குமுகம் பார்த்திருக்கும் அம்மனுக்குச் சிறிய வடிவிலான கோபுரம் அமைக்கப்பட்டுள்ளது. நான்கு கரங்களுடன் அமர்ந்த நிலையில் இருக்கும் அம்மன் இடதுகால் மடக்கி வலதுகாலைத் தொங்கவிட்டுள்ளார். காதுகளில் குண்டலமும், கைகளில் ஆயுதமும் ஏந்தியுள்ளார். பேச்சியம்மனுக்குக் கருப்பர் காவல் தெய்வமாக உள்ளார். அம்மனுக்கு நேர் எதிரில் முத்தால இராவுத்தருக்கு சுதையால் பீடம் அமைக்கப்பட்டுள்ளது.

## 2.9 நாகாத்தம்மன் (இராஜநாகேஸ்வரியம்மன்)

தேவகோட்டையின் விரிவாக்கப்பகுதியான இராம்நகரில் இருந்து எழுவன்கோட்டைக்குச் செல்லும் வழியில் துணைமாவட்ட ஆட்சித் தலைவரின் அலுவலகம் அருகில் இக்கோயில் அமைந்துள்ளது.

### தலவரலாறு

சுயம்புவாக வளர்ந்த புற்றினை ஆரம்பத்தில் அவ்வழியாக வருவோர், போவோர் வழிபட்டு வந்துள்ளனர். சிலர் அங்குள்ள பாத்திரத்தில் பால் ஊற்றி வழிபட்டு வந்துள்ளனர். "ஊற்றப்பட்ட பாலினை புற்றுக்குள் இருந்து நாகம் (நல்லபாம்பு) குடித்துச் செல்லு."[58] இதுபோன்று தொடர்ந்து நடைபெற தேவகோட்டை ராம்நகரில் வசிக்கும் பத்திர எழுத்தர் சரசுவதி அவ்வழியாகச் செல்கையில் பாலினை நாய் குடிப்பதனைக் கண்டு மனவேதனை அடைந்துள்ளார். புற்றினைச் சுற்றி சுற்றுச்சுவர் கட்டினால் நாய் உள்ளிட்டவை உள்ளே செல்லமுடியாது என்கிற ஆவல் அவர் மனதில் ஏற்பட சுற்றுச்சுவர் கட்டும் பணியைச் செய்துள்ளார்.

புற்று வளர்ந்திருக்கும் பகுதி அரசு புறம்போக்கு இடம் என்பதால் வட்டாட்சியர், துணை ஆட்சியரிடம் (Deputy Collector) அனுமதி வாங்கி சுற்றுச்சுவர் கட்டி முடித்துள்ளார். நாகேஸ்வரி அம்மன் சிலையையும் வைத்துவிட வேண்டும் என மனதில் நினைத்துக் கொண்டிருக்க "சரசுவதியின் கனவில் வந்து எனக்குச் சிலை செய்து வைத்து வணங்கி வாருங்கள். நான் அனைவரையும் காத்தருள்கிறேன் என்று அசரீரீ போல கேட்டுள்ளது."[59] இதனைக்கேட்ட சரசுவதி சிலை செய்யும் பணியைத் தொடங்கியுள்ளார்.

தேவகோட்டை சட்டநாதன் எனும் சிற்பியிடம் சிலை செய்யும் பணியை ஒப்படைக்க அவர் ஒரே கல்லிலான நாகேஸ்வரி அம்மன் சிலை செய்து கொடுக்க அதனைப் புற்றுக்கு அருகில் வைத்து வழிபட்டுள்ளனர்.

**கோயில் அமைப்பு**

இக்கோயிலில் பெரிய கட்டிடம், கோபுரம் இல்லை. சுற்றுச்சுவர் கட்டப்பட்டுள்ளது. வாயிலுக்கு மேல்பகுதியில் சிறிய அளவிலான கோபுரம் காணப்படுகிறது. சுற்றுச்சுவருக்கு உள்பகுதியில் புற்றுத் தெரியாத அளவில் சிமெண்ட் தளம் அமைக்கப்பட்டு நாகேசுவரியம்மன் சிலை வைக்கப்பட்டுள்ளது. புற்று வளர்ந்த பகுதிக்கு மேல் அதாவது சுற்றுச்சுவருக்கு மேல்பகுதியில் உத்திரம் போல் அமைக்கப்பட்டு பெரிய அளவிலான நாகேஸ்வரி அம்மனின் சிலை ஒன்று வைக்கப்பட்டுள்ளது. நான்கு கரங்களுடன் அமர்ந்த நிலையில் காணப்படுகிறது. மேல்கூரை இல்லாமல் வெட்டவெளியில் அமையப் பெற்றுள்ளது. இதுகுறித்து சரசுவதி கூறுகையில் கேரளாவில் நம்பூதரிகளிடம் பிரசன்னம் கேட்டதாகவும், அவர்கள் மேல்கூரை இல்லாமல் தான் அம்மன் இருக்க ஆசைப்படுகிறாள். எனவே மேல்கூரை கட்ட வேண்டாம் என்று கூறிவிட்டதாகக் கூறுகிறார். “வேம்பு சக்தியின் வடிவமாக போற்றப்படுகிறது.”[60] இக்கோயிலில் வேம்பும், சிவனின் அம்சமாகக் கருதப்படும் அரசமரமும் ஒன்றையொன்று பின்னிப்பிணைந்து வளர்ந்திருப்பது சிறப்பாகும்.

**2.10 ஆற்றங்கரை நாச்சியம்மன்**

தேவகோட்டையிலிருந்து பதினைந்து கிலோமீட்டர் தூரத்தில் உள்ள ஈகரை கிராமத்தில் ஆற்றின் மறுகரையில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

**தலவரலாறு**

மழைக்காலங்களில் ஆற்றில் தண்ணீர் அதிகமாக வருவது வாடிக்கையான ஒன்றாகும். அம்மன் சிலைகள் பேழைக்குள் அடைக்கப்பட்டு ஆற்றில் மிதந்து வந்திருக்கிறது. இப்பேழையை பல தலைமுறைகளுக்கு முன்பு இவ்வூரில் வாழ்ந்த நன்னி பூசாரி என்பவர் கண்டெடுத்திருக்கிறார். இவர் தற்பொழுது கோயிலின் பூசாரி மற்றும் நிருவாகியாக இருக்கும் பெரியகருப்பனின் மூதாதையர் ஆவார்.

ஆற்றில் மிதந்த பேழையைத் திறந்து பார்க்க அதில் ஐம்பொன்னாலான அம்மன் சிலை இருந்திருக்கிறது. அதனைக் கண்டு ஆச்சரியமும், அச்சமும் கொண்டு அம்மனின் சிலையை ஆற்றின் வடகரையில் கூரைவீடு கட்டி அவ்வீட்டின் மையப்பகுதியில் வைத்து அதற்கு வழிபாடு செய்து வந்துள்ளார்.

தண்ணீர் அதிகம் வரும்பொழுது கூரையை இடித்துச் சென்றுவிடும். இப்படி இரண்டுமுறை நடைபெற்றுள்ளது. கூரை மட்டும் இடியும். சிலை வைத்த இடத்திலேயே இருக்கும். இதனால் ஆற்றின் கரைக்குச் சற்றுத்தள்ளி தண்ணீர் செல்லாத இடத்தில் தற்பொழுது வைக்கப்பட்டுள்ளது. இக்கோயிலுக்குத் தேவகோட்டையைச் சேர்ந்த அரு.அரு. (இரட்டை ஆனாரூனா என்பர் பேச்சுவழக்கில்) செட்டியார் ஈகரை பகுதியில் வயல்வெளிகளைக் குத்தகைக்கு எடுத்திருக்கிறார். அதன்மூலம் வந்த வருவாயிலும், நன்னி பூசாரியின் வகையறாக்கள், மற்றும் கிராமப் பொதுமக்களும் சேர்ந்து சிறிய மூலக்கோபுரத்துடன் கோயில் கட்டியுள்ளனர்.

**கோயில் அமைப்பு**

கருவறை உள்ளடக்கிய சிறியகோபுரம், அர்த்தமண்டபம், மற்றும் முன்மண்டபத்துடன் கட்டப்பட்டுள்ளது. இவைகள் ஓட்டுக்கொட்டகையால் ஆனது. கருவறை மட்டும் கருங்கல்லால் வடிவமைக்கப்பட்டுள்ளது. சுற்றுச்சுவருடன் இத்தலம் அமைந்துள்ளது.

கிழக்குப்பார்த்து அமர்ந்திருக்கும் ஆற்றங்கரை நாச்சியம்மன் எட்டுக்கரங்களுடன் உட்கார்ந்த நிலையில் கைகளில் ஆயுதம் தாங்கி ஒருகால் மடித்தும் மறுகால் தொங்கவிட்ட நிலையிலும் உள்ள அம்மன் சாந்தமான உருவத்துடன் காணப்படுகிறாள். இச்சிலையானது ஆற்றில் மிதந்து வந்த ஐம்பொன்சிலை அல்ல. பிற்காலத்தில் ஊர்மக்களாலும், நன்னி பூசாரி வகையறாக்களாலும் செய்து வைக்கப்பட்டது ஆகும்.

கருவறையின் இருபுறமும் கணேசரும், முருகனும் இருக்க கருப்பர், சோனை இரண்டு தெய்வங்களும் மேற்கு முகமாக இருக்கின்றனர். காளியம்மனும், பேச்சியம்மனும் கிழக்குமுகமாக வீற்றிருக்கின்றனர். பரிவாரத்தெய்வங்கள் அனைத்தும் சிலை அமைப்புடன் காணப்படுகிறது. தனித்தனி கருவறைகளும் அமைக்கப்பட்டுள்ளன.

கருவறைக்கு நேரெதிரில் சேங்கை அமைக்கப்பட்டுள்ளது. திருவிழாக் காலங்களில் மூலவர் எட்டுநாளைக்கு இங்கிருக்கும். மிகவும் நேர்த்தியுடன் சதுரவடிவில் சிமெண்ட் உள்ளிட்ட செங்கற்களால் அழகாகக் கட்டப்பட்டுள்ளது. இதுபோன்ற சேங்கை களஆய்விற்குச் சென்ற பகுதியில் வேறுறெங்கும் காணப்படவில்லை. இக்கோயிலில் மது எடுப்புத் திருவிழா 11 ஊர்க்காரர்களால் நடத்தப்பட்டு வருகிறது.

## 2.11 ஆண் தெய்வங்கள்

ஆண், பெண் என்ற வகைப்பாடு அனைத்து உயிரினங்களிலும் உண்டு. தெய்வநிலையிலும் இவ்வகையான வேறுபாடு காணப்படுகிறது. நாட்டுப்புறவியல் ஆராய்ச்சியாளர் சு.சக்திவேல். “ஆண் தெய்வங்கள், பெண் தெய்வங்கள்”[61] என வகைப்படுத்துகிறார். பெண் தெய்வங்கள் பெரும்பாலும் ஊரின் மையப்பகுதியிலும் ஆண் தெய்வங்கள் ஊருக்குப் புறத்திலும் அதிகமாக இருப்பதனைக் காணமுடிகின்றது.. காரணம் ஆண் தெய்வம் பெரும்பான்மை காவல் தெய்வமாகவே பார்க்கப்படுவதாகும். இவை மக்கள், ஊர், எல்லை போன்றவற்றினைக் காக்கும் காவல் பணியினை செய்வதாக மக்கள் நம்புகின்றனர். “கிராமப்புறங்களில் ஊருக்கு வெளியே ஆண் தெய்வங்கள் மிகுதியாய் உள்ளன. முனியாண்டி, கருப்பர், ஆகாசக்கருப்பர், சின்னக்கருப்பர், பெரியகருப்பர், ஐயனார், கோட்டைக்காரமுணி, சோலையாண்டவர், நொண்டியையா போன்ற தெய்வங்களைக் குறிப்பிடலாம்”[62] என்கிறார் பாண்டி. பொதுநிலையில் ஆண் தெய்வங்கள் எனக் கொண்டாலும் இவை காவல்

தெய்வம் மட்டுமன்றி சில இடங்களில் குலதெய்வமாகவும், கிராம தேவதைகளாகவும் காட்சி அளிக்கின்றனர்.

நாட்டார் வழிபாட்டில் பெண் தெய்வங்களைவிட ஆண் தெய்வங்கள் குறைவாகும். மாரியம்மன், காளியம்மன் போன்ற கோயில்கள் இல்லாத ஊர்கள் இல்லை எனலாம். ஆண் தெய்வங்கள் மிகக் குறைவாக களஆய்வில் காணமுடிந்தது. தேவகோட்டை வட்டாரக்கோயில்களில் ஆய்விற்கு உட்படுத்தப்பட்ட ஆண் தெய்வங்கள் அட்டவணைப்படுத்தப்பட்டுள்ளன.

**தேவகோட்டை வட்டாரக்கோயில்களில் ஆய்விற்கு உட்படுத்தப்பட்ட ஆண் தெய்வங்கள்**

| வ.எண் | கோயிலின் பெயர் | ஊர் |
|---|---|---|
| 1. | வேலாயுதம் ஐயனார் | இலங்குடி |
| 2. | வேம்புடைய ஐயனார் | நல்லாங்குடி |
| 3. | அன்புக்கணக்கு ஐயனார் | நாச்சாங்குளம் |
| 4. | பொய்சொல்லா மெய்யர் | சித்தானூர் |
| 5. | கொட்டுடைய ஐயனார் | கும்மங்குடி |
| 6. | அருள்மிகு வேலாயுதமூர்த்தி ஐயனார் | சுக்கிரபட்டி |
| 7. | பாண்டிமுனிஸ்வரர் | தேவகோட்டை |
| 8. | சங்கரபதிக்கோட்டை தர்மமுனிஸ்வரர் | கண்ணங்கோட்டை |
| 9. | நல்ல முனிஸ்வரர் | சிவந்தான்கோட்டை |
| 10. | நல்லாத்துரை முனிஸ்வரர் | கண்டியன் புதுவயல் |
| 11. | தர்மமுனிஸ்வரர் | வெள்ளூர் |
| 12. | மாவடிக்கருப்பர் | தேவகோட்டை |
| 13. | கொம்படிக்கருப்பர் | மாவிடுதிக்கோட்டை |
| 14. | சுடலைமாடன் | இறகுசேரி |

**தேவகோட்டை வட்டார ஆய்விற்குட்படுத்தப்பட்ட ஆண் தெய்வங்கள் குறித்த வகைப்பாடு**

| வ.எண் | கோயிலின் பெயர் | வகைப்பாடு |
|---|---|---|
| 1. | வேலாயுதம் ஐயனார் | குலதெய்வம் |
| 2. | வேம்புடைய ஐயனார் | ஊர்த்தெய்வம் |
| 3. | அன்புக்கணக்கு ஐயனார் | ஊர்த்தெய்வம் |
| 4. | பொய்சொல்லா மெய்யர் | ஊர்த்தெய்வம் |
| 5. | கொட்டுடைய ஐயனார் | ஊர்த்தெய்வம் |
| 6. | அருள்மிகு வேலாயுதமூர்த்தி ஐயனார் | ஊர்த்தெய்வம் |
| 7. | பாண்டிமுனிஸ்வரர் | பிடிமண் தெய்வம் |
| 8. | சங்கரபதிக்கோட்டை தர்மமுனிஸ்வரர் | பிடிமண் தெய்வம் |
| 9. | நல்ல முனிஸ்வரர் | காவல்தெய்வம் |
| 10. | நல்லாத்துரை முனிஸ்வரர் | குலதெய்வம் |
| 11. | தர்மமுனிஸ்வரர் | குலதெய்வம் |
| 12. | மாவடிக்கருப்பர் | பிடிமண்தெய்வம் |
| 13. | கொம்படிக்கருப்பர் | பிடிமண்தெய்வம் |
| 14. | சுடலைமாடன் | ஊர்த்தெய்வம் |

### 2.11.1 வேலாயுதம் ஐயனார்

தேவகோட்டையில் இருந்து சருகணி செல்லும் சாலையில் பாவனக்கோட்டையில் இருந்து பிரிந்து செல்லும் திருவேகம்பத்தூர் சாலையில் இலங்குடி கிராமத்தில் ஊருக்கு வெளியில் கண்மாய்க்கரை அருகில் கோயில் அமைந்துள்ளது.

**தலவரலாறு**

தமிழகப் பகுதியானது முற்காலத்தில் மன்னர்களின் ஆளுகைக்கு உட்பட்டு இருந்தது. ஒவ்வொரு பகுதியையும் குறிப்பிட்ட மன்னர்கள் ஆட்சி செய்து வந்தனர். சிவகங்கைப் பகுதி மருதுசகோதரர்கள் என அழைக்கப்படும் சின்னமருது, பெரியமருதுவின் ஆட்சி அதிகாரத்திற்கு உட்பட்டிருந்தது. இவ்விருவர்களில் பெரியமருது என்றழைக்கப்படக்கூடியவர். காட்டுவிலங்குகளை வேட்டையாடுவதில் ஆர்வமும், வல்லமையும் உடையவர். இதில் பேய்வாய்ப்புலி எதிர்ப்பட்டால் பெரிய மருதுவின் மகிழ்ச்சிக்கு அளவே இருக்காது. அந்தளவிற்குக் கொடிய விலங்குகளைச் சாதுர்யமாகவும், திறமையாகவும் வேட்டையாடி வாகை சூடுவார். இதனால் இவரை ‘காட்டுராஜா’ என அழைத்தனர்.

இச்சிறப்புடைய மருது சகோதரர்கள் அடர்ந்த காட்டுப்பகுதிகளையே தங்களின் வேட்டையாடும் வேட்டைக்களமாக அமைத்துக் கொண்டனர். அக்காலத்தில் சிற்றூர் பகுதிகளில் வாழ்ந்த மக்களினைக் கொடிய மிருகங்கள் துன்புறுத்திவந்தன. மக்களைக் காப்பதினை மன்னர்கள் பணியாகக் கொண்டனர்.

தற்பொழுது வேலாயுதம் ஐயனார் கோயில் கொண்டுள்ள இளங்குடி இலந்தை மரங்கள் நிறைந்து காணப்பட்ட அடர்ந்த காட்டுப் பகுதியாகும். இப்பகுதியில் வேட்டையாட வந்துள்ள மருது சகோதரர்கள், காட்டுப் பகுதியில் சென்று கொண்டிருக்கும் பொழுது கண்மாய்க்கரையை ஒட்டிய பகுதியில் ஐயனார் சிலை நின்று கொண்டு இருப்பதனைக் கண்டு அவர்கள் ஆச்சரியமும், பரவசமும் அடைந்தனர்.

மருதுபாண்டியர்களால் அப்பகுதி முழுதும் சுத்தப்படுத்தப்பட்டு அவ்விடத்திலேயே ஐயனார் சிலையைப் பிரதிட்டை செய்து வழிபாடு செய்யப்பட்டு கோயில் கட்ட உத்தரவிட்டுள்ளனர். அக்கோயிலின் நிருவாகச்

செலவினங்களுக்குப் பத்து ஏக்கர் நிலத்தை தானமாகக் கொடுத்துள்ளனர். தொடக்க காலத்தில் கூரைகள் வேயப்பட்டு அடுத்தடுத்த காலகட்டங்களில் ஓட்டுக்கொட்டகையாக மாறியது. தற்பொழுது பரந்து விரிந்த கட்டிட அமைப்புகளுடன் பல்வேறு பரிவாரத் தெய்வங்களும் காணப்பெறுகின்றன.

**கோயில் அமைப்பு**

"வேதகாலத்தில் மூன்று விதமாகக் கருவறையை அமைத்தனர். அவை சமசதுரம், வட்டம், முக்கோணம் என்பவை ஆகும். சமசதுரம் தேவலோகத்துடனும், வட்டம் இறந்தவர்களுடனும், முக்கோணம் அக்கினி அல்லது மண்ணுலகத்துடனும் தொடர்புபடுத்தப்படுகிறது. கட்டுமானக் கோயில்களில் சதுர அமைப்புடைய கருவறைகளே பெரும்பாலும் அமைக்கப்பட்டது"[63] என்று அம்பை மணிவண்ணன் கோயிலின் கருவறைகளை வகைமைப்படுத்தியுள்ளார்.

இலங்குடி வேலாயுதம் ஐயனாரின் கருவறையானது சதுரவடிவில் அமைக்கப்பட்டுள்ளது. கோயிலின் வாயிலில் இடதுபுறமும், வலதுபுறமும் சேமங்குதிரைகள் அமைந்துள்ளன. தொடர்ந்து கொடிமரம் கருவறைக்கு எதிராக அமைந்துள்ளது.

மூலவரான ஐயனார் பூரணை புட்கலையுடன் பீடத்தின் மீது அமர்ந்த கோலத்தில் காட்சிதருகின்றார். மூலவர் வலது காலை தொங்கவிட்டும் இடதுகாலை மடக்கியும் அமர்ந்துள்ளார். தலையில் கிரீட மகுடமும், இருபுறங்களிலும் பூரணையும், புட்கலையும் அமர்ந்த கோலத்தில் காட்சி அளிக்கின்றனர். பூரணை வலதுகையைத் தொங்கவிட்டும், இடது கையில் குவளைமலர் ஏந்தியும், புட்கலை இடது கையைத் தொங்கவிட்டும் வலக்கையில் குவளைமலரினை வைத்துக் கொண்டும் அமர்ந்துள்ளனர். இருவருக்கும் கிரீட மகுடம் சூட்டப்பட்டுள்ளது.

“இந்துக்கோயில் ஏதேனும் ஒரு தெய்வத் திருக்கோலத்தை முதன்மையான மூர்த்தியாகக் கொண்டு எழுப்பப் பெற்றிருக்கும். அக்கோலத்தைச் சுற்றி பிற தெய்வத் திருவுருவங்கள் பிரதிட்டிக்கப்பெறுதல் உண்டு. இவ்வாறு முதன்மையான மூர்த்தியைச் சுற்றியிருக்கும் சுற்றுத் தெய்வங்களையே பரிவாரத்தெய்வம்”[64] என்பர் ப.அருணாச்சலம். இக்கோயிலின் பரிவாரத் தெய்வங்களாக சின்னக்காளியம்மன், பெரியகாளியம்மன், அகோர வீரபத்திரர், சின்னக்கருப்பர், பெரியகருப்பர், ஆஞ்சநேயர், மகாஇலக்குமி, பைரவர், சோனையா போன்ற தெய்வங்கள் காணப்படுகின்றன.

சின்னக்காளியம்மன் வடக்குத்திசை நோக்கி அமர்ந்து உள்ளார். வலது கால் குத்திட்டபடியும், இடதுகால் அசுரனை மிதிப்பது போலவும் காணப்படுகிறது. நான்கு கைகளுடன் காட்சி அளிக்கும் அம்மன் நான்கு கைகளிலும் சூலம், சக்கரம், உடுக்கை, கத்தி போன்ற ஆயுதங்களும், காதில் குண்டலமும் கோரைப்பற்கள் இரண்டு வெளியில் தெரியும்படி காட்சிதருகின்றன.

பெரியகாளியம்மனும் மேற்சொன்ன வடிவமைப்புடன் காணப்படுகிறாள். உருவ அமைப்பில் சிறியதாகவும், பெரியதாகவும் இருப்பதால் சின்ன, பெரிய என்ற அடைமொழி கொடுக்கப்பட்டுள்ளது. ஓங்கிய அரிவாளும், கதாயுதமும் தாங்கியபடி சின்னக்கருப்பர், பெரியகருப்பர் நின்ற கோலத்தில் காட்சிதருகின்றனர்.

இக்கோயிலின் காவல் தெய்வமான சோனையா வெளிப்புறத்தில் கிழக்கு நோக்கிய திசையில் நின்ற கோலத்தில் அமைக்கப்பட்டுள்ளது. வலக்கையில் அரிவாளுடனும், முருக்கு மீசையுடனும் காட்சிதருகிறார். இச்சிலை சுதையால் செய்யப்பட்டுள்ளது.

### 2.11.2 வேம்புடைய ஐயனார்

தேவகோட்டை அருகில் உள்ள நல்லாங்குடி எனும் ஊரில் அருள்பாலித்து வருபவர் வேம்புடைய ஐயனார் ஆவார்.

**தலவரலாறு**

தேவகோட்டையின் சுற்றுவட்டாரப் பகுதியில் நல்லாங்குடி ஐயனார் கோயில் மிகவும் பிரசித்தி பெற்றது ஆகும். சுமார் 500 ஆண்டுகளுக்கு மேலாக இக்கோயில் வழிபடப்பட்டு வருகிறது என்பதனைக் களஆய்வின் வழி அறியமுடிகின்றது.

ஆரம்பகாலத்தில் இத்தெய்வம் சுயம்புவாகத் தோன்றியதாகக் கூறுகின்றனர். தற்பொழுது கோயில் கொண்டுள்ள இடத்தில் திட்டுப்போல அமைத்து வழிபடப்பட்டு பின் கோயிலாக கட்டி வழிபாடு செய்து வருகின்றனர்.

**கோயில் அமைப்பு**

கிழக்குமுகமாக பூர்ணை, புட்கலையுடன் ஐயனார் அமர்ந்து உள்ளார். ஊரின் வெளிப்புறத்தில் ஊருணியை ஒட்டி இக்கோயில் அமைந்துள்ளது. கோபுரத்துடன் கூடிய முன்மண்டபம், மகாமண்டபத்துடன் கோயில் காணப்படுகிறது. சுற்றிலும் சுவர் கட்டப்பட்டு வாசலில் இரண்டு சேமங்குதிரைகளுடன் காணப்படுகின்றன. பலி பீடத்தில் யானை அமைக்கப்பட்டுள்ளது. ஐந்து தலையுடன் கூடிய நாகப்பாம்பு படமெடுத்து ஆடுவது போல் செய்யப்பட்டு அதற்குள் சப்த கன்னியர் உருவத்தினை அமைத்துள்ளனர். நாகப்பாம்பின் படம் குடைபோல் காட்சியளிக்கிறது.

முருகனும், விநாயகரும் கருவறையின் முன்பாக அமைக்கப்பட்டுள்ளனர். சின்னக்கருப்பர், பெரியகருப்பர், உளிவீரன் போன்ற பரிவாரத் தெய்வங்கள் தனித்தனிச் சன்னதிகளில் காணப்படுகின்றன. சுற்றிலும் நேர்த்திக் கடனாகச் செலுத்தப்பட்ட மண்ணாலான குதிரைகளும், நாட்டார் குதிரைகளும் காணப்படுகின்றன. பரந்து விரிந்த விசாலமான அமைப்பில் கோயில் கட்டப்பட்டுள்ளது. மண்டபங்களும் காணப்படுகின்றன.

### 2.11.3 அன்புக்கணக்கு ஐயனார்

நாச்சாங்குளத்தில் இக்கோயில் அமைந்துள்ளது.

**தலவரலாறு**

வெட்டிவயல் சேர்க்கையைச் சார்ந்த நாச்சங்குளத்தில் அனைத்துச் சாதியினரும் வசித்து வருகின்றனர். பல ஆண்டுகளுக்கு முன்பாக ஊரையும், மக்களையும், தங்கள் வீட்டில் வளர்க்கும் கால்நடைகளையும் காத்து அருள்வதற்காக ஊர்த் தெய்வமாகிய ஐயனாரை ஊரார் சேர்ந்து அனைத்து மக்களின் சார்பாக வைத்து வழிபாடு செய்து வந்துள்ளனர். இக்கோயில் மிகப் பழங்காலத்தில் கட்டப்பட்டது என்பதனை கட்டிட அமைப்பில் காணமுடிகிறது.

**கோயில் அமைப்பு**

கிழக்குமுகம் பார்த்து பூர்ணா, புட்கலையுடன் அமர்ந்த கோலத்தில் ஐயனார் காட்சிதருகிறார். மூலகோபுரம் இன்றி கருவறையில் பீடம் அமைக்கப்பட்டுள்ளது. ஐயனாரின் பரிவாரத் தெய்வங்களாக பெரிய கருப்பர், சின்னக்கருப்பர். சங்கிலிக் கருப்பர், ராக்கச்சி, காளி, பேச்சி, ஆஞ்சநேயர், கன்னிமார், சோனை, விநாயகர், முருகன், அகோரவீரபத்திரர் ஆகிய தெய்வங்கள் சிலை அமைப்புடன் காணப்படுகின்றது. சேமங்குதிரைகள் கோயிலின் முன்பாக காணப்படுகின்றது.

### 2.11.4 பொய்சொல்லா மெய்யர்

சித்தானூரில் அமையப்பெற்றுள்ள ஐயனார் பொய்சொல்லா மெய்யர் என்ற அடைமொழியுடன் அழைக்கப்படுகின்றது.

**தலவரலாறு**

இக்கோயிலிலுள்ள சிலையானது சுயம்புவாக தோன்றியதென களஆய்வில் அறியமுடிகின்றது. தற்பொழுது கோயில் கொண்டுள்ள இடத்தில் திட்டுப்போன்ற பகுதியில் வைத்து பொய்சொல்லா மெய்யரை வழிபட்டு வந்துள்ளனர். பின்பு பீடம் அமைத்து வழிபடப்பட்டு வருகிறது. நூறாண்டுகளுக்கு முன்னர் தோன்றிய பழமையான கோயில் ஆகும்.

**கோயில் அமைப்பு**

வெட்டவெளியில் மேல்கூரையின்றி பீடம் அமைக்கப்பட்டு பூர்ணா, புட்கலா தேவியருடன் அய்யனார் அமர்ந்த கோலத்தில் உள்ளார். கோபுரங்கள், சுற்றுச்சுவர் இல்லை. ஊருக்கு வெளியில் கண்மாய்க்கரை ஒட்டிய பகுதியில் அமைந்துள்ளது.

கிழக்குமுகமாக அமையப்பெற்ற இக்கோயிலில் கருப்பர், முனீஸ்வரர் பரிவாரத் தெய்வங்களாக இருக்கின்றன. யானை வாகனம் நந்தியாக உள்ளது. பலிபீடம் அமைக்கப்பட்டுள்ளது. வழிபாடுகள், மற்றும் அபிடேகப் பணிகளைச் சிறுவனூர் வேளாளர்கள் செய்து வருகின்றனர்.

**2.11.5 கொட்டுடைய ஐயனார்**

தேவகோட்டை அருகிலுள்ள கும்மங்குடியில் இக்கோயில் அமைந்துள்ளது.

**தலவரலாறு**

அழகப்பன் என்பவருடைய மூதாதையர் "தினமும் காலையில் எழுந்தவுடன் ஊருக்குக் கிழக்கே செல்லும் பொழுது குறிப்பிட்ட இடத்தில் கால் தடுக்கி விழுந்திருக்கிறார். இந்நிகழ்வு மூன்று முறை நிகழ்ந்து இருக்கிறது. அவ்விடத்தில் மண்வெட்டியால் வெட்டிப்பார்த்துள்ளார். நித்திய பிரம்மச்சாரி வடிவில் அய்யனார் சிலை இருந்துள்ளது"[65] நாட்டார் தெய்வ வழிபாட்டில் மண்ணில் புதையுண்ட தெய்வங்கள் பல இடங்களில் சிலைகளாக கிடைத்துள்ளது.

கும்மங்குடியில் ஊர்ப்பொதுமக்கள் அவ்வழியாகத்தான் கால் இடறியது குறிப்பிட்ட ஒரு நபருக்கு மட்டுமாகும். பல தலைமுறைகள் கடந்துவிட்டதால் அவரது பெயர் தெரியவில்லை எனக் கூறிவிட்டனர். கண்டெடுக்கப்பட்டச் சிலையை பெற்றுக் கொண்டவர் தற்பொழுது கோயில் கொண்டுள்ள இடத்தில் நட்டுவைத்து வழிபாடு செய்துள்ளார். பொதுவான நிலையில் ஐயனார் கோயில்களில் பூர்ணை, புட்கலா என்று அவரது மனைவியர் அமர்ந்த நிலையில்

இருப்பார். இங்கு கிடைக்கப்பெற்ற சிலை மனைவியர் இல்லாத பிரம்மச்சாரி நிலையில் கிடைத்துள்ளது வியப்பளிக்கின்றது என்கின்றனர் ஊர்ப்பொதுமக்கள்.

இச்சிலையை கண்டெடுத்த வாரிசுகளில் ஒருவரான அழகப்பன் யாதவ் பூசை மற்றும் நிருவாகத்தினைக் கவனித்து வருகிறார். திருவிழாக் காலங்களில் வேளாளர்கள் வழிபாடு செய்கின்றனர். வெட்டுப்பட்டு கிடைத்ததால் வெட்டுடைய ஐயனார் என அழைக்கப்பட்டுப் பிற்காலங்களில் கொட்டுடைய ஐயனார் எனப் பெயர் மருவி இருக்கலாம் என்பது ஆய்வாளரின் கருத்தாகும்.

**கோயில் அமைப்பு**

தொடக்க காலத்தில் திட்டுப்போல கட்டப்பட்டு வைக்கோலாலான கொட்டகையில் ஐயனார் சிலை வைக்கப்பட்டு வழிபாடு செய்து வந்துள்ளனர். 1973-க்குப் பிறகு இக்கோயிலை விரிவுபடுத்திக் கட்டி குடமுழுக்குச் செய்து தற்பொழுது சிறியளவிலான மூலக்கோபுரத்துடன் கூடிய கருவறை, அர்த்தமண்டபம் மற்றும் முன்மண்டபத்துடன் காணப்படுகிறது. அதன் உட்பகுதியில் புதிதாகதொரு கோயிலும் புதியனதாக ஐயனார் சிலையும் செய்யப்பட்டு கருவறையில் வைக்கப்பட்டுள்ளது.

கண்டெடுக்கப்பட்ட சிலை கருவறைக்கு வெளியில் முன்னர் இருந்த இடத்திலுள்ளது. முருகன், விநாயகர், கருப்பர், காளி போன்றவை பரிவாரத் தெய்வங்களாக அமையப்பெற்றுள்ளது. கருப்பர் அரிவாளுடன் நின்ற நிலையிலும், காளி நான்கு கரங்களுடன் அமர்ந்த நிலையிலும் காணப்படுகின்றனர். “ஒவ்வொரு பூசையின் பொழுதும் பழைய ஐயனார் சிலைக்கு அர்ச்சனை, அபிடேகம் செய்த பின்புதான் புதிதாக உள்ள சிலைக்குச் செய்யப்படுகிறது”[66] என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

**2.11.6 அருள்மிகு வேலாயுதமூர்த்தி ஐயனார்**

தேவகோட்டைக்கு அருகிலுள்ள சுக்கிரபட்டியில் இக்கோயில் அமைந்துள்ளது.

**தலவரலாறு**

பழமை வாய்ந்த இக்கோயில் வெள்ள நீரில் மிதந்து வந்து கரை ஒதுங்கிய தெய்வம் ஆகும். இச்சிலையின் சக்தி அறிந்த மந்திரவாதி ஒருவன் இதனை கைப்பற்றி அதன் சக்திகளைத் தன்வசப்படுத்த வேண்டும் என்ற வேட்கையுடன் பச்சைக்குடில் அமைத்து ஆற்றின் கரையோரம் தங்கிவிட்டான்.

"மந்திரவாதியின் கையில் தான் சிக்கிவிடக்கூடாது என்று ஐயனார் நினைக்கிறார். ஐயனாரை எப்படியும் கைப்பற்ற வேண்டும் என மந்திரவாதி நினைக்கிறான். இந்நிலையில் ஐயனாரை மந்திரவாதி பிடிக்க முடியவில்லை. அதேவேளையில் ஐயனாரால் மந்திரவாதியை விரட்டவும் முடியவில்லை. வெளியேற்ற முடியாத காரணத்தினால் கொன்றுவிட வேண்டும் என ஐயனார் முடிவு செய்கிறார்."[67]

இந்நிகழ்வுகளைச் சுக்கிரபட்டியில் உள்ள ஒருவரின் கனவில் சென்று தெய்வம் கூறியுள்ளது. கரை ஒதுங்கி இருப்பதனையும், மந்திரவாதியின் நிலையையும் கூறியதுடன் தான் பிள்ளைப்பூச்சி உருவமெடுத்து அவனைக் கொன்றுவிடுவேன். அவனைப் புதைத்துவிட்டு என்னை வணங்கி வாருங்கள் எனக் கூறியதாகக் கூறுகின்றனர். அதேபோல் பிள்ளைப்பூச்சி உருவமெடுத்து அவன் இருக்கும் இடத்திற்கும் நேராக மண்ணுக்குள் இருந்து வெளிவந்து ஆசனவாய் வழியாக உடலுக்குள் செல்ல நாக்குத்தள்ளி இறந்துவிடுகிறான். "கனவில் நடந்த நிகழ்வுகளும், நேரில் நிகழ்ந்த சம்பவங்களும் கிராமத்து மக்களுக்கு ஆச்சர்யமும், அச்சமும் கலந்த நிகழ்ச்சியாக இருந்தன."[68]

(இறந்துபோன மந்திரவாதியை எங்கு, எப்படி புதைத்தனர் என்பது பற்றிய சம்பவங்கள் தெரியவில்லை எனக் கூறிவிட்டனர்.) அதன் பிறகு ஐயனாரின் சக்தியை உணரத் தொடங்கினர். ஊரினையும், ஊர் மக்களையும், காடுகழனிகளையும் காத்தருள வேண்டும் எனக்கருதி ஆற்றின் கரையோரத்தில்

திட்டுப்போல் அமைக்கப்பெற்று சிலைகளை நட்டுவைத்து வழிபாடு செய்து வந்துள்ளனர்.

ஆற்றின் வெள்ளம் கரைபுரண்டு ஓடினாலும் கோயில் இருக்கும் இடத்தில் மட்டும் தண்ணீர் மேலேறி வருவதில்லை. இது இன்றளவும் நடக்கிறது என்கின்றனர். இத்தெய்வம் பள்ளர் என்று அழைக்கக்கூடிய தேவேந்திரகுல வேளாளருக்கும் பிற சாதியினருக்கும் குலதெய்வமாக உள்ளது. பொதுவான நிலையில் காவல் தெய்வமாகக் காட்சியளிக்கிறது.

**கோயில் அமைப்பு**

நீண்டகாலமாக மண்திட்டில் இக்கோயில் இருந்துள்ளது. தற்பொழுது செங்கற்களால் சிறிய பீடம் அமைக்கப்பட்டு பூரண, புட்கலா தேவியருடன் கிழக்குத்திசை நோக்கி அமைக்கப்பட்டுள்ளார். பீடத்திற்கு முன்பாக விநாயகர் சிலையும் முருகன் சிலையொன்றும் காணப்பெறுகிறது.

“கோபுரம், மேல்கூரை உள்ளிட்ட எந்தவிதமான கட்டிடமும் இக்கோயிலில் இல்லை. ஊராரும், கோயிலுக்குச் சொந்தமானவர்களும் கட்டிடம் கட்டத் தீர்மானித்து பலமுறை திருவலம் கேட்டிருக்கிறார்கள். சாமி ஆடுபவர்களிடமும் உத்தரவு கேட்டுள்ளனர். ஐயனார் ஒத்துக் கொள்ளவில்லை நான் வெட்ட வெளியில் தான் இருப்பேன்”[69] என்மீது எந்த நிழல்படக்கூடாது எனக்கூறிவிட்டதாகக் கூறுகின்றனர்.

இந்நிகழ்விற்குச் சாட்சியாக பீடத்தின் அருகிருந்த பனைமரத்தின் நிழல் சிலையின் மீது விழுந்தவுடன் மரம் பட்டுப்போய்விட்டதென கூறுகின்றார்.

இதனால் கட்டிடம் கட்டப்படவில்லை என்று வேலு காரணம் கூறுகிறார். கோயிலைச்சுற்றி கம்பிகளால் வேலி கட்டப்பட்டுள்ளது.

### 2.11.7 பாண்டி முனீஸ்வரர்

தேவகோட்டையின் விரிவாக்கப் பகுதியான ரெகுநாதபுரம், கைலாசநாதபுரம், சிதம்பரநாதபுரம் மூன்று இடங்களும் சந்திக்கும் சந்திப்பில் பாண்டியங்கோட்டை முனீசுவரர் கோயில் அமையப்பட்டுள்ளது. இவ்விடத்தினைப் பாண்டியங்கோட்டை பொட்டல் என்று இன்றளவும் மக்கள் அழைத்து வருகின்றனர்.

**தலவரலாறு**

இராமநாதபுரம் மாவட்டத்தில் பாண்டியங்கோட்டை முனீசுவரர் ஆலயம் உள்ளது. பாண்டியர்களின் ஆளுகைக்கு உட்பட்டிருந்ததால் இப்பெயர் பெற்றதாகக் கூறுகின்றனர். மருது சகோதரர்களின் ஆளுகைக்கு உட்பட்டிருந்த சிவகங்கை சமஸ்தானத்தைச் சேர்ந்த செட்டிநாட்டுப் பகுதியான தேவகோட்டையில் இப்பாண்டிசுவரர் கோயிலை கட்ட வேண்டும் என பல்லாண்டுகளுக்கு முன்பாக இறகுசேரியில் அமைந்துள்ள சுடலைமாடன், பேச்சியம்மன் ஆகிய தெய்வங்களை வழிபடுகின்ற பிள்ளைமார்கள் (வெள்ளாளர்கள்) வழியில் வந்த இராமசாமிபிள்ளையின் மூதாதையர்களால் பாண்டியங்கோட்டை முனீஸ்வரர் ஆலயத்தில் தலைவாசல்படியை ஒட்டியுள்ள பூமிப்பகுதியில் கைப்பிடி மண்ணெடுத்து மஞ்சள் துணியில் கட்டி தற்பொழுது கோயில் கொண்டுள்ள இடத்தில் பூமிக்கடியில் புதைத்து வைத்து அவ்விடத்தில் மேடை அமைத்து வழிபாடு செய்து வந்துள்ளனர்.

இதனைப் பாண்டிமுனீசுவரர், பாண்டியங்கோட்டை முனீசுவரர் என்று அழைத்து வருகின்றனர். ஆரம்ப காலகட்டங்களில் இப்பகுதி அடர்ந்த காட்டுப்பகுதியாக இருந்துள்ளது. கோயிலைச்சுற்றி குடியிருப்புப் பகுதிகள் வந்துவிட்டன.

**கோயில் அமைப்பு**

சிறிய கோபுரத்துடன் கூடிய கருவறை, அர்த்தமண்டபம் மற்றும் முன்மண்டபத்துடன் கோயில் அமையப்பட்டுள்ளது. பலிபீடம் காணப்படுகிறது. மூலவரான முனீசுவரருக்கு சிலையில்லை.

கருவறையில் மேடை அமைக்கப்பட்டு சூலாயுதம் நடப்பட்டுள்ளது. திருவிழாக்காலங்களில் சிலை போன்ற அமைப்புடன் செய்யப்பட்டு வழிபாட்டிற்கு வைக்கப்படுகிறது. கருவறையின் இடதுபுறமும், வலதுபுறமும் விநாயகர் மற்றும் முருகன் வீற்றிருக்கின்றனர்.

கிழக்குத்திசை நோக்கியிருக்கும் இக்கோயிலில் பரிவாரத் தெய்வங்கள் கிடையாது. சுற்றிலும் இரும்புக் கம்பிகளால் அழகிய வேலைப்பாடுகளுடன் கூடிய பாதுகாப்பு வளையங்கள் அமைக்கப்பட்டுள்ளன. பழங்காலத்து அரசமரம் இவ்வாலயத்தின் தலவிருட்சமாக உள்ளது. இத்திருக்கோயிலுக்கு 27.05.2001 ஞாயிற்றுக்கிழமையும் அதனைத் தொடர்ந்து 05.06.2014 வியாழன் அன்றும் குடமுழுக்கு நடைபெற்றிருக்கிறது.

**2.11.8 சங்கரபதிக்கோட்டை தர்மமுனீஸ்வரர்**

தேவகோட்டை அருகிலுள்ள கண்ணங்கோட்டையில் அமைந்துள்ளது.

**தலவரலாறு**

கண்ணங்கோட்டையைப் பூர்வீகமாகக் கொண்ட வீரமுத்துவின் குடும்பம் சிலகாலம் அமராவதிபுதூர் அருகிலுள்ள கல்லுப்பட்டியில் குடியிருந்தார்கள். அச்சமயத்தில் வீரமுத்துவின் தந்தை வீட்டின் அருகிலுள்ள புளியமரத்தில் முனீஸ்வரர் குடிகொண்டிருப்பதாகக்கூறி வெள்ளி, செவ்வாய்க் கிழமைகளில் சாம்பிராணி புகைபோட்டு இருக்கிறார். “மக்கள் உருவாக்கிய தெய்வங்கள், கண்மாய்க்கரை, கருவேலமரம், ஒத்தைப்பனை, நட்டநடுக்கல், சுடுகாட்டுமூலை, ஆலமரஉச்சி, ஊர்எல்லை, பாம்புப்புற்று, வேல்கம்பு, மரப்பெட்டி, கூரச்சேலை

என இவற்றிலேதான் இருக்கும்”[70] என்னும் அறிஞரின் கூற்றுப்படி இத்தெய்வம் புளியமரத்தில் இருந்ததாக நம்பப்பட்டுள்ளது. சில வருடங்கள் கழித்து வீரமுத்து தனது குடும்பத்துடன் பூர்வீகமான கண்ணங்கோட்டைக்குக் குடிபெயர்ந்துள்ளார்.

காரைக்குடியில் வேலை செய்துவந்த வீரமுத்து அமராவதிபுதூர் வழியாக மிதிவண்டியில் சென்று வருவார். அப்பொழுது சங்கரபதி முனீசுவரர் கோயிலில் தினமும் சாமிகும்பிட்டுச் செல்வார். தனது தந்தையார் கல்லுப்பட்டியில் புளியமரத்தில் முனீசுவரர் வைத்து வழிபட்டது போல நாம் இருக்கும் இடத்தில் வைத்துக் கும்பிட வேண்டும் என்ற கருத்தோட்டம் மனதில் ஓடியிருக்கிறது. இதன் செயல் வடிவம் கண்ணங்கோட்டையில் உள்ள சங்கரபதி முனீசுவரர் ஆலயம் ஆகும்.

“1977-ல் சங்கரபதிக்கோட்டையிலுள்ள முனீஸ்வரர் கோயிலில் கல் எடுத்துவரப்பட்டு அக்கல்லில் அரிவாளால் சூலாயுதம் வரைந்து கண்மாய்க்கரையில் புளியமரத்துக்கருகில் பிரதிட்டை செய்து வழிபாடு செய்து வந்துள்ளார்.”[71] ஒரு இடத்தில் உள்ள தெய்வத்தைப் பிரிதோர் இடத்திற்கு எடுத்துச் செல்வதற்குப் பிடிமண் எடுத்துச் சென்று வைத்து வழிபடுவர். ஆனால் இங்குப் பிடிமண்ணிற்குப் பதிலாகக் கல் எடுத்துவரப்பட்டு நடப்பட்டுள்ளது. சாமி கும்பிடுவதற்கு யார் வேண்டுமானாலும் வரலாம். ஆனால் இத்தெய்வம் வீரமுத்து குடும்பத்தார்க்கு மட்டும் உரிமையுடையது ஆகும்.

**கோயில் அமைப்பு**

பீடத்துடன் சுற்றுச்சுவரும் மேல்கூரையும் அமைக்கப்பட்டுள்ளது. சிலையில்லை, சூலாயுதமும் ஊன்றப்பட்டுள்ளது. முறுக்கு மீசையுடன் முனீசுவரர் உருவம் சுவரில் வரையப்பட்டுள்ளது.

சோனை, கருப்பர், மதுரைவீரன், காளி ஆகிய பரிவாரத் தெய்வங்களுக்கு சூலாயுதம் மட்டும் ஊன்றி அவைகளுக்கு நேரில் சுற்றுச்சுவரில் பெயர் எழுதப்பட்டுள்ளது. மூலவர், பரிவாரத்தெய்வங்கள் எதற்கும் சிலை அமைப்பு கிடையாது. பூவேலைப்பாடுள்ள பளிங்குக்கற்களால் அழகுபடுத்தப்பட்டுள்ளது. 2002-ஆம் ஆண்டு ஆனி மாதம் 31-ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை முதல் குடமுழுக்கு நடைபெற்றுள்ளது.

### 2.11.9 நல்ல முனீசுவரர்

தேவகோட்டை இராமேஸ்வரம் தேசிய நெடுஞ்சாலையில் சிவந்தான்கோட்டைக்கு உட்பட்ட எல்லையில் அமைந்துள்ளது.

**தலவரலாறு**

ஐந்நூறு ஆண்டு பழமை வாய்ந்த இக்கோயில் தொடக்கத்தில் ஈச்சஞ்செடி படர்ந்த காட்டுப்பகுதியில் இருந்துள்ளது. அக்காலத்தில் இதுபோன்ற தேசிய நெடுஞ்சாலைகளில்லை. ஒரு செடியை ஒட்டிய பகுதியில் கல் மட்டும் ஊன்றப்பட்டு இருந்திருக்கிறது. அவ்வழியாகச் செல்வோர் வருவோர் சாமியாக நினைத்து வழிபட்டுச் சென்றுள்ளனர்.

காலம் செல்லச்செல்ல இத்தெய்வத்தின் சக்தி ஊர் மக்களிடம் பரவியிருக்கிறது. அதிகமாக நேசிக்கத் தொடங்கி இருக்கின்றனர். இதன்பலனாக மக்கள் நினைத்ததை நிறைவேற்றிக் கொடுத்து இருக்கிறது. நோய்நொடியில் இருந்து மக்களைக் காப்பாற்றியுள்ளது. அதன்பின் ஊரார் சேர்ந்து இடம் சுத்தம் செய்து கல்லில் சூலாயுதம் மற்றும் முனீஸ்வரர் உருவம் பொரித்து வழிபாடு செய்து வருகின்றனர். கோயிலருகில் பழமையான ஆலமரமுள்ளது. தலைமுறைகள் கடந்தும் அம்மரம் விழுதுகள் விடுவதில்லை. விழுதுகள் விட்டால் தேசிய நெடுஞ்சாலை அடைபடும். அதனை வெட்டுவதற்கு நெடுஞ்சாலைத்துறையினர் உயர்நீதிமன்றம் சென்றும் தீர்ப்பு கிராமத்தார்

களுக்குச் சாதகமாக வந்துவிட்டது. இது முனீஸ்வரரின் அருட்பார்வை என்றும், விழுதில்லாத இம்மரமும் இறைவனின் அருள்தான் காரணம் எனக் கூறுகின்றனர்.

**கோயில் அமைப்பு**

சாலையின் ஓரத்தில் அமைந்துள்ள இக்கோயில் காவல் தெய்வமாகக் காட்சி அளிக்கிறது. ஆரம்ப காலத்தில் கல் மட்டும் இருந்துள்ளது. பின்பு பீடம் அமைக்கப்பட்டு ஒரே கல்லில் சூலாயுதம் மற்றும் முனீஸ்வரர் உருவத்துடன் காணப்படுகிறது. முன்னோடி தெய்வமாக கருப்பர் இருக்கிறார். இதற்குச் சிலை கிடையாது. சூலாயுதம் ஊன்றப்பட்டுள்ளது. ஓட்டுக் கொட்டகையில் அமைந்துள்ளது. சூலாயுதம், வெண்கலமணி ஆகியவை நேர்த்திக்கடனாக ஆலமரத்தைச் சுற்றிக் காணப்படுகிறது. குழந்தைப்பேறு வேண்டி தொட்டில்களும் கட்டியுள்ளனர்.

**2.11.10 நல்லாத்துரை முனீசுவரர்**

தேவகோட்டையில் இருந்து கல்லல் செல்லும் சாலையிலுள்ள கண்டியன் புதுவயலில் இக்கோயில் அமைந்துள்ளது.

**தலவரலாறு**

இருமதி எனும் கிராமத்தைச் சேர்ந்த பாலன், நல்லான் இவ்விருவரும் பல நூறு ஆண்டுகளுக்கு முன் காடுகாத்தல் தொழிலைச் செய்து வந்துள்ளனர். அக்காட்டில் மாடு இறந்துகிடந்துள்ளது. இம்மாடு மதுரை மீனாட்சியம்மன் கோயிலிலுள்ள மொட்டைமுனீசுவரர் கோயிலுக்கு நேர்த்திக்கடனாக நேர்ந்துவிட்டதாகும். இதனைப் பாலனும், நல்லானும் அறியவில்லை. மாட்டுத்தோலை உரித்தெடுக்க இருவரும் பேசி முடிவிற்கு வந்துள்ளனர்.

நல்லான் மாட்டினைத் தொட்டவுடன் அவ்விடத்திலேயே துடிதுடித்து இறந்து போகிறான். இதனைக் கண்ட பாலன் செய்வதறியாது திகைத்துப் போய் உரியவர்களிடம் சொல்லி மாட்டினையும், நல்லானையும் சேந்தனி கண்மாய்க்கறையில் புதைத்துவிட்டனர்.

“இந்நிகழ்விற்குப் பிறகு சேந்தனி, இருமதி உள்பட சுற்றுவட்டார இருபது ஊர்களில் வசிக்கும் மக்களுக்கு உடல்ரீதியான பாதிப்புகளை இறந்துபோன நல்லான், முனியுடன் சேர்ந்து கொண்டு செய்திருக்கிறார். இப்பாதிப்புகளுக்குக் காரணம் தெரியாமல் அப்பகுதி மக்கள் தவித்துள்ளனர். உடல்பாதிப்பு வரும்பொழுது பாலனிடம் விபூதி வாங்கிப் பூசிக்கொண்டால் பாதிப்பு சரியாகும். இறந்துபோன நல்லான், பாலனிடம் கனவில் வந்து அடிக்கடி பேசுவாராம்.”[72]

நாட்கள் கடந்த நிலையில் நல்லானைப் புதைத்த இடத்தில் பாலன் வெள்ளி, செவ்வாய் தீபமிட்டுச் சாம்பிராணி புகை காட்டி அருகிலிருந்த கருப்பருக்கும் பூசை செய்து வந்துள்ளார். இந்நிலையில் இவருக்கு உள்ளூரில் எதிரிகள் உருவாக ஆரம்பித்துள்ளனர்.

கருப்பருக்கு ஆடு பூசை போடுவது அவ்வூர் வழக்கமாக இருந்துள்ளது. பூசை நடக்கும் பொழுது ஆடு வெட்டும் நேரத்தில் பாலனை உயர்சாதியினர் சிலர் வெட்டி சாக்கில் கட்டிப்போட்டு எதுவும் தெரியாதது போல் பூசை செய்து கொண்டு இருந்தனர். இச்சம்பவத்தை அப்பகுதியில் இருந்த சலவைத்தொழிலாளி பார்த்து செய்வதறியாது திகைக்க கொலைகாரர்கள் பாலனின் மனைவியையும் கொல்லத் திட்டமிட்டுள்ளனர். இச்செயலைக் கண்ட சலவைத் தொழிலாளி பாலன் மனைவியிடம் சொல்வதற்கு ஊருக்குள் ஓடினான்.

அவளது கணவன் கொல்லப்பட்டதையும், அவளையும் கொல்வதற்குத் திட்டமிட்டதையும் எடுத்துச் சொல்லி இரவோடு இரவாக தேவகோட்டை அருகில் உள்ள கோட்டவயலுக்கு அழைத்து வந்திருக்கிறார். கர்ப்பிணியாக இருந்த அப்பெண் பாவனக்கோட்டை அருகில் வரும்பொழுது விடிந்துவிட்டது. வண்ணான் இனி நான் உன்னுடன் வருவதனைப் பார்த்துவிட்டால் என்னைக் கொலை செய்துவிடுவர் எனக்கூறி அப்பெண்ணை போகச் சொல்லிவிட்டு வந்துவிட்டார்.

கோட்டைவயலுக்குத் தன் தாய் வீட்டிற்கு வந்த அக்கர்ப்பிணிப்பெண் ஆண் குழந்தை பெற்றெடுக்கிறாள். அக்குழந்தை வளர்ந்து பெரியவனாகி அவனுக்குத் திருமணம் நடந்து அவன் எட்டுப்பிள்ளைகளை பெற்றெடுக்கிறான். இவ்வெட்டுப் பிள்ளைகளின் வாரிசுகளில் ஒரு பிரிவினரே கண்டியன் புதுவயலில் வசித்து வரும் சுப்பையன் வகையறாக்கள்.

இவ்வாறாக சேந்தனிக் கண்மாய்கரையில் புதைக்கப்பட்ட நல்லான் முனீஸ்வரருடன் சேர்ந்துவிட்டதால் நல்லான் முனீஸ்வரர் என்றும் பின்பு நல்லாத்துரை முனீஸ்வரர் என்றும் மருவியிருக்கிறது. சுப்பையனின் வழித்தோன்றல்களுக்கு நல்லான் குலதெய்வமாக இருந்து வந்துள்ளார். இதனால் வருடாவருடம் சேந்தனிக்குச் சென்று சாமி கும்பிட்டு வந்துள்ளனர்.

அடிக்கடி சென்றுவர முடியாத காரணத்தினாலும், புலம்பெயர்ந்ததினாலும் சேந்தனியில் இருந்து பிடிமண் எடுத்துவரப்பட்டுக் கண்டியன் புதுவயலில் வைத்து வழிபடுகின்றனர். “மக்கள் தொழில், பகைமையுணர்வால் ஏற்படும் போராட்டங்கள், சாதிச் சண்டைகள் போன்ற காரணங்களால் புலம்பெயர்ந்து பிரிதொரு இடத்தில் குடியேறுவதுண்டு. இந்நிலையில் தாங்கள் முன்பிருந்த நிலையில் வழிபட்ட தெய்வத்தை தற்போதைய வசிப்பிடத்தில் வழிபட வேண்டும் என்ற விருப்பத்தினாலும் வழிபடாவிட்டால் தெய்வ குற்றத்திற்கு உட்படுவோம் என்ற அச்சத்தாலும் தெய்வங்களை இடப்பெயர்ச்சி செய்கின்றனர்”[73] என்பதன் மூலம் மனிதன் இடம்பெயரும் பொழுது தெய்வத்தையும் இடப்பெயர்ச்சி செய்கிறான் என்பது புலனாகின்றது.

**கோயில் அமைப்பு**

ஆரம்பகாலத்தில் மண்திட்டுப்போல அமைக்கப்பட்டு அதில் கல் ஊன்றி வைத்து வழிபாடு செய்துள்ளார். தற்பொழுது பீடம் கட்டப்பட்டு அதன்மேல் நான்கு வீச்சரிவாள் நடப்பட்டுள்ளது. இரண்டு சூலாயுதம்

ஊன்றப்பட்டுள்ளது. பீடம் கிழக்குத்திசை பார்த்து அமர்ந்திருக்கிறது. சிலை எதுவுமில்லை. சுற்றிலும் புற்றுக்கள் வளர்ந்துள்ளன. கட்டிடம், மேல்கூரை, சுற்றுச்சுவர் எதுவுமில்லை.

பீடத்தைச்சுற்றியும் ஆலமரம், பொருசுமரம் காணப்படுகின்றன. ஊருக்கு வெளியில் அமர்ந்துள்ள இக்கோயில் சில குடும்பத்தார்களுக்குக் குலதெய்வமாகவும், ஊருக்குக் காவல் தெய்வமாகவும் காட்சி அளிக்கிறது. இவ்வூரைச் சேர்ந்த சுப்பையா (பள்ளர்) என்பவரே பூசாரியாக இருக்கிறார். இவரிடம் கனவில் வந்து முனீசுவரர் பேசுவார் என்பது மக்களின் நம்பிக்கையாகும். இக்கோயிலில் 07.07.2014 அன்று குழமுழுக்கு நடைபெற்றுள்ளது.

### 2.11.11 தர்ம முனீசுவரர்

தேவகோட்டையிலிருந்து பத்துக்கிலோ மீட்டர் தொலைவிலுள்ள வெள்ளூரில் இக்கோயில் அமைந்துள்ளது.

**தலவரலாறு**

இவ்வூரின் நுழைவு வாயிலில் சுமார் நூறு ஆண்டுகளுக்கு பழமையான ஆலமரம் பரந்து விரிந்து காணப்படுகிறது. வெள்ளூரில் தாழ்த்தப்பட்ட வகுப்பினைச் சேர்ந்த ஆண்டி என்பவர் இம்மரத்தினை நட்டு வைத்துள்ளார், சில ஆண்டுகள் கழித்து அம்மரத்தின் நிழலில் முனீசுவரர் ஆலயம் ஒன்றினை நிறுவ அவ்வூரைச் சேர்ந்த பெரியண்ணத்தேவர் இடம்தேர்வு செய்து சாமிசிலைகள் செய்யும் சிற்பியிடம் முனீசுவரர் சிலை செய்வதற்கு ஒப்புதல் கொடுத்துள்ளார். அவை தயாரானதும் குறிப்பிட்ட அவ்விடத்தில் வைத்து தெய்வம் உருவாக்கப்பட்டுள்ளது.

இக்கோயில் வரலாற்றில் சமத்துவம் நிலவி வருவதனைக் காணமுடிகின்றது. வெள்ளூர் கிராமத்தில் ஆலமரம் வைத்தவர் தாழ்த்தப்பட்ட வகுப்பினைச் சார்ந்தவர். அம்மரத்தின் நிழலில் தெய்வம் நிலைபெறச் செய்தவர்

தேவர். சாதி வேறுபாடின்றி இக்கோயில் உருவாக்கம் நடைபெற்றுள்ளது. பெரியண்ணத்தேவரின் வழி வந்தவர்கள் இக்கோயிலின் பூசாரி மற்றும் நிருவாகம் செய்பவர்களாக உள்ளனர். வழிபாட்டில் அனைத்துச் சாதியினரும் பங்கு பெறுகின்றனர்.

**கோயில் அமைப்பு**

பீடம் அமைக்கப்பட்டுக் கல்லில் செதுக்கப்பட்ட சிலை நிறுவப்பட்டுள்ளது. முறுக்கு மீசையுடன் நின்ற கோலத்தில் உள்ளது. உயர்ந்த கோபுரங்கள், சுற்றுச்சுவர் கிடையாது. வெட்டவெளியில் ஆலமரத்தின் நிழலில் கோயில் அமைக்கப்பட்டுள்ளது. கருவறையில் மூன்று சூலாயுதம் ஊன்றப்பட்டு சவுக்கை வடிவில் கட்டப்பட்டுள்ளது. காவல் தெய்வமாகவும், குலதெய்வமாகவும் காட்சியளிக்கிறது.

**2.11.12 மாவடிக்கருப்பர்**

இக்கோயில் தேவகோட்டை நகரின் மையப்பகுதியான சிலம்பனி ஊருணியின் மேல்கரையில் அமைக்கப்பட்டுள்ளது.

**தலவரலாறு**

மதுரை அருகே உள்ள அழகர் கோயிலிலுள்ள பதினெட்டாம்படிக்கருப்பர் கோயிலிலிருந்து பிடிமண் எடுத்துவரப்பட்டுச் சிலம்பணி ஊருணியின் மேல்கரையில் இடம் தேர்வு செய்து தற்பொழுது கோயில் கொண்டுள்ள இடத்தில் பிடிமண் வைத்து வழிபட்டு வந்துள்ளனர். ஏறத்தாழ மூன்று தலைமுறைகளுக்கு முன் இந்நிகழ்வு நடைபெற்றுள்ளது.

ஆரம்பகாலத்தில் சிலை எதுவுமில்லாமல் பீடம் மட்டும் அமைத்து வழிபடப்பட்ட கருப்பர், பிற்காலத்தில் வீச்சரிவாளுடன் கூடிய சிலையாக காவல் காத்து வருகிறார். இக்கோயில் இருக்குமிடம் மற்றும் அதன் சுற்றவட்டாரப்பகுதி முழுவதும் அடர்ந்த காட்டுப்பகுதியாக இருந்துள்ளது. பகலில் செல்வதற்குக்கூட அச்சம் தரும் பகுதியாக இருந்துள்ளது. இவ்வச்சம் தீர, மக்களைக்

காத்தருளவும் கருப்பர் கொண்டு வரப்பட்டார் என்றும்; இதற்கு யாதவர்கள் தான் காரணம் என்கிறார் காளீஸ்வரன். ஆதலால் இது காலம் காலமாக யாதவர்களின் பாதுகாப்பிலும், பூசை செய்யும் பூசாரிக்கான உரிமையும் இவர்களைத் தவிர வேறு யாருக்குமில்லை.

**கோயில் அமைப்பு**

கருவறையுடன் கூடிய அர்த்தமண்டபம், முன்மண்டபத்துடன் கூடிய சிறிய கோபுரம் போன்றவை அமைக்கப்பட்டுள்ளன. கிழக்குத்திசை நோக்கியிருக்கும் மூலவர் நின்ற கோலத்தில் கையில் வீச்சரிவாளுடன் போர் வீரர் போல் காணப்படுகிறார். முகப்பில் விநாயகரும், முருகனும் வீற்றிருக்கின்றனர். தெற்குத் திசையில் வெள்ளச்சிஅம்மன், வீரபத்திரர், வேம்புடையான் போன்ற பரிவாரத் தெய்வங்கள் அமைந்துள்ளன. கோயிலைச் சுற்றி வீச்சரிவாள் ஊன்றப் பட்டுள்ளது. இவையெல்லாம் நேர்த்திக் கடனாகச் செலுத்தப்பட்டவையாகும். வெண்கலமணி கட்டப்பட்டுள்ளது. நுழைவு வாயிலின் அருகில் மூன்று தலைமுறைக்கு மேலான அரசமரமும், அதனருகில் வேப்பமரமும் உள்ளது. அரசும், வேம்பும் இணைந்திருப்பது இத்தலத்தின் சிறப்பு என்று கூறப்படுகிறது.

**2.11.13 கொம்படிக்கருப்பர்**

மாவிடுதிக்கோட்டையில் கொம்படிக்கருப்பர் திருக்கோயில் அமைக்கப்பட்டுள்ளது.

**தலவரலாறு**

மதுரைக்கு அருகிலுள்ள அழகர்கோயிலில் பதினெட்டாம்படிக்கருப்பர் கோயிலிலிருந்து பிடிமண் எடுத்துவரப்பட்டு இக்கோயில் அமைக்கப்பட்டுள்ளது. கட்டிட அமைப்புகள், கோபுரங்கள் எதுவுமில்லை. கட்டிடம் கட்டுவதற்குப் பல இடங்களில் உத்தரவு கேட்டும் கருப்பர் உத்தரவு கொடுக்கவில்லை என்றும் வெட்டவெளியில் இருப்பதால் இதனை கொம்படிக்கருப்பர் எனவும் அழைக்கின்றனர்.

**கோயில் அமைப்பு**

பதினெட்டுப்படிகள் கட்டப்பட்டுள்ளன. அவற்றின்மேல் பீடம் அமைத்து வீச்சரிவாள் ஊன்றப்பட்டுள்ளது. சுற்றிலும் சுற்றுச்சுவர் காணப்படுகிறது.

**2.11.14 சுடலைமாடன்**

தேவகோட்டை நகரின் ஒரு பகுதியான இறகுசேரியில் கோயில் காணப்படுகிறது.

**தலவரலாறு**

சுடலைமாடன், மஞ்சனப்பேச்சி கேரளாவிலிருந்து வேட்டையாடி குற்றாலத்தில் தங்கி பாபநாசம், கயத்தாறு வழியாகத் தென்மாவட்டத்திற்குள் வந்து இறகுசேரியில் தங்கியுள்ளனர். முத்தாலராவுத்தர், பரிபூசன ஐயர் இருவரும் மை, மந்திரங்களில் கைதேர்ந்தவர்கள். ஒவ்வொரு செயலுக்கும் குறிப்பிட்ட சில தெய்வங்களை தன்வசப்படுத்தியிருப்பர்.

கொள்ளையடிக்க நினைத்த ராவுத்தர் மற்றும் பரிபூசன ஐயரும் இம்மாடனை மடக்கிப்பிடித்து தன் கட்டுப்பாட்டில் வைத்துக் கொண்டால் காரியத்தைச் செவ்வனே செய்யமுடியும் என நினைத்து பின் தொடர்ந்து வந்தனர்.

கேரளாவிலிருந்து புறப்பட்டவர்களை எப்படிப் பிடிப்பதென்று அங்கும் இங்குமாக அலைந்து இறுதியில் இறகுசேரியில் தற்பொழுது கோயிலிருக்கும் இடத்தில் மஞ்சனப்பேச்சியையும், தன் சேனைகளையும் மாடன் வெள்ளைக் குதிரையில் வேட்டையாடச் சென்றுவிட்டார். தாம் இல்லாத நேரத்தில் தன் சேனைகளையும், மஞ்சனப்பேச்சியையும் பிடிப்பதற்கு முத்தால ராவுத்தர் மற்றும் பரிபூசன ஐயரும் வருவதனை தன் ஞனக்கண்ணில் கண்டு மாடன் தன் உருவத்தை மாற்றி தலை இல்லாத மனிதப் பிண்டமாக குதிரையிலமர்ந்து பேச்சியை நோக்கி வருகிறார் என்கின்றார்.

சுடுகாட்டிலிருந்து எடுத்துவரப்பட்ட மனித எழும்பைக் கொண்டு முத்தாலராவுத்தர், பரிபூசன ஐயரின் பின் மண்டையில் அடிக்க இருவரும் இறந்து போகின்றனர். அவ்விடத்தில் மாடன் கோயில் கட்டப்பட்டுள்ளது. இது ஆயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக இருப்பதாகக் கூறப்படுகிறது. பிள்ளைமார் சமூகத்தார் பூசை செய்யும் பூசாரியாகவும், நிருவாகம் செய்யும் நிருவாகத்தார்களாகவும் இருக்கின்றனர். எந்த நிலையிலும் ஐயர் மற்றும் பிராமணர் இனத்தாரைப் பூசைக்குக் கூப்பிடுவதில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

**கோயில் அமைப்பு**

வீட்டின் தாழ்வாரம் போல் கோயிலின் நுழைவு வாயில் அமைக்கப்பட்டுள்ளது. நல்ல மாடையாசாமி நடுவிலிருக்க சுற்றிலும் பல்வேறு தெய்வங்கள் நடப்பட்டுள்ளன.

பேச்சியம்மனுக்கருகில் வீச்சரிவாள் மற்றும் சூலாயுதத்துடன் கருப்பரும் தொடர்ந்து புதியவன்சாமி, சுடலைமாடன் அமையக்காணலாம். சாட்டையும், கதாயுதமும் வைக்கப்பட்டுள்ளன. நான்கு கைகளுடன் கூடிய மாடன் ஐம்பொன் சிலையால் வடிவமைக்கப்பட்டுள்ளது.

அம்மனின் பார்வைக்கு எதிராக முத்தாலராவுத்தர் சன்னதி குறுக்குநெடுக்காக அமைக்கப்பட்டுள்ளது. காரணம் காளியின் கொடூரப்பார்வை நேரடியாக பட்டுவிடக்கூடாது என்பதற்காக அதனைத் தான் தாங்கிக் கொள்கிறேன் என்று ராவுத்தர் கூறியதால் அவளது பார்வைக்கு எதிராக இவருக்கு மண்ணில் பீடம் அமைக்கப்பட்டுள்ளதாகக் கூறப்படுகிறது. அம்மனின் பார்வைபட்ட ராவுத்தர் என்பதால் இசுலாமியர்கள் அதிகமாக வணங்குகின்றனர். பீடத்தின் மீது இசுலாமிய முத்திரை பதித்த பச்சைத் துணி போர்த்தப்பட்டுள்ளது.

அருகில் பரிபூசன ஐயருக்கு தனிச்சன்னதியாக பீடம் அமைத்துள்ளனர். வில்லுடைய ஐயனார், முத்தையாசாமி, பூரண புஷ்கலா, நல்லமாடையசாமி ஆகிய தெய்வங்களுமுள்ளன. இங்கு உயிர்ப்பலி கிடையாது. தல விருட்சமாக வேப்பமரமும் ஆயிரமாண்டு பழமையான புளியமரமுள்ளது. சுற்றுச்சுவர் மற்றும் மண்டபம் கட்டப்பட்டுள்ளது.

சுடலைமாடன் தெற்குத்திசை பார்த்ததும், அம்மன் கிழக்கு நோக்கியும் அமைந்துள்ளனர். வாயில் தெற்குத்திசையிலுள்ளது. பிள்ளை வரம் வேண்டி நூற்றுக்கும் மேற்பட்ட தொட்டில்களும், வெங்கல மணியும் ஆலயத்தின் சிறப்பை உணர்த்தி நிற்கின்றது. நமச்சிவாயப்பிள்ளை வழி வந்தவர்கள் பூசை செய்து வழிபாடு நடத்துகின்றனர்.

### 2.12 புராணக்கதைகள்

சமயத்தெய்வங்கள் ஒவ்வொன்றிற்கும் பிறப்புப்பற்றிய வரலாற்றுக்கதைகள் புராணங்களாகச் சொல்லப்படுகின்றன. இவை உறவு மற்றம் அவதாரங்களாக கட்டமைக்கப்பட்டுள்ளன. இதன் காரணமாக நாட்டார் தெய்வங்களை சமயத் தெய்வங்களுடன் இணைத்து ஊர்த்தெய்வங்களின் பிறப்பு வளர்ப்புக்களை சமயத் தெய்வங்களுடன் உறவு கற்பித்துப் புராணம் இயற்றியுள்ளனர். "புரோகிதப் புரட்டர்களால் உருவாக்கப்பட்ட இந்து புராண இதிகாசங்கள் புனிதம் என்ற போர்வையில் காலந்தோறும் வேகமாக பரவி வருகின்றன. இப்படி எழுந்தவைதான் வேதங்கள், சாத்திரங்கள், உபநிடதங்கள் இந்தப்புராண புளுகுகள் சித்தாந்தங்களாகவும், தத்துவங்களாகவும், சமயச் சடங்குகளாகவும், மதச்சம்பிராதயங்களில் இடம்பெற்றன"[74] என்கிறார் கிராண்ட ஆலன். இவரின் கூற்றுப்படி புராணங்களும், இதிகாசங்களும் சமயவாதிகளால் உருவாக்கப்பட்ட புளுகுகள் என்பதனை உறுதி செய்கின்றன. இதனடிப்படையில் நாட்டார் தெய்வங்கள் பற்றிய புராணக் கதைகள் சில சந்தேகங்களைப் பதிவு செய்கிறது.

### 2.12.1 முத்துமாரியம்மன் குறித்த புராணக்கதை

மாரியம்மனின் தோற்றம் குறித்து பல்வேறு புராணக்கதைகள் கூறப்படுகின்றன. "இவள் ஜமதக்கினி ரிஷியின் பத்தினியாகிய ரேணுகை, ஜமதக்கினி முனிவர் கார்த்தவீரியன் புத்திராலிறக்க உடன் தீப்புக்க இவளது தேகத்தை வேகுமுன் இந்திரன் வருணனைக் கொண்டு மழை பொழிவித்துத் தனிவித்தனன். ரேணுகை தரித்திருந்த வஸ்திரமும் எரிந்து தேகந் தீக்கொப்புள மரும்பியது ரேணுகையெழுந்து வஸ்திரமில்லாமையால் அவ்வனத்திலிருந்த வேம்பின் தழைகளை ஆடையாகத் தரித்துக்கொண்டு அருகிலிருந்த புலைச்சேரியடைந்து தன்பசிக்கு ஏதேனும் தரக் கேட்டனர். அவர்கள் இவள் யாரோ வேதியப்பெண் என்று எண்ணித் தங்கள் ஆகாரத்தைத் தராது பச்சரிசி, மா, வெல்லம், இளநீர், பானகம் முதலியன தந்து உபசரித்தனர். பின்பு அவ்விடம் நீங்கி வண்ணாரவீதி வந்து அவர்கள் கொடுத்த வஸ்திரத்தைத் தரித்துக்கொண்டு ஜமதக்கினி ரிஷியிடம் வந்து துயருறும்போது தேவர்கள் தரிசனந்தந்து துயரமாற்றினர்"[75] என்று விளக்கம் தருகிறது அபிதான சிந்தாமணி.

ஜமதக்கினி முனிவரின் மனைவி ரேணுகாதேவி தினமும் பூசை செய்வதற்கு ஆற்று நீரினை குடம்போல திரட்டிக்கொண்டு வருவதனை வழக்கமாக வைத்திருந்தாள். ஒருநாள் வானத்தில் சென்ற காந்தருவனின் நிழல் ஆற்றுநீரில் விழ அதனைக் கண்டு மயங்கியதால் அன்று நீர் திரளவில்லை. வெகு நேரமாகியும் வராமலிருப்பதால் ஜமதக்கினி முனிவர் கோபப்பட்டார். நீரில்லாமல் ரேணுகாதேவி வீடு திரும்ப காரணம் கேட்டார் ஜமதக்கினி! ஜலம் (நீர்) திரளவில்லை எனக் கூறினாள். அப்படியென்றால் தன் மனைவி உடல் அல்லது மனதளவில் கெட்டுப் போய்விட்டாள் என்ற முடிவுக்கு வருகிறார். ஆழ்ந்த தவத்திலிருந்த தன் மகன் பரசுராமனைப் பரசுராமா! என அழைக்க ஓடி வந்து காரணம் கேட்டார்.

உன் அம்மா (ரேணுகாதேவி) கெட்டுப் போய்விட்டாள், அவளைக் கொன்றுவிடு எனக் கட்டளையிட உயிருக்குப் பயந்து ஓடியவள் அருகில் இருந்த வண்ணாத்தியின் (சலவைத்தொழிலாளி) வீட்டில் நுழைந்து அவள் உடுத்தியிருந்த சேலையை மாற்றி உடுத்திக் கொள்ள ஆள் தெரியாமல் சேலையை அடையாளம் வைத்து வண்ணாத்தியைக் கொலை செய்து விடுகிறான்.

அதன் பிறகு ரேணுகாதேவி வண்ணாத்தியின் சேலையில் வெளிவர ஆள் மாறி கொலை செய்துவிட்டோம் என நினைக்கிறான். இறுதியில் ரேணுகாதேவியையும் கொலை செய்துவிட்டு தன் தந்தையிடம் வருகின்றான். தாயைக் கொன்று நான் இட்ட கட்டளையை நிறைவேற்றியதற்கு உனக்கு என்ன வரம்வேண்டும் எனக்கேட்க என் தாயை மீண்டும் உயிர்ப்பிக்க வேண்டும் எனப் பரசுராமன் கேட்க வெட்டப்பட்ட தலையை உடலுடன் எடுத்து ஒட்டிவை. உன் தாய் உயிர்ப் பெறுவாளென்று கூற தன்தாய் உயிர்பெறப் போகிறாள் என்ற அவசரத்தில் ஓடியவன் ரேணுகாதேவியின் தலையை எடுத்து வண்ணாத்தியின் உடலுடன் ஒட்டிவைத்து விடுகிறான். தலைமாறிப் போனதால் மாரி எனப்பெயர் பெற்றாள் என்றும் கதை நாட்டுப்புறங்களில் செவி வழியாகச் சொல்லப்படுகிறது.

மாரியம்மன் வரலாறு பற்றி குறிப்பிடும் புராணக்கதைகளும், செவிவழிக் கதைகளும் ரேணுகாதேவியை மையமிட்டுக் கூறப்படுகின்றன. அதனால் "ரேணுகாதேவி என்ற அக்னி சக்தியே மாரியம்மன்"[76] எனக் கருத முடிகிறது.

### 2.12.2 காளியம்மன் குறித்த புராணக்கதை

தாருகாசூரனால் துன்பமடைந்த தேவர்கள் பெண்ணுருக்கொண்டு சிவமூர்த்தியை அடைந்து தாருகாசூரனை அழிக்கும்படி கூறினர். பெண்ணாலன்றி வேறு எவராலும் அழிக்கமுடியாத தாருகாசூரனை வெல்வதற்கு, சிவமூர்த்தி

சக்திக்குக் கட்டளையிட்டார். அக்காலையில் தேவியின் சக்தி சிவமூர்த்தியின் விஷக்கறை படிந்த கனற்கண்ணில் பிறந்து வெளிப்பட்டது. அவ்வுரு, விஷக்கறை படிந்து வந்ததால் காளி எனப்பெயரடைந்தது என காளிக்கு விளக்கம் தருகிறது அபிதான சிந்தாமணி.

“காளி வடமொழியில் ‘காலீ’ என்றும் ‘காலிகா’ என்றும் அழைக்கப்படுகிறாள். ‘காலீ’ என்னும் சொல் தென்மொழியில் ‘காளி’ என வழங்குகிறது என்னும் சான்றுகளின் அடிப்படையில் பலபெயர்கள் திரிபுகளுடன் நாடெங்கும் காளிவழிபாடு நடைபெறுகிறது என்பது தெளிவு. இக்காளியம்மன் கோயில்கள் ஊருக்கு வெளியில் அதிகமாக இருக்கிறது என்பதனைக் கள ஆய்வில் காணமுடிகின்றது.

### 2.12.3 ஐயனார் குறித்த புராணக்கதை

ஆண் தெய்வ வழிபாட்டில் கிராமப்புறங்களில் குறிப்பிடத்தக்கது ஐயனார் வழிபாடு ஆகும். “சிறுதெய்வங்களுள் கிராம தேவதைகளே சிறப்பான இடம் வகிக்கின்றன. குறிப்பாக கிராமங்கள் ஒவ்வொன்றிலும் அதனை காத்துக் கொண்டிருக்கும் காவல் தேவதை அல்லது காவல் தெய்வம் உண்டு என்னும் நம்பிக்கை ஆழமாக வேர்விட்டு படர்ந்துள்ளது. அத்தகைய காவல் தெய்வங்களுள் சிறப்பான இடம் வகிப்பது ஐயனார் என்ற காவல் தெய்வம் ஆகும்”[77] என்பதன்மூலம் இக்கோயில் காவல் தெய்வமாகவும், சில இடங்களில் குலதெய்வமாகவும் காணப்படுகிறது.

“ஐ என்பது ஓரெழுத்து ஒருமொழியாகும். இதற்கு அழகு, வியப்பு, தலைமை, மேன்மை, பெருமை, கூர்மை என்றெல்லாம் பொருள் தரும். இதனால் இவை அனைத்தும் உடையவன் ஐயன் என்று கொள்ளலாம். ஐயனார் என்ற சொல்லில் ‘ஆர்’ என்பது சிறப்பு விகுதி”[78] என்கிறார் கு.செ.இராமசாமி. “ஊரின் எல்லைகளில் உள்ள ஐயனார் கோயில்கள் போரில் இறந்துபட்ட

படைத்தலைவர்களின் கல்லறைகளே”[79] என்று பதிவு செய்கிறார். க.நெடுஞ்செழியன். இக்கூற்றுக்களை ஆராயுமிடத்து காவல் புரிந்தவனாகவோ, போர்ப்படை வீரனாகவோயிருந்து போரில் மரணம் அடைந்திருக்கக்கூடும் எனக்கருத இடமுண்டு.

இக்கூற்றினை மெய்ப்பிக்கும் வகையில் சா.கந்தசாமி “ஐயனார் கோயில்கள் பெரும்பாலும் ஊருக்கு வெளியே அமைந்துள்ளன. ஐயனார் கண் எப்பொழுதும் திறந்தே இருக்கும். ஒருபோதும் அவர் கண்மூடுவதில்லை இரவில்கூட. இரவில் உறங்கும் மக்களைக் கெட்ட ஆவிகளிடம் இருந்து காப்பது ஐயனார் தான். அதற்காக நடுசாமத்தில் இருந்து உதய காலம் வரையிலும் ஊரை வலம் வந்து காக்கிறார்”[80] என்று ஐயனாரின் காவல் பணியினை எடுத்துரைக்கக் காணலாம்.

ஐயனாரின் பழம் பிறப்புப்பற்றி பல்வேறு கதைகள் நாட்டுப்புறங்களிலும், புராணங்களிலும் செவிவழிச் செய்தியாகக் கூறப்பெறுகின்றன. ஜடாதரனின் மகன் சத்புத்திரன், சத்புத்திரனின் மகன் கும்பமுனி, கும்பமுனியின் மகன் குலாலன், குலாலன் மும்மூர்த்திகளான பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவருள் யாருக்காவது பாதபூசை செய்யவேண்டும் என்று விரும்புகிறான். அதற்காகக் கடும் தவம் இருக்கிறான். இதற்கிடையில் ஐயனார், ஐயப்பன் வடிவில் பந்தலராஜன் மகனாகப் பிறந்து வளர்ந்து கொண்டிருக்கிறார். அவருக்குப் பதினெட்டு வயது முடிவடைந்திருக்கும் வேளையில் நாரதமுனிவர் திருமணம் செய்ய எண்ணுகிறார். இந்திரனுக்கு இரண்டு மகள்கள் உண்டு. அவர்கள் பூர்ணா, புஷ்கலா ஆவார்கள். ஐயப்பன் மானுட வடிவில் இருப்பதால் இவர்களையும் மானுடவடிவில் பிறப்பிப்பதற்கான அவசியம் நேர்கிறது. ஒரு நாட்டு அரசனுக்கு இரண்டு மகன்கள். அரசனுக்கு வயதாகிவிட்டபடியால் பட்டம் சூட்டிவிடுகிறான். இருவருக்கும் குழந்தை இல்லை.

பூர்ணா, புஷ்கலா இருவரையும் குழந்தைகளாக்கி நாரதர் கூற்றுப்படி காட்டுக்குள் விடுகிறான் இந்திரன். இரு வேந்தர்களும் வேட்டையாடச் செல்லும் இடத்தில் ஆளுக்கொரு பிள்ளையைக் கண்டு தூக்கி வந்து வளர்க்கிறார்கள். பிள்ளைகள் வளர்ந்து பெரியவர்களாகித் திருமணப் பருவம் அடைகிறார்கள். இதற்கிடையில் நாரதர் தவம் செய்து கொண்டிருக்கும் குலாலனிடம் செல்கிறார். "இன்னும் உன் கண்களுக்கு மும்மூர்த்திகளுள் ஒருவரும் தட்டுப்படவில்லையா? என்கிறார். குலாலன் 'இல்லை சுவாமி' என்கிறான் நாரதர். உன் விருப்பம் விரைவில் நிவர்த்தியாகும் என்கிறார். அதன்பின் நாரதர் ஈசுவரனிடம் சென்று ஐயனாருக்குத் திருமணம் முடிக்க வேண்டும் என்கிறார். ஈசுவரனும் சம்மதித்து பெண் கேட்கும் பொறுப்பையும் நாரதரிடமே ஒப்படைத்துவிடுகிறார். நாரதர் இரு அரசர்களிடமும் சென்று பெண் கேட்க இருவரும் சம்மதிக்கின்றனர். திருமணம் நிச்சயிக்கின்றனர். திருமண நேரத்தில் ஐயனாருக்கு மாமனாக யார் நிற்பது என்ற கேள்வி எழுகிறது. ஏனென்றால் சிவனும், சிவனுக்கு மாமனாகிய திருமாலும் இணைந்து பிறந்தவரே ஐயனார். எனவே திருமால் மாமன் இடத்தில் நிற்கமுடியாத உறவுமுறை பிரச்சினை எழுகிறது. குலாலனை மாமனாக நியமிக்கலாம் என்று கூறுகிறார். அனைவரும் சம்மதிக்கின்றனர். பின்னர் குலாலனிடம் சம்மதம் கேட்கச் செல்கின்றனர். குலாலன் மும்மூர்த்திகளும் தேவர்கள் புடைசூழக் காட்சி அளித்ததைக் கண்டு மனமுருகி அவர்களை வணங்கிட்டான். மும்மூர்த்திகளும், தேவர்களும் அவனுக்கு அருளித் தாங்கள் வந்த காரியத்தை கூறுகின்றனர். அதற்குக் குலாலன்.

'ஐயனாருக்கு காலம் முழுவதும் பாதபூசை செய்யச் சம்மதித்தால் நான் மாமனாக இருக்கச் சம்மதிக்கிறேன்' என்கிறான். அனைவரும் சம்மதிக்கின்றனர். பின்னர் குலாலன் மாமனாக இருக்க ஐயனாரின் திருமணம் முடிகிறது. கல்யாணம் முடிந்தவுடன் குலாலன் மூவரையும் தன்னோடு அழைத்து வந்து ஒரு

கிராமத்தில் கண்மாய்க்கரை அருகிலுள்ள ஆலமரத்து நிழலில் தங்க வைக்கிறான். ஐயனாருக்கு பசியெடுக்கிறது. குலாலனை நோக்கி 'எங்களை அழைத்து வந்து பட்டினி போட்டுவிட்டாயே' என்று திட்டுகிறார். குலாலன் ஊருக்குள் சென்று உண்ண ஒன்றும் கிடைக்காமல் 'நாடே வறட்சியாக இருக்கிறது' என்கிறான். அதற்கு ஐயனார் 'நான் வந்திருக்கிறேன் என்று ஊராரிடம் சொல்' என்கிறார். குலலன் சென்று ஊராரிடம் ஐயனார் வந்திருக்கும் விபரத்தைத் தெரிவிக்கிறான். ஊரார் ஐயனாரை வணங்கி நின்றனர்.

ஐயனார் அவர்களை நோக்கி 'எனக்கு வருடத்துக்கொருமுறை புரவி எடுத்துக் கொண்டாடினால் மழை பொழியும், நன்றாக விளையும். அந்நெல்லில் எனக்குப் பூசை செய்ய குலாலனிடம் ஒரு குருணி நெல் கொடுங்கள் என்று சொல்லிவிட்டு ஐயனார் தேவியரோடு மறைந்துவிடுகிறார். குலாலன் மறைந்த ஐயனார் உருவத்தை மண்ணால் செய்து பழகுகிறான்"[81] புராணக்கதை எனும் ஐயனாருக்கும், குலாலனுக்குமுள்ள உறவை எடுத்துக்காட்டி நிற்கிறது. இன்று வரைக்கும் ஒவ்வொரு ஐயனார் கோயிலுக்கும் வேளாளர் என்ற குலாலர்கள் பூசை செய்வதும் நாம் எண்ணத்தகும். ஐயனார் கோயிலின் புரவி எடுப்பிற்குக் குதிரைகள் செய்வதும் குலாலர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது ஆகும்.

இக்கதை உணர்த்தும் மற்றுமொரு செய்தி ஐயனாருக்குக் குலாளர்கள் மாமன் உறவுமுறையைச் சேர்ந்தவர்கள் என்பதாகும். ஐயனார் கண்மாய் கரையிலும், ஆலமரத்தடியிலும் வீற்றிருக்கும் காரணம் இப்புராணக்கதையின் மூலம் வெளிப்படுகின்றது.

புரவியும் (குதிரை), யானையும் ஐயனார் வழிபாட்டோடு தொடர்புபடுத்தப் பட்டுள்ளன. காரணம் புரவி எடுப்பு நடத்தி என்னை வழிபடுங்கள் என ஐயனார் சொன்னதாக மக்களிடம் நம்பிக்கை இன்றளவும் நிலவுகிறது.

யானை ஐயனாரின் வாகனமாகும். "நீங்கள் கிராமங்களில் கண்மாய்க்கரைகளில் தங்கியிருந்து மக்களைக் காத்து அரசுபுரிந்து வருவீர்களாக என்று சிவன், விஷ்ணு முதலானோர் கூறுகின்றனர். பின்னர் இந்திரன் சீதனமாக வெள்ளையானை முதலான செல்வங்களைத் தருகிறான்"[82] இவ்வாறு சீதனமாகக் கொடுக்கப்பட்ட வெள்ளை யானை ஐயனாரின் வாகனமாக அமையப்பெற்றுள்ளதை அறியமுடிகின்றது.

### 2.12.4 முனீசுவரர் குறித்த புராணக்கதை

"கடந்த காலங்களில் சிற்றரசர்களும், பேரரசர்களும் பகுதி பகுதியாக இடங்களை தமது ஆளுகைக்கு உட்படுத்தி ஆட்சி செய்து கொண்டிருந்தனர். இவ்வாட்சி அதிகாரத்தில் உள்ள அரசர்களுக்கிடையில் போர் நடப்பது வாடிக்கையான ஒன்றாகும். போருக்குச் செல்லும் போர்படையில் தளபதி உள்ளிட்ட படைவீரர்கள் செல்வதுண்டு. தலைமை ஏற்றுச் செல்பவர் தலைவர் ஆவார். இவருக்கு போர்முன்னி என்ற ஒரு பெயரும் உண்டு. இவரினை முன்னிவீரர் என்றும் அழைக்கின்றனர். போரில் இறந்துவிட்டால் புதைக்கப்படும் இடத்தில் சூலாயுதத்துடன் கூடிய நடுகல் நடப்பட்டு வழிபடப்பெறுவர்.

இது முள்ளி என இருந்து முனி என மருவியது. தெய்வநிலைக்கு ஏற்றப்பட்டதால் ஈஸ்வரன் எனச் சேர்த்து முனீஸ்வரன் என அழைக்கப்படுவதாக புராணக்கதை கூறுகிறது."[83] இது காக்கும் காவல் தெய்வமாக காணப்படுகிறது.

### 2.12.5 கருப்பர் குறித்த புராணக்கதை

கருப்பர், கருப்புச்சாமி எனும் பொதுப்பெயருடன் அடைமொழிகளைச் சேர்த்து ஊர்களிலும், நகர்ப்புறங்களிலும் இத்தெய்வ வழிபாட்டு முறைகள் நடைபெற்று வருகின்றன. இவர் காவல் தெய்வமாக கருதப்படுகிறார். பார்ப்பதற்கு அச்சம் மிகுந்த தோற்றத்துடன் இத்தெய்வம் காணப்படுகிறது. பெரும்பான்மை ஐயனார் கோவில்களில் பரிவாரத் தெய்வமாகவும், சில இடங்களில் மூலவராகவும் கருப்பர் வீற்றிருக்கின்றார்.

பண்டைக்கால போர் வீரர்களின் தோற்றத்தை ஒத்தவராக காணப்படுவதால் போரில் இறந்து போனவராக இருக்கக்கூடும் எனக்கருத இடமுண்டு. “தமிழ்நாட்டில் கருப்புச்சாமி கோவில்கள் அதிகம் உள்ளன. பெரும்பாலும் ஐயனார் கோவில்களில் கருப்பச்சாமி காவல் தெய்வமாக உள்ளார். ஐயனார் கோயிலின் முன்பாக ஓங்கிய கோடாரியுடன், தலையில் கொண்டையுடன், பெரிய மீசையை முருக்கி கண்களை அகண்டு விரித்து, இடுப்பில் கச்சை அணிந்து இடையில் உரைவாளுடன் போருக்குச் செல்லும் தொனியுடன் உத்திரமான உருவம் கொண்டு கருப்பச்சாமி நிற்கிறார்”[84] என இத்தெய்வத்தின் தோற்றத்தினைப் பற்றிக் கூறுகின்றார்.

பெருந்தெய்வ நிலையில் உள்ள திருமால் காக்கும் பணியில் ஈடுபடுவதாக புராணங்களும், சமயங்களும் எடுத்துரைக்கின்றன. உயிர்களைக் காக்கும் திருமால் கருமை நிறமுடையவன் என்ற கருத்துமுள்ளது. இதனடிப்படையில் ஆராயுமிடத்து கருப்பச்சாமி கருமை நிறமுடையவராதலால் நிறத்தின் அடிப்படையில் கருப்பச்சாமி, கருப்பு என பெயர் பெற்று இருக்கலாம்.

“கருப்பணன் என்ற தெய்வத்தை ஈசுவரியையும், கன்னிமார் தெய்வங்களையும் காப்பதற்கு மாயவன் உண்டாக்கி அனுப்பினான்”[85] என்று அண்ணன்மார் சுவாமி கதையில் கூறப்பட்டிருக்கும் கருத்தும் கருப்பன் காவலுக்குப் படைக்கப்பட்டதாகவே கூறுகிறது.

மதுரை அழகர்கோயிலின் நுழைவு வாயிலில் மிகப்பிரமாண்டமான கோபுரத்துடனும், பெரிய வாயிலுடனும் பதினெட்டாம்படிக்கருப்பர் கோயில் அமையப்பெற்றுள்ளது. இக்கோயில் வருடத்தின் ஒரு நாள் தவிர அனைத்து நாட்களிலும் அடைத்துக் கிடப்பதாகும். உள்பகுதியில் பதினெட்டுப்படிகளும், பதினெட்டாவது படியில் உயர்ந்த பிரமாண்டமான வீச்சரிவாள் ஊன்றப்பட்டுள்ளது. இப்பதினெட்டாவது படியில் இருந்து தான் கருப்பர் காவல்

புரிந்து வருகிறார் என்று கூறப்படுகிறது. அழகர்கோயில் மலைப்பகுதியிலுள்ள அனைத்துத் தெய்வங்களுக்கும் கருப்பர் காவல் ஆகும். இச்செய்திகளை மையப்படுத்தி காணும் நிலையில் காவல் தெய்வமாக கருதமுடிகிறது. அனைத்துக் கருப்பர் கோயில்களும் இதன் வழித்தோன்றல்கள் எனலாம்.

தீயவர்கள், எதிரிகள், கள்வர்களிடமிருந்து நாட்டையும், மக்களையும் காத்தருளும் தெய்வம் கருப்பர் என்பது இச்செய்திகளில் அறியமுடிகிறது. இக்கருப்பரின் உருவமைப்பினைப் பற்றி கூறுமிடத்து “கருப்பரின் திருவுருவ அமைப்பில் பல பொதுவான கூறுகள் காணப்படுகின்றன. இவை எல்லாச் சிறுதெய்வங்களின் உருவங்களிலும் காணப்படுகின்றன. கருப்பர் நின்ற கோலத்தில் அமைக்கப்படுவர். கருப்பருக்கு அருள் செய்யும் அபயகரமோ, அள்ளிக் கொடுக்கும் வரதகரமோ அமைப்பது இல்லை. இரண்டு கால்களிலும் வீரக்கழல்கள் விளங்கும். அவர் போருக்குப் போவதற்கு அணிய கைக் கால்சராய் (கால் சட்டை) அணிந்திருப்பார். கழுத்தில் மாலையும், காதில் வண்டிக் கடுக்கணும், இடுப்பில் சலங்கை மணியும் அணிவிக்கப்பட்டு இருக்கும். தலையில் உள்ள நீண்ட முடி கொண்டை போடுவது போல் அள்ளிச் செருகப்பட்டிருக்கும். இத்தலைமுடி அலங்காரம் நடுகற்களில் காணப்படும். இவ்வீரனின் தலை கொண்டையைப் போன்றிருக்கும். விழிகள் பெரியனவாயும், அகன்றனவாயும், கண்டோர்க்கு அச்சமூட்டும் வகையில் காணப்பெறும். தலையில் கிரீட மகுடமோ இரண்ட மகுடமோ இருக்காது. அள்ளிச் செருகி முடிச்சிடப்பட்டுத் துணியில் கட்டிய தலையலங்காரம் இவர் மனிதத் தெய்வம் என்பதை உணர்த்துகிறது. வலக்கையில் ஓங்கியபடி அரிவாள், இக்கையில் கதாயுதம் தாங்கி காட்சி தருபவர்”[86] எனப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

தொடக்க நிலையில் உருவமற்ற வழிபாட்டினை கடைப்பிடித்த மக்கள் கால மாற்றத்தின் காரணமாக வழிபாட்டில் ஏற்பட்ட வளர்ச்சியினாலும்

உருவவழிபாட்டிற்கு மாறினர் என்பது புலனாகின்றது. தெய்வங்களுக்கு உருவம் கொடுத்தது மனிதர்கள் "தாம் வணங்கும் இறைவர்கட்குத் தனித்தனி உருவுகளை உருவாக்க வேண்டுமென்ற மனப்போக்கு உருவானது. இதனால் மனிதர்களைப் போன்ற உருவ அமைப்பில் சில சிறப்புக் கூறுகளையும் உடன் இணைத்து புதிய உருவுகள் ஆக்கப்பெற்றுள்ளன."[87] இவ்வாறான உருவ அமைப்புடன் கருப்பர் காணப்படுகிறார்.

### 2.12.6 சுடலைமாடன் குறித்த புராணக்கதை

சுடலை என்பது சுடுகாடு. சுடலைமாடன் சுடுகாட்டிற்கு உரியவன் என்றும் பொருள் கூறப்பெறுகின்றது. மாடனின் பிறப்புப்பற்றி பல்வேறு கதைகள் கூறப்படுகின்றன. போர்வீரன், மலையாளத்தில் இருந்து வந்தவன், பிணம் தின்பவன் என்று பலவாறாகக் கூறப்படுகிறது.

**'பல உயிருங் காக்கப் பரமன் படைத்த**
**பல கலைசேர் மாடன் கதையைக் கலங்காத**
**கண்ட விநாயகன் தாள் வணங்கி எந்நாளும்**
**விண்டுரைப்போம் அன்பாய் விழைந்து'**

என்னும் பழம்பாடல் மாடனின் பிறப்பை எடுத்துரைக்கிறது. உயிரினைக் காக்கவும், கலைகளை கற்கவும் பிரம்மனால் படைக்கப்பட்டவன் மாடன் என்பதனை அறியமுடிகிறது.

"பார்வதி அரனாரை வணங்கி நிர்மலா! ஆதிபரனே! ஒரு விண்ணப்பம் கேளீர் எனக்கோர் ஆண் பிள்ளை வேண்டும் என்று கேட்டாள். என் இடப்பாகத்தில் பங்கு கொண்ட பார்வதியே வடவாமுகத்தில் சுடர்விட்டு இயங்கும் முப்பத்திரண்டாம் தூணில் ஒரு மணி விளக்கு எரியும். அதன் முன் நின்று நீ முந்தானையை ஏந்தி நின்றால் ஒரு ஆண் சிசு தோன்றும் என்றார் பரமசிவன். ஆர்வமுடன் சென்று பார்வதி ஆதியைப் போற்றி நிற்க, சிவன் அந்த விளக்கின் திரியை நீட்டினார். அதிலிருந்து முத்துப்போன்ற சுடர் ஒன்று விழுந்தது. பார்வதி முந்தானையை ஏந்தினாள். உருவின்றி முண்டம் ஒன்று

தோன்றிப் புரண்டது. பார்வதியும் ஒப்பும் உவமையும் இல்லாப் பொருளே ஆதியே! சோதியே! அம்பலவாணரே சீர் இல்லாத முண்டத்தைப் பிள்ளை என்று தந்தீரே என்று புலம்ப சிவன் அருளால் எல்லா உலகமும் மெச்ச கேடில்லாத உறுப்புகளுடன் சுடலை தோன்றினான். சுடரிலிருந்து தோன்றியதால் சுடலை என்று பெயர் பெற்றான். அக்குழந்தையை சிவனிடம் பெற்ற உமையவன் தாய்ப்பால் கொடுக்காமல் அமிர்தத்தை ஊட்டினாள். பசியமர்த்தித் தொட்டிலில் போட்டுத் தாலாட்டிச் சீராட்டி சந்தோசமாகி நின்றாள்.

சுடரிலிருந்து தோன்றிய சுடலைக்கண்ணு, தொட்டிலில் கிடந்தவன் தொந்திப்பசி பொறுக்காமல் எட்டிக்குதித்துத் தாய் அணிந்த பாலமுகத்தினால் தன் பசி தீராதென்று மயானத்துக்குச் சென்றான். பிணத்திலே எருவடுக்கிக் புரசமண்ணால் பொதிந்து, தீயிட்டு வேகவைத்திருந்தார்கள். தீயில் வெந்த பிணத்தைக் கண்டு ‘வாயார பிணத்தைத் தின்போம்’ என்று முடிவு செய்தான். மாயாண்டி விறகுகளை பிரித்து வாகுடன் மண்டியிட்டுப் பிணங்களைத் தான் தின்று பேய்களுக்கும் விருந்தளித்தான். வாயில் ஊண் வடியக் கயிலையிலே தொட்டிலில் வந்தமர்ந்து குழந்தையாய்க் ‘குப்வாகுவ்வா என்று அழுத தன் பிள்ளையிடம் உமை வந்தாள். பிணவாடை அடித்தது. வள்ளல் சிவனிடம் வந்து ‘பிள்ளைவர் கேட்டதற்குப் பிணம் திண்ணியைத் தந்தீரே’ என்றாள். அதைக்கேட்ட சிவனார் பிள்ளையைக் காணப்புறப்பட்டார். அங்கே போய்ப் பார்த்தபோது பார்வதி சொன்னபடியே இருக்கக்கண்டார்.

இக்குழந்தை சிவகயிலையில் கச்சிதமாய்க் கயிலையில் மாமிசத்தை கலந்துவிடுவான். ஆகையினால் நீ கயிலையை விட்டுப்போய்விடு என்று சுடலையிடம் கூறினார். சுடலையும் என்னுடைய பெயரென்ன? என்று கேட்டார். உன்னுடைய பெயர் சுடலைக்கண்ணு என்றார் சிவன். நல்லது பரமசிவனே எனக்குப்பசி அமர ஏற்ற இடம் சொல்லுங்கள் என்று கேட்டான். உனக்கு

ஊட்டுணவு மகிழ்ச்சியுடன் தர மக்கள் உண்டு. மந்திரங்கள் கற்ற மானிடர்கள் உண்டு. வில்லுடனும், முரசுடனும் வேண்டிய கொடையை உனக்குத் தருவார்கள். வல்லவனே அங்கே போயிடு உனக்கு வாட்டமில்லை என்றார் பரமசிவன்"[88] இவ்வாறு சுடலைமாடனின் பழம் பிறப்பினை எடுத்துரைத்து இருக்கின்றனர். இதன்பிறகு கயிலையில் மாடனுக்குப் பூசை கொடுக்கப்படுகிறது. மதுரை மீனாட்சியிடம் பூசை உண்ணப்படுகிறது. அதன்பிறகு மலையாளம் செல்கிறார். மலையாளநாட்டில் மாவியக்கி எனும் பெண்ணை பல்லி உருவில் சென்று உறவு கொள்கிறான். "மாயாண்டி அன்று இரவில் மாவியக்கி வாழ்ந்த வீட்டிற்கு வர எண்ணினான். ஏழு அறைக்குக் கீழே மாவியக்கி இருப்பாள் என்று எண்ணிய மாடசாமி பல்லி ரூபங்கொண்டு பலகணி வழியே சென்றான். உள்ளே சென்று மாடசாமி மாவியக்கி நித்திரை செய்யும் அறைக்குள் நுழைந்தான். சபதம் செய்தபடி அந்த ராஜியை கற்பழித்துவிட்டுச் செல்ல வேண்டும் எண்ணித் தென் திசையிலே தலைவைத்து உறங்கிய அவளை அப்படியே வடதிசையில் தூக்கி வைத்து இன்பம் அனுபவித்தான். மீண்டும் பல்லி வடிவெடுத்துத் திரும்பிச் சென்றான்."[89]

பின்பு புனலூர், நாலுசாலிக்கரை, கொச்சி என்று பல இடங்களில் சுற்றித் திரிந்தான். இறுதியில் பகவதி அம்மனை கண்டான். அம்மனிடம் மந்திரவாதிகளை ஆங்காங்கே கொன்று கொலையடக்கி வந்தேனென்றும் மாடனை அரவணைத்து கருவூலத்தைக் காவல் செய்கவென்று கூற அன்று முதல் காவல் தொழில் பூண்டான்.

இத்தொழில் ஒருபுறமிருக்க தான் செய்யும் வேண்டாத வேலைகளையும் செய்தான். காக்காச்சி என்ற மலையில் விளையும் மஞ்சள், இஞ்சி, வாழை, வரகு, தினை முதலியவற்றினைப் புழுவாக வடிவங்கொண்டு அழிக்கத் தொடங்கினான். இதற்கு முடிவு கட்ட காளிப்புலையன் (மாவியக்கியின் தந்தை)

என்ற மந்திரவாதியை அழைத்துக் கேட்க இது மாடனின் லீலை என்றறிந்து நான் கேட்கும் பொருட்களை கொடுத்தால் அவனை அடக்கிவிடுவேன் என்றான். மந்திரவாதி “அட்ட கும்பம் வைக்க வேண்டும். அதற்கு எட்டுத் தேங்காய் வேண்டும், விநாயகர் பூசை செய்வதற்கு நிறை மரக்கால் நெல் வேண்டும். நீண்ட கும்பக்குடம் வேண்டும். பூ, பொறி, அவல், தோசை, வடை வேண்டும். எள்ளுருண்டை சர்க்கரையும் இன்பமுடன் தரவேண்டும். தூபதீபம் கட்டுடன் தரவேண்டும். கும்பத்தை அடைப்பதற்குக் கோடித்துணி தரவேண்டும். இன்னும் பல சாமான்கள் இன்று எனக்குத் தரவேண்டும். அடுத்தடுத்து அறுப்பதற்கு ஆறு சேவல் வேண்டும். எடுத்து அறுக்க ஏழு கிடாய் வேண்டும், கன்னிக்கோழி முட்டை வேண்டும், கற்புடைய பெண்கள் நூற்ற நூல் வேண்டும். சுடுகாட்டுச் சாம்பல் வேண்டும், சூளைச் சாம்பல் வேண்டும், நாங்கெண்ணையும், கோங்கெண்ணையும், நல்ல நறுநெய்யும் வேண்டும், ஆலின் சுப்பி, அத்திச்சுப்பி, அரசுச்சுப்பி, வன்னிமரச்சுப்பி ஆகிய சிறு விறகுகள் வேண்டும். ஆலம்பலகை ஒன்று வேண்டும்.”[90]

இவற்றினைப் பெற்றுக்கொண்ட காளிப்புலையன் அதற்கான செயலில் இறங்கினான். மாடன் புலையனிடம் கேட்டது உயிர்ப்பலி. “சூலாடும், சூலுப்பன்றியும், தலைச்சூலுப்பெண் பலி வேண்டும்”[91] காளிப்புலையன் சம்மதிக்க மாடன் புலையனின் சிமிழுக்குள் நுழைந்தான்.

இதற்காக கால் நட்டு பந்தலமைத்து மாடன் கேட்ட சூலாடு, சூலுப்பன்றியும் கொடுத்தான். தன் மகள் மாவியக்கியை இரக்கமின்றி நெஞ்சைக்கீறி பலிகொடுத்தான். இதனை ஏற்றுக் கொண்டதாக புராணம் கூறுகிறது. இறுதியாக சொரிமுத்தையன் கோயில் சென்று அங்குள்ள வன்னிமரத்தடியில் தன் படையுடன் அமர்ந்து உறைந்து போயினர். அன்று

முதல் அடியவர் குறைதீர்க்கும் தெய்வமாக எழுந்தருளினார்கள் என்று சுடலைமாடன் வரலாறு விவரிக்கப்பட்டுள்ளது.

### 2.13 சமயங்களின் ஊடுருவல்

புராணக்கதைகளில் நாட்டார் தெய்வங்கள் சமயத் தெய்வங்களுடன் உறவுள்ளவைகளாக சித்தரிக்கப்பட்டுள்ளன. சமயவாதிகள் தத்தம் சமயங்களைப் பரப்புவதற்கு பல வழிகளை கையாண்டனர். சமயத்தை வலுப்படுத்த பெரும் மனித கூட்டங்களைச் சேர்க்க வேண்டுமென்ற எண்ணத்தில் சமயவாதிகள் தத்தம் சமயங்கள் தான் உயர்ந்தது என்பதனை உலகிற்கு வெளிப்படுத்த போராடினர்.

இதன் வெளிப்பாடு நாட்டார் தெய்வங்களைப் புராணக் கதைகள் மூலம் சமயத் தெய்வங்களின் அவதாரமாகவும், காவல் மற்றும் பரிவாரத் தெய்வமாகவும் காட்டிக் கொண்டதாகும். இதனால் நாட்டார் வழிபாட்டு மக்களை தம் சமயத்தின் மீது ஈர்க்க முடியுமென திடமாக நம்பினர். தெய்வ நம்பிக்கை தோன்றியதன் பின்பு மதங்கள் நிறுவப்பட்டது. மதச்சார்புடன் தெய்வத்தை இணைப்பதற்கும் மதத்தினை பரப்புவதற்கும் தெய்வங்களை கையிலெடுத்துள்ளனர். “தெய்வ நம்பிக்கையும், தெய்வ வழிபாடும் மக்களிடம் வேரூன்றி நிலைத்த நெடுங்காலத்திற்குப் பின்னரே மதங்கள் தோன்றின. தாங்கள் நம்பிய எல்லாத் தெய்வங்களையும் பேதாபேதமின்றி மக்கள் வணங்கிய முறையிலே மாற்றம் ஏற்பட்டது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு தெய்வத்தையோ குறிப்பிட்ட சில தெய்வங்களையோ வணங்கத் தொடங்கினர். இவர்கள் தாங்கள் வணங்கும் தெய்வங்களே உயர்ந்தவை. ஆக்கவும், காக்கவும், அழிக்கவும் ஆற்றலுடையவை எனத் தங்களுக்குள் வாதம் புரியத் தொடங்கினர். இவ்வாதம் வலுப்பெற்றக் காலத்தில் தான் தங்கள் தெய்வமே உயர்ந்ததென்று உரைக்கும் மதங்கள் தோன்றின. இதன் பிறகு தான் மதத் தத்துவங்கள் பலவாறாகப் பெருகி வளர்ந்தன”[92] எனும் சாமி சிதம்பரனார்.

கூற்றுப்படி வழிபாடு முதலிலும் மதங்கள் பின்பும் தோன்றின என்பதனை அறியமுடிகிறது. தங்களின் மதம் உயர்ந்தது எனக் காட்டிக்கொள்ள மதம் சார்ந்த தெய்வ சக்தியினை மிகைப்படுத்தி மக்களை தம் பக்கம் இழுக்க முயற்சித்துள்ளனர் என்பது தெளிவு.

இந்நோக்கத்தில் சைவம், வைணவம், இசுலாம், கிறித்தவம் ஆகியவை ஒரே நேர்கோட்டில் பயணித்தவை என்று கருதயிடமுண்டு. இதில் சைவமும், வைணவமும் குறிப்பிடத்தக்கது என்பதனை மேற்குறிப்பிட்ட புராணக்கதைகள் தெளிவுபடுத்துகிறது. இச்சமயவாதிகள் மக்களின் தலைவனான மன்னனை மதம் மாற்றுவது அதன் மூலம் மக்களை மதம் மாறச் செய்வது இப்படியான சங்கிலித்தொடரமைத்து இச்செயல்களைச் செய்துள்ளனர்.

நாட்டுப்புறத் தெய்வங்கள் தெய்வங்களே இல்லையென்று சமயவாதிகள் திட்டமிட்டு பரப்பத் தொடங்கினர்.

**“சென்று நாம் சிறுதெய்வம் சேரோம் அல்லோம்”**

என்கிறார் திருநாவுக்கரசர். சிறுதெய்வங்களை வணங்காதீர்கள், அவைகளிடம் செல்லாதீர்கள் என்று எச்சரித்து தன் எதிர்ப்பைத் தெரிவிக்கிறார்.

**“பிண்டத் திரளையும் பேய்கட்**
**நீர்ச்சோறும் உண்டதற்கு வேண்டு**
**நீ ஓடித்திரியாதே” (நா.தி.பி.168)**

என்னும் இப்பாடலில் பெரியாழ்வார் நாட்டார் தெய்வங்களைப் பேய், பிசாசு என்றும் கூறியிருக்கிறார்.

**“மாடனை காடனை வேடனை பற்றி**
**மயங்கும் மதியிலிகள்” (பாரதியார் பாடல்கள்:31)**

எனப் பாரதியார் மதி இழந்தவர்கள் தான் மாடனையும், காடனையும் வணங்குவர் எனக் கீழ்நிலைப்படுத்தி சமயத் தெய்வங்களை வணங்கச் சாடியுள்ளார். இவ்வாறாக சமயவாதிகளால் ஒடுக்கப்பட்டு, ஓரங்கட்டப்பட்டது நாட்டுப்புற வழிபாடும் நாட்டார் தெய்வங்களுமாகும்.

இதன் காரணமாக நாட்டுப்புறத் தெய்வங்களை

- பேய், பிசாசு எனக் கொச்சைப்படுத்தினர்.
- மக்களால் சிறுதெய்வங்களை ஒதுக்கும்படியாக கீழ்த்தரமான சிந்தனையை முன்வைத்தனர்.
- நாட்டார் சாமிகளை புராணக் கதைகள் மூலம் சமயத் தெய்வங்களுடன் இணைத்துள்ளனர்.
- நாட்டுப்புறக் கோயில்களில் முருகன் விநாயகர் போன்ற சமயத் தெய்வங்களை இணைத்தனர்.

இவ்வாறாக நாட்டுப்புற வழிபாடு சமயங்களின் பிடியில் சிக்கிக் கொண்டது. அதன் தாக்கம் இன்றளவும் நாட்டுப்புற வழிபாட்டில் உள்ளது என்பது புலனாகின்றது. சிறுதெய்வ வழிபாட்டில்

- உயிர்ப்பலி இல்லை (குறிப்பிட்ட சில கோயில்களில்)
- ஆரியர்கள் பூசை செய்யும் மரபு
- கொடிமரம், இராசகோபுரத்துடன் ஆகமவிதிகள் பின்பற்றப்படுவது
- கும்பாபிடேகம் நடைபெறுவது

போன்ற பெருந்தெய்வ கோட்பாடுகள் நிறைந்த சிறுதெய்வங்களை கள ஆய்வில் காணமுடிகின்றது.

### 2.13.1 நாட்டார் தெய்வங்களும் சமயங்களின் தாக்கமும்

நாட்டுப்புற வழிபாட்டில் ஆண், பெண் என்ற இரண்டு நிலையிலும் தெய்வங்கள் வணங்கப்பட்டு வருகின்றன. இவை மாரி, காளி, ஐயனார், கருப்பர், முனியன் என்ற பெயருடன் காணப்பட்ட தெய்வங்கள் பிற்காலத்தில் காளியம்மன், மாரியம்மன், கருப்பசாமி, அய்யன், சாஸ்தா, முனீசுவரர் என்று மாற்றம் பெற்றன. மரியாதை சொல்லாடல்களான அம்மன், ஈசுவரன் என்ற இணைப்புச்சொற்கள் சமயத்தால் உருவாக்கப்பட்டவை எனக்கருதயிடமுண்டு.

ஆண் தெய்வங்கள்; சிவன், திருமாலின் அவதாரங்களாகவும், உறவுடையதாகவும் (சகோதரர், புதல்வர்), பெண் தெய்வங்களைப் பார்வதியின் வழித்தோன்றல்களாகவும் காரணம் கற்பித்து மாற்றத்தை ஏற்படுத்தினர்.

இறந்தோர் வழிபாட்டை சைவம் முன்னர் உறிஞ்சியது என்றால் இன்று இந்துத்வா அமைப்புகள் நாட்டில் தெய்வங்களைச் சிவன், பார்வதி, லெட்சுமி ஆகிய தெய்வங்களுடன் உறவு கற்பித்து நாட்டார் தெய்வங்களை அழிக்கும் முயற்சியில் ஈடுபடுகின்றனர் எனும் ஆ.சிவசுப்பிரமணியனின் கருத்தையும் ஈண்டு நாம் ஒப்பு நோக்கத்தகும்.

### 2.13.2 மாரியம்மனும் சமயங்களின் தாக்கமும்

ரேணுகாதேவி என்ற அக்னி சக்தியே மாரியம்மன் எனப் புராணம் கூறுகிறது. சக்தி என்பவள் பராசக்தி என்று அழைக்கக்கூடிய பார்வதி. மேலும் இவளுக்குப் பரசுராமன் என்னும் பெயரோடு ஆறாவது அவதாரமாக திருமால் அவதரித்தார் எனக் கதைகட்டி மாரி என்னும் சிற்றூர்த் தெய்வ வழிபாட்டை சமயத்தின் சக்திக்குள் அடக்குகின்றனர். சிவபெருமானும் ரேணுகாதேவியை நோக்கி நீ என் தேவியாகிய பராசக்தியின் பல்வேறு தோற்றங்களில் ஒரு அம்சமே எனத் தெரிவித்ததாகவும் கூறுகின்றனர். சைவம் தழைக்க சமயவாதிகள் இவ்வழிபாட்டை சமயத்துடன் இணைத்தனர். இதன் மூலம் சிவனையும், பார்வதியையும் தம் மூலதெய்வங்கள் என மக்களை நம்பவைத்துள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

### 2.13.3 காளியம்மனும் சமயங்களின் தாக்கமும்

சிற்றூர் தெய்வவழிபாட்டில் மாரிக்கு அடுத்தபடியாக காளி வழிபாடு சிறப்புப்பெற்றது. இதனையும் சமயத்திற்குள் கொண்டு வருகின்றனர். “தாருகாசூரனால் துன்பமடைந்த தேவர்கள் பெண்ணுருக்கொண்டு சிவமூர்த்தியை அடைந்து தாருகாசூரனை அழிக்கும்படிக் கூறினர். பெண்ணாலன்றி வேறு

எவராலும் அழிக்கமுடியாத தாருகனை வெல்வதற்கு சிவமூர்த்தி சக்திக்கு கட்டளையிட்டார் அக்காலையில் தேவியின் சக்தி சிவமூர்த்தியின் விசக்கறை படிந்த கனற்கண்ணில் பிறந்து வெளிப்பட்டது. அவ்வுரு விசக்கறை படிந்து வந்ததால் காளி எனப்பெயர் பெற்றது"[93] எனப் புராணங்கள் குறிப்பிடுவதாக அபிதான சிந்தாமணி விளக்கம் தருகின்றது. இதிலும் தேவியாகிய பார்வதியும், அவரது கணவராகிய சிவபெருமானும் காளியின் பிறப்பிற்குக் காரணமாக உள்ளதாகச் சுட்டப்பெறுகின்றது.

### 2.13.4 ஐயனாரும் சமயங்களின் தாக்கமும்

ஐயனார் வழிபாடு கிராம வழிபாடுகளில் முதன்மையானதாக விளங்குகின்றது. இவர் வீரர் வழிபாட்டுடன் தொடர்புடையதாகக் கருதப்படுகிறது. ஆனால் ஐயப்பனாகவும் வடமொழியில் சாஸ்தாகவாகவும் மாற்றி சமயத்தில் இணைத்துள்ளனர். ஐயப்பன் பிரம்மச்சாரி என்கிறது சமயம். அப்படியென்றால் ஐயனாருக்குப் பூரணை, புட்கலை என்ற மனைவியர் வந்தது எப்படி என்பது மேலும் ஆராயத்தகும்.

ஐயனார் கையிலுள்ளது செண்டாயுதம் என்கிறது சமயம். ஆனால் அது கிராம மக்களின் புழக்கத்தில் உள்ள சூர்கத்தி என்பது களஆய்வில் காண நேர்ந்தது. சமயங்களின் ஊடுருவலால் ஒன்றுக்கொன்று முரணாகத் தோற்றம் பெறுகிறது என்று கருதமுடிகிறது.

### 2.13.5 கருப்பரும் சமயங்களின் தாக்கமும்

கருப்பச்சாமியை மாயவன் (சிவன்) உண்டாக்கினான் என்றால் போதையும், சுருட்டும், இரத்தப்பலியும் பெறும் தெய்வமாக கருப்பர் எப்படி மாறிப்போனார் என்ற சந்தேகம் எழுகிறது. போர் வீரனாக இருந்து இறந்துபோனவன் வழிபாட்டை சமய வழிபாட்டோடு இணைத்துள்ளனர். சமயக்கோயில்களில் முன்னோடித் தெய்வமாக கருப்பரை இணைத்து சமயத்தெய்வம் என்ற தோற்றத்தை ஏற்படுத்தியுள்ளனர்.

### 2.13.6 முனீசுவரரும் சமயங்களின் தாக்கமும்

முனியைய்யா என வழங்கிய நாட்டார் வழிபாட்டு மரபில் ஈசுவரன் என்ற பின் ஒட்டு எங்கிருந்து வந்து இணைந்தது என்பது ஆய்வுக்குரியது ஆகும். ஈசுவரன் சைவம் என்றும், முனீஸ்வரன் அசைவத்தைச் சார்ந்தவராகவும் இருப்பது முரண்பட்ட நிலையினைக் குறிக்கின்றது.

### 2.13.7 சுடலைமாடனும் சமயங்களின் தாக்கமும்

மாடன் சுடுகாட்டுத் தெய்வம் ஆகும். இதன்மூலம் இறந்தோர் வழிபாடாக பார்க்கப்படுகிறது. "மாடனை சுடலையோடு இணைத்து சுடலைமாடன் என்று மக்கள் வணங்கி வருகின்றனர் இதனைச் சுடுகாட்டுத் தெய்வம் என்றும் கூறலாம்"[94] மாடனின் வழிபாடு இந்நிலையிலிருக்க மாடனின் பிறப்பு சிவனின் உறவிற்குள் கொண்டுவரப்படுகிறது.

சிவனுக்கு சுடுகாடு இடமாகும். மாடனுக்கும் சுடுகாடு பொதுவான ஒன்று. இதனை மையப்படுத்தி மாடனை சிவனுடன் தொடர்புப்படுத்தியுள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

சமயங்களின் எழுச்சியும், வீழ்ச்சியும் மனிதர்களைச் சார்ந்தது. மனிதர்களின்றி மதம் இல்லை என்பது தெளிவான ஒன்று. இதன் காரணமாகவே மதங்களின் வளர்ச்சிக்கு மனிதர்களை தன் வயப்படுத்துகின்றனர் சமயவாதிகள்.

இவற்றிற்கு ஊன்றுகோலாக முதல்நிலையில் நாட்டார் தெய்வங்களை கீழ்நிலைப்படுத்தி மக்களை அத்தெய்வங்களிடமிருந்து அந்நியப்படுத்துகின்ற முயற்சியை மேற்கொள்கின்றனர். இரண்டாம் நிலையில் நாட்டார் தெய்வங்களின் பிறப்பு, வளர்ப்பு; சமயத்தெய்வங்களின் வழித்தோன்றல்கள் எனக்கூறி நாட்டர் தெய்வங்களைவிட அவற்றின் மூலத்தெய்வங்களான சமய தெய்வங்களை முன்னிலைப்படுத்துகின்றனர்.

மூன்றாம் நிலையில் சமயத்தெய்வங்களின் முன்னோடியாக, காவல் தெய்வமாக நாட்டுப்புறத் தெய்வங்களை வழிபட வைத்து மக்களை திசை திருப்பியுள்ளனர்.

நான்காம் நிலையில் நாட்டுப்புறக் கோயில்களில் முருகன், விநாயகர், துர்க்கை போன்ற பெருந்தெய்வச்சிலைகளையும் நிறுவி வழிபடத் தூண்டியுள்ளனர். இவையனைத்தும் சமய வளர்ச்சிக்கு போர்த்தப்பட்ட போர்வைகள் ஆகும். இதன் வெளிப்பாடு ஆரியர்களின் மந்திரமும், விதிகளும் இன்று சிறுதெய்வக் கோயில்களில் இடம்பெறக் காரணமாக இருக்கிறது என்று கருதமுடிகிறது.

### 2.14 சமூகக் கட்டமைப்பு

சமூகத்தில் ஆண், பெண் என்ற பாலினம் பண்பாட்டுக் கட்டமைப்பாக உருவாக்கப்பட்டுள்ளது. இது ஒன்றிலிருந்து ஒன்றை வேறுபடுத்திக் காட்டுகிறது. இவ்வேறுபாடானது பலநிலைகளில் தன்னை நிலைநிறுத்திக் கொண்டிருக்கிறது.

ஆண், பெண் வேறுபாடு (பாலின அடிப்படையில்).
உயர்ந்தவர், தாழ்ந்தவர் (சாதிமத அடிப்படையில்).
ஏழை, பணக்காரர் (பொருளாதார அடிப்படையில்).

நாட்டுப்புற வழிபாட்டில் இவ்வகையான வேறுபாடுகள் தெய்வங்களின் தலவரலாற்றிலிருந்து வழிபாடு வரைக்கும் தொடர்கிறது என்பதனைக் களஆய்வுச் செய்திகள் சுட்டுகின்றன.

### 2.15 சாதிய கட்டமைப்பு

நாட்டார் வழிபாட்டு மரபுகளில் சாதி தனித்த இடத்தினைப் பெற்றுள்ளதென்பது களஆய்வின் வழிப் பெறப்பட்ட தகவல். குறிப்பாக,

- ❖ தச்சவயல் ஆற்றங்கரை காளியம்மன் கோயில் பள்ளர் இனத்தவருக்கு மட்டும் சொந்தம். வேறு யாரும் பூசை செய்யமுடியாது.
- ❖ தாழையூர் கூத்தாடி முத்துப்பெரியநாயகிஅம்மன் கோயிலில் கள்ளர் மற்றும் யாதவர் இனத்தாருக்கு மட்டும் முதல் மரியாதை செய்யப் பெறுகின்றது.

❖ ஈகரை ஆற்றங்கரை நாச்சியம்மன் கள்ளர் இனத்தாருக்குச் சொந்தம்.

❖ இறகுசேரி மஞ்சனப்பேச்சியம்மன் பிள்ளைமார் சமூகத்திற்கு மட்டும் உரியது.

❖ கண்டதேவி காளியம்மன் நாடார் இனத்தாருக்கு மட்டும் உரியதாகும்.

❖ ரேணுகாதேவி முத்துமாரியம்மன் முதலியார் இனத்தாருக்குரியது,

❖ அருணகிரிப்பட்டிணம் முத்துமாரியம்மன் அகமுடையார் இனத்திற்குரியது,

❖ கும்மங்குடி கொட்டுடைய ஐயனார் யாதவருக்குரியது.

❖ சுக்கிரப்பட்டி வேலாயுதமூர்த்தி ஐயனார் கள்ளர் மற்றும் பள்ளர் இனத்திற்குரியது,

❖ கண்டியன் புதுவயல் நல்லாத்துரை முனீஸ்வரர் பள்ளர் இனத்தவருக்கு மட்டும் உரிமை உடையது.

இவ்வாறாக ஒவ்வொரு தெய்வமும் குறிப்பிட்ட சாதியினரின் ஆதிக்கத்தால் அவர்களின் கட்டுப்பாட்டிற்குள் இருக்கிறது. அவர்களின் ஆதிக்கம் வழிபாட்டிலும் தொடர்கிறது.

சில கோயில்களில் அனைத்துச் சாதியினரும் சேர்ந்து விழா எடுத்தாலும் முக்கிய நிகழ்வுகளான முதல் மரியாதை, கோயிலின் உள் அனுமதித்தல், மேடை ஏற்றுதல் போன்றவைகளில் ஆதிக்கச் சாதியினர் முன்னிலைப் படுத்தப்படுகின்றனர் என்பதனைக் களஆய்வில் காணமுடிந்தது.

**2.16 தொகுப்புரை**

❖ அச்ச உணர்வும், அன்பு நிலையும் சிறுதெய்வ வழிபாட்டிற்கு அடிகோலின.

❖ வைதீக மரபிற்கும், ஆகம விதிமுறைகளுக்கும் உட்படாத கிராமத் தெய்வங்கள் சிறுதெய்வங்கள் என கட்டமைக்கப்படுகிறது.

- இறந்துபட்ட மனிதர்கள் தெய்வங்களாக்கப்படுகின்றனர். இயற்கை வழிபாடு ஆரம்பகால வழிபாடாகும்.
- சூரியன், சந்திரன், நீர் போன்றவை வழிபடு தெய்வங்களாக இருந்துள்ளன.
- அடுத்த நிலையில் நடுகல் வழிபாடு நடைபெற்றுள்ளது.
- உருவ வழிபாடு சிறுதெய்வ வழிபாட்டின் வளர்ச்சி நிலையாகும்.
- மனிதர்களின் புழங்கு பொருட்கள் தெய்வங்களின் கைகளில் இருக்கக் காணலாம்.
- ஆண், பெண் என்ற இரண்டு நிலைகளிலும் வழிபாடு வளர்ந்துள்ளது.
- பெண் தெய்வங்கள் சிறுதெய்வ வழிபாட்டில் அதிகம்.
- குலதெய்வம், ஊர்த்தெய்வம், காவல்தெய்வம், பிடிமண் தெய்வங்கள் மிகுதியாகும்.
- குடும்பத்தெய்வம் (குலதெய்வம்) ஊர்த்தெய்வமாக மாற்றம் அடைந்திருக்கிறது.
- அம்மன் தெய்வங்கள் ஊர்த்தெய்வங்களில் மிகுதியாகும்.
- கிராமங்கள் தோறும் காவல் தெய்வங்கள் காணப்படுகின்றன.
- இடப்பெயர்ச்சியின் காரணமாக பிடிமண் தெய்வங்கள் உருவாகின்றன.
- மாரியம்மன் தெய்வங்கள் ஊரின் மையப்பகுதியில் அமைந்துள்ளன.
- காளியம்மன் கோயில்கள் ஊருக்கு வெளியில் காணப்படுகின்றன.
- நீர்நிலைகளை ஒட்டிய பகுதிகளில் ஐயனார் கோயில்கள் அமைக்கப்பட்டுள்ளன.
- பூரணை, புட்கலையுடன் ஐயனார் அமர்ந்துள்ளனர்.
- ஐயப்பன் வழிபாட்டோடு ஐயனார் வழிபாடு தொடர்புபடுத்தப்படுகிறது.
- சாலையை ஒட்டிய பகுதிகளில் முனீஸ்வரர் கோயில் அமைக்கப்பட்டுள்ளது.
- பெரும்பான்மை காவல் தெய்வமாக காட்சி அளிக்கிறது.

- கருப்பர் கோயில்களுக்கு முதன்மையானதாக அழகர்கோயிலிலுள்ள பதினெட்டாம்படிக் கருப்பர் காணப்படுகிறது.
- ஆகம விதிப்படி கட்டிட அமைப்புகள் அமைப்பதில்லை சில கோயில்களில் கொடிமரம் காணப்படுகிறது.
- கண்டெடுக்கப்பட்ட சிலைகள் சிலஇடங்களில் வழிபடு தெய்வமாக காட்சியளிக்கிறது.
- பெரும்பாலும் கட்டிட அமைப்பின்றியும் கோயில்கள் அமையப்பெற்றுள்ளன.
- சில இடங்களில் குறிப்பிட்ட சாதியினரும், பல இடங்களில் சாதிசமய வேறுபாடின்றியும் வழிபாடு செய்கின்றனர்.
- மாரியம்மன் கோயில் பெரும்பாலும் அனைத்துக் கிராமங்களிலும் காணப்படுகிறது.
- ஜமதக்கினி முனிவரின் மனைவியான ரேணுகாதேவி முத்துமாரியம்மன் என புராணக் கதைகள் முன்வைக்கின்றன.
- கொற்றவை வழிபாடு இன்றைய காளி வழிபாடாக மாறியிருக்கிறது எனக் கருதயிடமுண்டு.
- போர்வீரர்களின் தோற்றத்தினைப்போல் கருப்பர் காணப்படுகிறார்.
- தொடக்க நிலையிலிருந்த உருவமற்ற வழிபாடு பின்னர் உருவ வழிபாடாக மாற்றம் பெற்றுள்ளது.
- வீச்சரிவாள், சூலாயுதம் அனைத்துச் சிறுதெய்வங்களிலும் ஆயுதமாகக் காணப்படுகின்றன.
- மரநிழலிலும், கண்மாய்க்கரையிலும் சிறுதெய்வங்கள் உறைவிடமாகவுள்ளன.
- நாட்டார் தெய்வங்களை சமயவாதிகள் ஒதுக்கிப் புறந்தள்ளினர்.
- புராணக்கதைகள் மூலம் நாட்டுப்புறத் தெய்வங்கள் சமயத்தெய்வங்களுடன் இணைக்கப்பட்டிருக்கிறது. இது சமயவாதிகளின் செயல்பாடாக இருக்கலாம்.

- ❖ சமயத் தெய்வங்கள் (முருகன், விநாயகர்) நாட்டுப்புற வழிபாட்டில் கலந்துள்ளது.
- ❖ ஆணாதிக்கதால் பெண்கள் தற்கொலை செய்துகொண்டு தெய்வநிலை பெற்றுள்ளனர்.
- ❖ பெண்களின் வாழ்வியல் சமூகத்தால் கட்டமைக்கப்பட்டுள்ளது மீறும்பொழுது தண்டிக்கப்பட்டுள்ளனர்.
- ❖ ஆண்களின் வாழ்க்கை அநாகரிகமாக இருந்தாலும் சமூகம் தெய்வநிலைக்கு கொண்டு சென்றுள்ளது. இது ஆணாதிக்கத்தின் உச்சநிலை எனலாம்.
- ❖ பொருளாதார நிலையில் வழிபாட்டில் மாற்றம் நிலவுகிறது. நாட்டுப்புற வழிபாட்டில் சாதிய கட்டமைப்பு முக்கிய இடம்பிடிக்கிறது. சாதிக்கொரு கோயில் எனப் பிரித்தாளப்படுகிறது.
- ❖ ஆதிக்கச்சாதியினர் (பெரும்பான்மை சாதி) வழிபாட்டு நிலையில் முதன்மை மற்றும் முன்னிலைப் படுத்தப்படுகின்றனர்.

**சான்றெண் விளக்கம்**


1. க.கண்ணன் (ப.ஆ.), தமிழ் வழிபாடும் சிறுதெய்வங்களும், ப.210.
2. க.ப.அறவாணன், பாம்பு வழிபாடு, ப.29.
3. துளசி இராமசாமி, நெல்லை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள், ப.6.
4. அ.அறிவுநம்பி, நாட்டுப்புறக்களங்கள், ப.54.
5. கு.வே.பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள், ப.185.
6. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.248.
7. வீ.கோபால், சிறுதெய்வ வழிபாட்டில் குறியீடுகள், தொகுதி-3, ப.116.
8. மு.பாண்டி. சிவகங்கை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள், ப.8.
9. தேவாரம், ஆறாம் திருமுறை, பா.எண்.965.
10. Michael Maffat, An untouchable Community in South India, P.224.
11. துளசி இராமசாமி, நெல்லை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள், ப.5.
12. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.229.
13. தே.ஞானசேகரன், மக்கள் வாழ்வில் மந்திரச் சடங்குகள், ப.35.
14. ச.பிலவேந்திரன், தமிழ்ச் சிந்தனை மரபு, ப.65.
15. சு.சண்முகசுந்தரம், நாட்டுப்புறவியல், ப.161.
16. மு.பாண்டி, சிவகங்கை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள், ப.14.
17. இணையதளம் http//www.koodal.com.
18. மேலது.
19. அ.அறிவுநம்பி, நாட்டுப்புறக்களங்கள், ப.43.
20. மு.பாண்டி, சிவகங்கை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள், ப.95.
21. சிவபதி, புகழ்பெற்ற 108 அம்பாள் ஆலயங்கள், ப.14.
22. M.Arokiasamy, Cult & Mariamma or the Goddess of Rain, P.161.
23. சிறிவேதவியாசர், மாரியம்மன் வரலாறும் வழிபாட்டுப் பயனும், ப.29.
24. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.226.
25. தகவல் துரைராஜ், நித்தியகல்யாணிபுரம், நாள்: 07.05.2016.
26. மேலது.
27. கலைக்களஞ்சியம், தொகுதி-II , பக்.95-96.
28. தகவல் - லெட்சுமணன் ஆசாரி, தேவகோட்டை, நாள்: 07.05.2016.
29. க.அறிவுநம்பி, நாட்டுப்புறக்களங்கள், ப.44.
30. பி.எல்.சாமி, தமிழ் இலக்கியத்தில் தாய்த்தெய்வ வழிபாடு, ப.42.

31. சோ.தங்கச்செல்வி, நாட்டுப்புறப் பெண்தெய்வவழிபாடு (மு.ப.ஆ.), ப.50.
32. மேலது., ப.538.
33. ஆ.கருப்பாயி, நாட்டுப்புறச் சிறுதெய்வ வழிபாடு, ப.61.
34. தகவல்: செல்வராசு, கண்டதேவி, நாள்: 07.05.2016.
35. தகவல்: துரைராஜ், தேவகோட்டை, நாள்: 07.05.2016.
36. தகவல்: இராமலிங்கம், பாவனக்கோட்டை, நாள்: 10.05.2016.
37. தகவல்: இந்திராணி, பாவனக்கோட்டை பரமக்குடி, நாள்: 10.05.2016.
38. தகவல்: சோமசுந்தரம், தேவகோட்டை, நாள்: 02.06.2016.
39. பி.ஆர்.சந்திரன், தேரும் போரும், ப.85
40. கிராண்ட் ஆலன், கடவுள் தோன்றியது எப்படி, பக்.5-6.
41. தகவல்: கணபதி, நாச்சாங்குளம், நாள்: 18.05.2016.
42. சு.வெங்கடேசன் (கட்.), இளையத்தளம், http//www.koodal.com
43. துளசி இராமசாமி, நெல்லை மாவட்ட நாட்டுப்புறத்தெய்வங்கள், ப.103.
44. அ.அறிவுநம்பி, நாட்டுப்புறத்களங்கள், ப.54.
45. தகவல்: இராமன், தேவகோட்டை, நாள்: 06.02.2016.
46. தகவல்: மனோகரன், கோடடூர், நாள்: 14.05.2016.
47. மேலது.
48. தகவல்: வேலாயுதம், கோட்டூர், நாள்: 14.05.2016.
49. தகவல்: மாயாண்டி, வெங்களூர், நாள்: 11.03.2016.
50. தகவல்: மேலது.
51. தகவல்: இராமன், தேரளப்பூர், நாள்: 07.06.2016.
52. மேலது.
53. தகவல்: இராமாயி, தச்சவயல், நாள்: 07.06.2016.
54. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.225.
55. சு.வெங்கடேசன், (கட்.) இணையத்தளம் httb/www.koodal.com.
56. தகவல்: பெத்தபெருமாள், மஞ்சனி, நாள்: 03.04.2016.
57. தகவல்: செல்வராணி, மஞ்சனி, நாள்: 03.04.2016.
58. தகவல்: சரசுவதி, இராம்நகர், தேவகோட்டை, நாள்: 24.01.2016.
59. தகவல்: மேலது.
60. சுசிலா கோபாலக்கிருஷ்ணன், நாட்டுப்புற நம்பிக்கைகள், ப.112.
61. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.229.
62. மு.பாண்டி, சிவகங்கை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள், ப.9.
63. அம்பை மணிவண்ணன், கோயில் ஆய்வுகளும் நெறிமுறைகளும், ப.84.

64. ப.அருணாச்சலம், சைவ சமயம் ஓர் அறிமுகம், ப.66.
65. தகவல்: கா.அழகப்பன், கும்மங்குடி, நாள்: 17.04.2016.
66. மேலது.
67. தகவல்: ஆ.வேலு, பப்பனி, நாள்: 01.05.2016.
68. தகவல்: சோனை. பப்பனி, நாள்: 01.05.2016.
69. தகவல்: ஆ.வேலு, பப்பனி, நாள்: 01.05.2016.
70. சு.வெங்கடேசன் (கட்), இணையத்தளம் httb/www.koodal.com.
71. தகவல்: வீரமுத்து, கண்ணங்கோட்டை, நாள்: 06.06.2016.
72. தகவல்: சுப்பையா, கண்டியன்புதுவயல், நாள்: 18.05.2016.
73. மு.பாண்டி, சிவகங்கை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள், ப.94.
74. கிராண்ட் ஆலன், கடவுள் தோன்றியது எப்படி?, பக்.5-6
75. ஆ.சிங்காரவேலு, முதலியார். அபிதான சிந்தாமணி, ப.1296.
76. வேதவியாசம், மாரியம்மன் வரலாறும் வழிபாடல் பயனும், ப.29.
77. சு.இரவிக்குமார், குதிரையெடுப்பு, ப.18.
78. கு.செ.இராமசாமி, சித்திரக்கூடம், ப.37.
79. க.நெடுஞ்செழியன், இரா.சக்கபாய், சமூகநீதி, ப.26.
80. சா.கந்தசாமி, சுதைமண் சிலைகள், நுன்கலைத்தொகுதி-2, பகுதி-2, பக்.36-37.
81. சு.இரவிக்குமார், குதிரையெடுப்பு, பக்.41-44.
82. மேலது., ப.45.
83. தகவல்: சோமசுந்தரம், தேவகோட்டை, நாள்: 02.06.2016.
84. சோசப், குலதெய்வ வழிபாடும் இடப்பெயர்ச்சி வரலாறும், (இ.ஆ.), ப.24.
85. சக்திக்கனல், அண்ணன்மார் சுவாமி கதை, ப.20.
86. இளங்கோ, வேலாயுதம் அய்யனார் காளியம்மன் திருக்கோயில், (மு.ஆ.), ப.43.
87. அ.அறிவுநம்பி, தமிழரின் வழிபாட்டுச் சிந்தனைகள், ப.47.
88. பொ.லெட்சுமணன் (ப.ஆ.), அருள்மிகு சுடலைமாடசாமி வரலாறு, பக்.23-25.
89. மேலது., ப.33.
90. மேலது., ப.35.
91. மேலது., ப.35.
92. சாமி சிதம்பரனார், தொல்காப்பியத் தமிழர், ப.97.
93. ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.427.
94. சோசப், குலதெய்வ வழிபாடும் இடப்பெயர்ச்சி வரலாறும் (இ.ஆ.), ப.76.

## இயல்-3

## வழிபாடும் விழாக்களும்

3.1 வழிபாட்டு வகைகள்

3.1.1 தனிமனித வழிபாடு

3.1.2 குடும்ப வழிபாடு

3.1.3 கூட்டு வழிபாடு

3.1.4 பொதுவழிபாடு

3.2 வழிபாட்டின் முறைகள்

3.2.1 தினவழிபாடு

3.2.2 வாரவழிபாடு

3.2.3 மாதவழிபாடு

3.2.4 சிறப்பு வழிபாடு

3.3 பூசைப்பொருட்கள்

3.3.1 வெற்றிலை பாக்கு

3.3.2 மஞ்சள்

3.3.3 மலர்

3.4 திருவமுது

3.5 இசைக்கருவிகள்

3.6 பூசாரி

3.7 திருவிழாக்கள்

3.7.1 பிற பெயர்கள்

3.7.2 விழா தொடக்கம்

3.7.3 வரி

3.7.4 காப்புக்கட்டுதல்

## இயல்-3

## வழிபாடும் விழாக்களும்

வழிபாடென்பது தமிழர்களின் பண்பாட்டு அடையாளங்களில் ஒன்றாகும். வட்டாரத்திற்கு வட்டாரம், கோயிலுக்குக் கோயில் வழிபாட்டு முறைகளில் வேறுபாடு காணப்படினும் அதன் நோக்கம் ஒன்றாக காணப்படும். மனிதனுக்கு அப்பாற்பட்ட இறைசக்தி உண்டென்று நம்புகின்ற மக்கள் தம் வாழ்வில் ஏற்படும் இன்பங்களுக்கும், துன்பங்களுக்கும் தெய்வங்கள் காரணம் என்பதில் உறுதியாக இருப்பதாகும். இத்தெய்வங்களை மகிழ்வித்து அவற்றின் சீற்றத்திலிருந்து தம்மைக் காத்துக் கொள்ளச் செய்யப்படும் நிகழ்வு வழிபாடு எனக் கொள்ளலாம்.

“முன்னோர் காட்டிய வழியில் செல்லுதல் என்பதே வழிபாடு ஆயிற்று. வழிபாடு என்ற சொல் இன்று தொழுதல், வணங்குதல் என்ற பொருளிலேயே பெரும்பாலும் வழங்கப்படுகிறது”[1] என நாகப்பா நாச்சியப்பன் கூறுகிறார். “வழிபாடு என்ற சொல்லுக்கு வணக்கம், கோட்பாடு, பூசனை, பின்பற்றுதல், வழக்கம் எனப் பல பொருள்கள் இருப்பினும் கடவுளையோ, உயிர் இல்லாதவற்றையோ, உயிர் உள்ளவற்றையோ மனத்தால் வழிபடுவதே வழிபாடு. குறிப்பிட்ட ஒரு வெற்றிடத்தை வழிபடல், பீடத்தை வழிபடல், உருவத்தை வழிபடல், நடுகல்லை வழிபடல் என வழிபாட்டில் பல நிலைகள் இருந்து வருகின்றன”[2] எனத் தமிழ் லெக்சிகன் விளக்கம் தருகிறது. “வழி என்பது இறைபேற்றுக்குரிய வழி என்றும், பாடு என்பது இறையேற்பை அடைவதற்குரிய மனிதன் மேற்கொள்ளும் செயல்முறைகள் வழிபாடு”[3] எனக் கழகத் தமிழ் அகராதி குறிப்பிட்டுச் செல்கிறது.

“இறைவன் உண்மையின் வடிவமாகவும், உறைவிடமாகவும் விளங்குகிறான். மனக்கலக்கங்களும், வேறுபல துன்பங்களும் நீங்கச் சிறந்த கருவியாக வழிபாடு அமைகிறது”[4] என விளக்கம் தருகிறார் இராசமாணிக்கனார்.

“வழிபடு என்ற வேர்ச்சொல்லினின்று பிறந்த வழிபாடு எனும் சொல் வழியிற் செல்லுகை (Proceding on the way) பின்பற்றுகை (Following) வணக்கம் (Perverence adoration veneration), பூசனை (Fitual Worship)”[5] என்ற பொருள்களைத் தருகிறது தமிழ்லெக்சிகன்.

இக்கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு நோக்குமிடத்து மனிதனின் அச்ச உணர்வு, தெய்வத்திடம் கொண்ட உறவுநிலை, மக்களுக்கும் தெய்வத்திற்கும் இடையிலான இடைவெளியைக் குறைத்தல், முன்னோர் காட்டிய வழியினைப் பின்பற்றுதல், சாந்தப்படுத்தி மகிழ்வுபடுத்துதல், நன்றி செலுத்துதல் போன்ற செயல்பாடுகள் வழிபாடு எனக் கொள்ளலாம். இதனடிப்படையில் ஆய்வுக்குட்படுத்தப்பட்ட தேவகோட்டை வட்டாரக் கோயில்களின் வழிபாட்டு நிலைகளை கீழ்வருமாறு வகைப்படுத்தலாம்.

### 3.1 வழிபாட்டு வகைகள்

வழிபடப்படுகின்ற தெய்வங்களுக்கேற்ப வழிபாட்டு நிலைகளும் மாறுபடக் காணலாம். ஆண், பெண் என்ற வகைப்பாடுகள் இதற்குள் அடங்கும். சமூகப் பொருளாதாரநிலை, சாதியக் கட்டமைப்புகள் போன்றவை வழிபாட்டு வளர்ச்சி நிலைகளைக் கட்டமைக்கின்றன. “தனிமனித வழிபாடு, குடும்ப வழிபாடு, சமூகநிலை அல்லது கூட்டு வழிபாடு என்றும், கொள்கைநிலை வழிபாடு, கும்பிடு நிலை வழிபாடு”[6] என வகைப்படுத்துகின்றனர். வழிபாடுகள், நாள்வழிபாடு, வாரவழிபாடு, மாதவழிபாடு, சிறப்புவழிபாடு என்றும் வகைமைப்படுத்தலாம்.

### 3.1.1 தனிமனித வழிபாடு

தனிமனிதன் தன்னுடைய நலனுக்காகவும், தான் சார்ந்த குடும்ப வளமைக்காகவும் வேண்டிக் கொள்வது தனிமனித வழிபாடு ஆகும். இவ்வழிபாடு பெரும்பாலும் குலதெய்வம், காவல் தெய்வங்களிடம் வழிபடப்பெறும். ஊரைக்காக்கும் தெய்வம் தம்மையும் காத்தருளும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் தன் வேண்டுதல்களைத் தெய்வத்திடம் முறையிடுவவதாகும். ஒருவர் நோய் நொடியிலிருந்து நீங்கி உடல் நலம் பெறவேண்டும் என வணங்குவர். மற்றொருவர் தன் முயற்சி வெற்றியடைந்து தெய்வத்தின் அருளால் சமூகத்தில் உயர்ந்த நிலைக்கு வந்துவிட்டேன் என வழிபடுகிறார். இவ்விரண்டு நிலைகளைக் காண இயலும். முன்னவர் வேண்டுவது எதிர்பார்ப்பு, பின்னவர் செல்வது நன்றிக்கடன். இந்நிலைகள் தனிமனித வழிபாட்டில் முக்கியக் காரணிகளாகும். "நெஞ்சு வலியால் துடித்துக் கொண்டிருந்த நான் ஓடிவந்து இராம்நகர் இராஜநாகேஸ்வரி கோயிலில் சாமிகும்பிட்டு திருநீறு பூசிக்கொள்ள வலி நின்றுவிட்டது."[7] இச்செயல் தனிமனித வழிபாட்டின் அடையாளமாகும். இதற்குப்பின் வெள்ளைச்சாமி அடிக்கடி அக்கோயிலுக்குச் சென்று வந்துள்ளார். வழிபாட்டுப் பொருட்களான ஊதுபத்தி, சூடம் போன்றவற்றினைப் படைத்து வழிபட்டு வந்துள்ளதனைக் காணமுடிகிறது. இதன் வெளிப்பாடு நம்பிக்கையை அதிகரிக்கச் செய்துள்ளது. தம் தெய்வத்தால் தன் துன்பம் தீர்க்கப்படுகிற தென்ற தெளிவு பிறக்கிறது. தனிமனித வழிபாட்டில் அச்சமும், எதிர்பார்ப்பும் முக்கியக் காரணிகளாக அமையப் பெற்றுள்ளதனைக் காணமுடிகிறது.

### 3.1.2 குடும்ப வழிபாடு

தனிமனித வழிபாட்டின் வளர்ச்சிநிலை குடும்ப வழிபாடு எனக் கொள்ளலாம். குறிப்பிட்ட இடத்தில் தனிமனிதன் குடும்பமாக வசிக்கத் தொடங்கியது முதல் இவ்வழிபாடு நிகழ்த்தப்பட்டிருக்கக்கூடும். குடும்பத்தில் ஒருவர் இறந்து போயிருப்பின் அவரைத் தெய்வமாக வழிபடப்படும் மரபு

பண்டைக்காலம் தொட்டு இருந்து வருகிறது. இது நீத்தார் வழிபாடு எனப்படுகிறது.

இதனடிப்படையில் இறந்தவரின் மீதுள்ள அன்பின் காரணமாகவும், அவரை வழிபடப்படுவதாலும் தம் குடும்பத்திற்கு நன்மைகள் நடக்கும். தீமைகள் விலகும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் குடும்ப வழிபாடு நிகழ்கிறது. “ஒரு சமுதாயம் அதன் உணவு, உடை, உறையுள் ஆகிய புறவாழ்க்கைத் தேவைகளை எந்தமுறையில் பெறுகிறதோ, அவ்வாறு பெறுவதற்காக எத்தகைய சமுதாய அமைப்பை உருவாக்கிக் கொண்டுள்ளதோ அந்த அமைப்பின் அடிப்படையின் மீது தெய்வ நம்பிக்கை என்ற மேற்கோப்பு எழும்”[8] என்கிறார் ஏங்கல்ஸ். இதனால் குடும்பத்தில் உள்ளவர்களின் தேவையிலிருந்து வழிபாடு தோன்றுவதால் இதனைக் குடும்ப வழிபாடு எனும் நிலைக்குள் அடக்கலாம். இவ்வழிபாடு கோட்டூர் சமுத்திரக்காளி, வெங்களூர் மூக்கரைக்காளியம்மன், கண்டியன் புதுவயல் நல்லாத்துரை முனிஸ்வரர், வெள்ளூர் தர்மமுனிஸ்வரர் போன்ற கோயில்களில் காணப்படுகிறது. இது குலதெய்வ வழிபாட்டோடு ஒன்றிணைந்ததாகும்.

### 3.1.3 கூட்டு வழிபாடு

குடும்ப வழிபாட்டின் அடுத்த நிலை கூட்டு வழிபாடு எனலாம். ஒரு குடும்பம் பல குடும்பங்களாகி சிற்றூர், பேரூர் என விரிவாக்கமடைகிறது. அவ்வாறு வளர்ச்சிபெற்ற நிலையில் தெய்வமும் குடும்பத் தெய்வமாக இருந்து ஊர்த்தெய்வமாக நிலைபெறுகிறது. ஊரார் அனைவரும் சேர்ந்து படையலும், பலியுமிட்டு வணங்கப்பெறுகிறது. இவ்வழிபாட்டில் சாதி, சமய, பொருளாதார ஏற்றத்தாழ்வின்றி அனைவராலும் வணங்கப்பெறுகிறது. இவ்வழிபாட்டு முறை கூட்டு வழிபாடாகும். இதனை தேவகோட்டை வட்டார நாட்டார் தெய்வங்களிலும் காணமுடிகிறது. தாழையூர் கூத்தாடி முத்துப்பெரியநாயகியம்மன், பொன்னத்தி

மாரியம்மன், இளக்கனிவயல் மூக்கரைக்காளியம்மன், தேவகோட்டை மாவடிக்கருப்பர். கண்டியன் புதுவயல் நல்லாத்துரை முனிஸ்வரர், இளங்குடி வேலாயுதம் ஐயனார், சித்தானூர் பொய்சொல்லாமெய்யர் போன்ற தெய்வங்கள் மேற்சொன்ன நிலையில் வழிபடப்பெறுகிறது.

### 3.1.4 பொது வழிபாடு

பொது வழிபாடென்பது குறிப்பிட்ட அவ்வூர் மக்கள் தவிர்த்துப் பல இடங்களிலிருந்து வந்து வழிபாடு செய்வதாகும். தொடக்கத்தில் சிற்றூர் சிறுதெய்வமாக இருந்து காலமாற்றம், பொருளாதார நிலையாலும் சிறுதெய்வ நிலையிலிருந்து வெகுசனத் தெய்வங்களாக வளர்ச்சி பெற்ற காலத்தில் இவ்வழிபாடு நடைபெறுகிறது. தெய்வ சக்தியின் ஆற்றலால் ஈர்க்கப்பட்டு மக்களின் நம்பிக்கையை அதிகமாகப்பெற்ற தெய்வங்கள் இந்நிலைக்கு உள்ளாக்கப்படுகின்றன. இவை வெகுசனத் தெய்வங்கள் என கட்டமைக்கப்படு கின்றன. சிறுதெய்வத்திற்கும் பெருந்தெய்வத்திற்கும் இடைப்பட்டவைகளாக இருக்கின்றன. இக்கோயில்களில் ஆகம விதிப்படி கட்டிடம், கொடிமரம் காணப்படும். வழிபாடு நாள்தோறும் நடைபெறும். இளங்குடி வேலாயுதம் ஐயனார், காளியம்மன் கோயிலில் இம்முறையிலான வழிபாடு நடைபெறுகிறது.

## 3.2 வழிபாட்டின் முறைகள்

வழிபாடென்பது சிறுதெய்வம், பெருந்தெய்வம் இரண்டிற்கும் பொதுவானதாகும். பெருந்தெய்வங்களுக்கு ஆகம விதிப்படி தினமும் காலப்பூசைகள் (எட்டுக்காலப்பூசை, ஆறுகாலப்பூசை, நான்குகாலப்பூசை) வகைப்படுத்தி மேற்கொள்வர். சிறுதெய்வக் கோயில்களில் இதற்கு நேர்மறையானதாக வழிபாடுகள் அமையும். காலமுறைப்படி வழிபாடு செய்வதில்லை.

நேரம், காலம் பார்ப்பதில்லை. இரவில் ஒரு மணிக்கு ஒருவரது உடல்நிலை சரியில்லை என்றால் நடு இரவிலும் கோயிலுக்குச் சென்று சாமி கும்பிட்டு விபூதி எடுத்து பூசிவிடுவர். இது அவர்களின் ஆத்மார்த்த நம்பிக்கை. தான் வணங்கும் தெய்வம் தம்மைக் காப்பாற்றும், தன்னுடன் துணை நிற்கும் என்ற நம்பிக்கை இதில் அடங்கியிருக்கிறது. நினைத்த நேரத்தில் ஊதுபத்தியும், சூடமும் ஏற்றி வழிபடப்படுவது சிறுதெய்வங்களின் அடையாளம். பெருந்தெய்வக் கோயில்களில் இரவு நடை சாத்திய பின்பு காலையில் பள்ளியெழுச்சி பாடித்தான் நடைதிறப்பர். இது ஆகம விதி.

### 3.2.1 தினவழிபாடு

வழிபாடு செய்வதற்குப் பொருளாதாரநிலை முக்கியப்பங்கு வகிக்கிறது. சிற்றூர்களில் உடல் உழைப்புச் சார்ந்த வேளாண் தொழிலை முதன்மையாகக் கொண்டுள்ளனர். இக்காரணத்தினால் பொருளாதாரநிலையில் பின்தங்கி யிருப்பார்கள். கோயிலுக்கென்று தனியான வருமானமும் இருப்பதில்லை. இதனால் நாள்வழிபாடு செய்வது அரிதானதாகும்.

எனினும் சில கோயில்களில் நாள்வழிபாடும் பெரும்பாலான கோயில்களில் வார மற்றும் மாதவழிபாடுகளும் செய்யப்படுகின்றன. பூசாரியாக அவ்வூரிலுள்ளவர் அல்லது கோயிலின் உரிமை உடையவர் இருப்பர். சில கோயில்களில் பிராமணர்கள் வழிபாடு (பூசை) செய்கின்றனர் என்றாலும் உயிர்ப்பலி கொடுக்கும் பொழுது இவர்கள் வருவதில்லை. வழிபாட்டிற்குப் பின்பாக ஆண் தெய்வக் கோயில்களில் விபூதியும், பெண் தெய்வக் கோயில்களில் மஞ்சள், குங்குமமும் பிரசாதமாக வழங்கப்படுகிறது. கோயிலின் கருவறைக்கு முன்பாகக்கிடக்கும் மண்ணும் விபூதியாக பூசிக்கொள்ளப்படுகிறது. சில நாட்களில் கிடாய் மற்றும் கோழிப் பூசையும் நடக்கிறது. இது அவரவர் வசதிக்கேற்ற நாட்களில் நடைபெறக் காணலாம்.

பெருந்தெய்வக் கோயில்களில் வழிபாட்டிற்கென்று நேரம் குறிக்கப்பட்டிருக்கும். ஒரு நாளைக்கு இத்தனை காலவழிபாடு என வரையறுக்கப் பட்டிருக்கும். இதற்கு நேரெதிரான நிலையை சிறுதெய்வ வழிபாட்டில் காணலாம். தினமும் வழிபாடு செய்ய வேண்டும் என்ற கட்டாயமில்லை. பொருளாதார சூழ்நிலையால் "மக்கள் தங்கள் சோற்றுக்கே வழியில்லாத நிலையில் ஆறுகாலப்பூசை செய்ய வழியுமில்லை, நாதியுமில்லையாதலால் தங்களின் தெய்வத்திற்கே அப்பழக்கம் இல்லையெனத் தெரிந்து, வருடத்திற்கு ஒருநாள் மட்டுமே அல்லது தேவையையொட்டி கூடுதலாக ஒன்றிரண்டுமுறை படையலிட்டு பூசை செய்கிறார்கள்"[9] என்றாலும் இன்றைய காலகட்டத்தில் ஒருசில கோயில்களில் தினவழிபாடு நடைபெறுகிறது. தாழையூர் கூத்தாடி முத்துப்பெரிய நாயகியம்மன், வாடியார் வீதி சமயபுர மாரியம்மன், இறகுசேரி சுடலைமாடசாமி, மஞ்சனப்பேச்சி, இளங்குடி வேலாயுதம் ஐயனார், நித்தியகல்யாணிபுரம் ரேணுகாதேவி முத்துமாரியம்மன், வாழ்கின்றமாணிக்கம் காளியம்மன், அழகாபுரிநகர் கள்ளாம்பிரம்பு காளியம்மன், அண்ணாநகர் மடக்கரைக்காளியம்மன், தேவகோட்டை பாண்டிமுனிஸ்வரர், சிவந்தான்கோட்டை நல்லமுனிஸ்வரர், தேவகோட்டை மாவடிக்கருப்பர் போன்ற கோயில்களில் தினவழிபாடு நடைபெறுவதனைக் காணமுடிகிறது.

### 3.2.2 வாரவழிபாடு

தினவழிபாடு செய்யவியலாத கோயில்களில் வாரவழிபாடு நடைபெறுகிறது. வாரத்தில் ஒன்றிரண்டு நாட்கள் வழிபாடு செய்யப்படும். பெரும்பான்மை வெள்ளி, செவ்வாய்க் கிழமைகளில் வாரவழிபாடு நடைபெறுவதனை களஆய்வில் காணமுடிந்தது. அண்ணாநகர் கள்ளாம்பிரம்புக் காளியம்மன், பாண்டி முனிஸ்வரர், சங்கரபதிக்கோட்டை தர்ம முனிஸ்வரர், வெங்களூர் மூக்கரைக் காளியம்மன், பாவனக்கோட்டை மலையாளக்

காளியம்மன், டி.சிறுவனூர் தட்டாரக்காளியம்மன், நாச்சாங்குளம் செட்டியாஊரணி காளியம்மன், கோட்டூர் சமுத்திரக்காளி, இளக்கினிவயல் மூக்கரைக்காளியம்மன், ஈகரை ஆற்றங்கரை நாச்சியம்மன், இராம்நகர் நாகாத்தம்மன், கும்மங்குடி கொட்டுடைய ஐயனார், சித்தானூர் பொய்சொல்லாமெய்யர், கண்ணங்கோட்டை சங்கரபதிகோட்டை தர்மமுனிஸ்வரர், மாவிடுதிக்கோட்டை கொம்படிக்கருப்பர் போன்ற கோயில்களில் வெள்ளி செவ்வாய் பூசை செய்யப்படுகிறது.

### 3.2.3 மாதவழிபாடு

தினவழிபாடு, வாரவழிபாடு செய்ய இயலாத கோயில்களில் மாதவழிபாடு நடைபெறும். மாதத்தின் ஏதேனும் ஒருநாள் மட்டும் வழிபாடு செய்வதாகும். கண்டியன் புதுவயல் நல்லாத்துரை முனிஸ்வரர், மோயன்வயல் பிள்ளைமடத்துக் காளியம்மன், வெள்ளுர் முனிஸ்வரர், பொன்னத்தி மாரியம்மன் ஆகிய கோயில்களில் மாதம் ஒருநாள் வழிபாடு செய்யப்படுகிறது.

### 3.2.4 சிறப்புவழிபாடு

தீபாவளி, திருக்கார்த்திகை, தமிழ் வருடப்பிறப்பு, ஆங்கில வருடப்பிறப்பு, சிவன்ராத்திரி, பாரிவேட்டை, அமாவாசை, பௌர்ணமி, இராகுகாலம், தைப்பொங்கல் போன்ற தினங்களில் சிறப்புவழிபாடு செய்யப்படுகிறது. இது அனைத்துக் கோயில்களிலும் நடைபெறுகிறது. இவ்வழிபாட்டிற்குரிய அட்டவணை கீழே இணைக்கப்பட்டுள்ளது.

| வ. எண் | கோயிலின் பெயர் | ஊர் | வழிபாடு நடைபெறும் நாட்கள் |
|---|---|---|---|
| 1. | முத்துமாரியம்மன் | அருணகிரிப் பட்டணம் | தைப்பொங்கல், திருக்கார்த்திகை, சித்திரை முதல் நாள், நவராத்திரி வழிபாடு நடைபெறும். |
| 2. | ரேணுகாதேவி முத்துமாரியம்மன் | நித்திய கல்யாணிபுரம் | பௌர்ணமி அன்று மாலை ஆறு மணிக்கு நடைபெறும் |

| 3. | சமயபுரத்து மாரியம்மன் | தேவகோட்டை | ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி அன்று மாலை 6 மணிக்கு மேல் சிறப்பு வழிபாடு நடைபெறும் |
|---|---|---|---|
| 4. | மாரியம்மன் | பொன்னத்தி | தீபாவளி, பொங்கல், சித்திரை முதல் நாள் |
| 5. | காளியம்மன் | வாழ்கின்ற மாணிக்கம் | புரட்டாசி மாதம் நவராத்திரி பத்து நாட்களும் |
| 6. | கள்ளாபிரம்புக் காளியம்மன் | அழகாபுரிநகர் | வெள்ளி, செவ்வாய் இராகு காலத்தில் சிறப்பு வழிபாடும் ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி அன்று சிறப்பு வழிபாடும் நடைபெறும் |
| 7. | மலையாளக் காளியம்மன் | பரமக்குடி | தை முதல் நாள், ஆடி மாதம் முதல் நாள், சித்திரை மாதத்தில் முதல் நாள் |
| 8. | பிள்ளைமடத்துக் காளியம்மன் | மோயன்வயல் | சித்திரை முதல் நாள், தைப்பொங்கல், பௌர்ணமி நாட்களில் வழிபாடு நடைபெறும் |
| 9. | மடக்கரை காளியம்மன் | அண்ணாநகர் | பௌர்ணமி இரவு ஏழு மணிக்கு |
| 10. | செட்டியா ஊருணி காளியம்மன் | நாச்சாங்குளம் | தைப்பொங்கல், தீபாவளி, திருக்கார்த்திகை நாட்கள் சிறப்பு வழிபாடு நடைபெறும் |
| 11. | கள்ளாம்பிரம்புக் காளியம்மன் | அண்ணாநகர் | இராகுகாலம், தீபாவளி, பொங்கல், சித்திரை முதல்நாள் |
| 12. | சமுத்திரக்காளி | கோட்டூர் | சிவராத்திரி, பாரிவேட்டை நாட்களில் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது |
| 13. | மூக்கரைக்காளியம்மன் | வெங்களூர் | சிவராத்திரி, திருக்கார்த்திகை, மார்கழி மாதம் 30 நாளும் சிறப்பு வழிபாடு நடைபெறும் |

| 14. | தட்டாரக்காளியம்மன் | தேரளப்பூர் | பௌர்ணமி நாட்களில் சிறப்பு வழிபாடு நடைபெறும் |
|---|---|---|---|
| 15. | மூக்கரைக்காளியம்மன் | இளக்கினிவயல் | மார்கழி மாதம் முப்பது நாளும் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது |
| 16. | ஆற்றங்கரை காளியம்மன் | தச்சவயல் | தைப்பொங்கல், தீபாவளி, மார்கழி முப்பது நாளும் மற்றும் சித்திரை முதல் நாள் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது |
| 17. | கூத்தாடி முத்துப் பெரியநாயகியம்மன் | தாழையூர் | ஒவ்வொரு வாரம் புதன் மற்றும் சனிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது. மேலும் தைப்பூசம், தைப்பொங்கல், தமிழ் வருடப்பிறப்பு, மார்கழி மாதம் முப்பது நாளும் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது |
| 18. | காடேரியம்மன் | மஞ்சனி | ஆடி 18, திருக்கார்த்திகை, தீபாவளி, சித்திரை முதல்நாள் சிறப்பு வழிபாடு நடைபெறும் |
| 19. | செல்லியம்மன் | கல்லங்குடி | தீபாவளி, திருக்கார்த்திகை, மற்றும் பௌர்ணமி தினங்களில் சிறப்பு வழிபாடு நடைபெறும் |
| 20. | மஞ்சனப்பேச்சி | இறகுசேரி | மார்கழி மாதம் முப்பது நாளும் சிறப்புவழிபாடு ஒவ்வொரு மாதம் பௌர்ணமி அன்று மாலை 5 மணியளவில் நடைபெறும் |
| 21. | நாகாத்தம்மன் | இராம்நகர் | மார்கழி மாதம் முப்பது நாளும் அதிகாலை நான்கு மணிக்கு |
| 22. | ஆற்றங்கரை நாச்சியம்மன் | ஈகரை | சிவன்ராத்திரி, தீபாவளி, திருக்கார்த்திகை, மற்றும் ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி அன்று சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது |

| 23. | வேலாயுதம் ஐயனார் | இலங்குடி | சிவராத்திரி அன்று சிறப்பு வழிபாடு நடைபெறும் |
|---|---|---|---|
| 24. | வேம்புடைய ஐயனார் | நல்லாங்குடி | சிவன்ராத்திரி, பாரிவேட்டை, தீபாவளி, பொங்கல், திருக்கார்த்திகை ஆகிய நாட்களில் சிறப்பு வழிபாடு நடைபெறுகின்றன |
| 25. | அன்புக்கணக்கு ஐயனார் | நாச்சாங்குளம் | சிவராத்திரி, பாரிவேட்டை ஆகிய தினங்களில் நடைபெறும் |
| 26. | பொய்சொல்லாமெய்யர் | சித்தானூர் | சிவராத்திரி மட்டும் சிறப்புவழிபாடு |
| 27. | கொட்டுடைய ஐயனார் | கும்மங்குடி | சிவராத்திரி மற்றும் மார்கழி மாதம் முப்பது நாளும் சிறப்புவழிபாடு |
| 28. | அருள்மிகு வேலாயுதமூர்த்தி ஐயனார் | சுக்கிரபட்டி | சிவராத்திரி, தைப்பொங்கல், சித்திரை முதல் நாள் வழிபாடு நடைபெறும். |
| 29. | பாண்டிமுனிஸ்வரர் | தேவகோட்டை | திருக்கார்த்திகை, ஆயுதபூசை, தைப்பொங்கல், தீபாவளி, விநாயகர்சதுர்த்தி ஆகிய தினங்களில் சிறப்புவழிபாடு நடைபெறும் |
| 30. | சங்கரபதிக்கோட்டை தர்மமுனிஸ்வரர் | கண்ணங்கோட்டை | மார்கழி மாதம் முப்பது நாளும் சிறப்புவழிபாடு |
| 31. | நல்ல முனீஸ்வரர் | சிவந்தான்கோட்டை | திருகார்த்திகை,தைப்பொங்கல், தீபாவளி, மார்கழி மாதம் முப்பது நாட்களும் வழிபாடு நடைபெறும் |
| 32. | நல்லாத்துரை முனிஸ்வரர் | கண்டியன் புதுவயல் | தைப்பொங்கல், தீபாவளி, தமிழ் வருடப்பிறப்பு, ஆங்கில வருடப்பிறப்பு, திருக்கார்த்திகை |

| 33. | தர்மமுனிஸ்வரர் | வெள்ளுர் | சித்திரை முதல் நாள், தைப்பொங்கல், சிறப்புவழிபாடு நடைபெறும் |
|---|---|---|---|
| 34. | மாவடிக்கருப்பர் | தேவகோட்டை | மார்கழி மாதம் முப்பது நாளும் அதிகாலை நான்கு மணிக்கு |
| 35. | கொம்படிக்கருப்பர் | மாவிடுதிக் கோட்டை | அமாவாசை மற்றும் சித்திரை முதல்நாள், தீபாவளி, பௌர்ணமி ஆகிய நாட்களில் சிறப்பு வழிபாடு நடைபெறும் |
| 36. | சுடலைமாடன் | இறகுசேரி | மார்கழி மாதம் முப்பது நாளும் சிறப்புவழிபாடு ஒவ்வொரு மாதம் பௌர்ணமி அன்று மாலை 5 மணியளவில் நடைபெறும் |

### 3.3 பூசைப்பொருட்கள்

சிறுதெய்வ வழிபாட்டிற்குரிய பொருட்கள் வரையறுக்கப்படவில்லை. எனினும் தேங்காய், பூ, பழம், மாலை, வெற்றிலை, பாக்கு, ஊதுபத்தி, சூடம், சாம்பிராணி முதலியவை தவறாது இடம்பெறும். இவற்றில் ஒன்றிரண்டு இல்லையாயினும் வழிபாடு நடைபெறும். தீபம் மற்றும் தூபம் ஏற்றி வழிபடுதல் தமிழர்களின் மரபாக பண்டைக்காலம் தொட்டு வருவதனை,

> **“விரும்புமின் விளக்குத் தூபம்**
> **தீபம் காட்டி தொழுபவர்க்கு அருள்கள் செயது”**
>
> **(திருநாவுக்கரசர் தேவாரம் 4:31)**

எனத் திருநாவுக்கரசர் தேவாரம் சுட்டிக்காட்டி இருக்கிறது. வாழ்க்கையில் விரும்பியதை பெறுவதற்கும், தெய்வத்தின் அருள் கிடைப்பதற்கும் தீபமும், தூபமும் காட்டி வழிபடுதல் வேண்டும் என்ற தேவாரக் கருத்தினையும் நாம் நினைவில் கொள்ளத்தகும்.

வழிபாட்டில் முதலிடம் பெறுவது தேங்காய் ஆகும். இது இரண்டு வகையில் உடைக்கப்படுகிறது. அரிவாளால் இரண்டாக உடைக்கும்முறை, சிதறு தேங்காய் அடிப்பது; தேங்காய் அழுகிய நிலையில் இருக்கக்கூடாது.

சமமாக உடைய வேண்டும் என்பதில் மக்கள் கவனமாக இருப்பர். “தேங்காயை ராசிகளில் இருந்து சுத்தமானதாகப் பார்த்து தேர்ந்தெடுக்க வேண்டும். அதில் பரல்யம், விருத்தம் என்கிற மிக இளசும், அதிக முற்றலும் இல்லாமல் யௌவனம் என்கிற நடுத்திறமானதை கொள்ள வேண்டும். தேங்காயை தேர்ந்தெடுக்கும் பொழுது துர்நாற்றமானதும், கோணல் உள்ளதும், அதிக நீளமானதும், பின்னமானதையும், மழுமழுப்பில்லாததையும், கண் இல்லாததையும், அதிக பருமன் உடையதையும், மிகச் சிறியதாக உள்ளதையும், குடுமி இல்லாததையும், அழுகினதையும், நீர்வற்றியதையும், தேர்ந்தெடுக்கக் கூடாது.”[10] எனவே தான் தேங்காய் தேர்ந்தெடுக்கும் பொழுது தன் விரலால் சுட்டிப் பார்த்து சத்தத்தை வைத்தும், தண்ணீர் இருக்கிறதா என காதின் அருகில் தேங்காயை ஆட்டிப்பார்த்தும் தேர்ந்தெடுக்கின்றனர்.

தேங்காய் எப்படி உடைந்திருக்கிறது என்பதனை வைத்துப் பலன் கூறிவிடுவர். “தேங்காயை உடைக்கும் பொழுது முகத்தின் பாகத்தில் முக்கூறல் பங்கும் அடிப்பாகத்தில் கால் பங்குமாகவும் அல்லது அடிப்புறம் முக்கால் பாகமாகவும், மேல்புறம் கால் பாகமாகவும் உடைந்தால் கணவன் - மனைவி இருவரிடையே சச்சரவு ஏற்படும் என்றும், தேங்காய் பொடிப்பொடியாக உடைந்தால் கொண்ட காரியம் கைகூடாது, கண்ணின் பக்கமாக உடைந்தால் குடும்பத்தலைவனுக்கு கெடுதல் ஏற்படும்”[11] எனத் தேங்காய் உடைக்கும் முறைகளில் நம்பிக்கை கொண்டுள்ளனர். “சிதறு தேங்காய் உடைக்கும் பொழுது அத்தேங்காய் எப்படி உடைந்து சிதறி ஓடுகிறதோ அதுபோல் தம் துன்பங்களும் சிதறி ஓடிவிடும்”[12] என்ற நம்பிக்கையும் களஆய்வில் காணமுடிகிறது.

அம்மன் தெய்வங்களுக்கு மல்லிகையும், ஆண் தெய்வங்களுக்குக் கதம்பமும் அதிகமாகப் பயன்படுத்துகின்றனர். மாலை இரு தெய்வங்களுக்கும் சாத்தப்படுகிறது.

ஊதுபத்தி, சூடம், சாம்பிராணி ஆகியவை வாசனை மற்றும் தீபம், தூபம் காட்டுவதற்காக பூசையில் இடம்பிடிக்கின்றன. இவைகள் தவிர்த்துக் குறிப்பிட்ட சில தெய்வங்களுக்குப் பிடித்தமான பொருட்களை வழிபாட்டில் படைத்து வழிபடுகின்றனர். சிறுதெய்வங்கள் மனிதராகப் பிறந்து வாழ்ந்து மறைந்தவர்களாக இருப்பதால் அவர்கள் வாழும்போது பயன்படுத்திய புழங்கு பொருட்கள் படையலில் இடம்பெறுகின்றன.

தாழையூர் கூத்தாடி முத்துப்பெரியநாயகி அம்மனுக்கு அவள் ஒரு நாடக நடிகை என்பதால் வாசனை திரவியங்கள் அதிகமாகப் பிடிக்குமென்ற நம்பிக்கையில் வாசனைத் திரவியங்களான "அத்தர், வாசனைப் பவுடர், வாசனைத்திரவியம் போன்றவை சிறப்புப் பூசைப் பொருட்களாக வைத்து வழிபடப்படுகிறது."[13]

இதேபோல் "முனிஸ்வரர் மற்றும் மாவிடுதிக்கோட்டை கருப்பர் கோயில்களில் சுருட்டு, பிராந்தி, பீடிக்கட்டு, சாராயம்"[14] ஆகியவை வழிபாட்டுப் பொருட்களாக இடம்பெறக் காணலாம். "நாட்டுப்புற ஆலயங்களில் கோழி, ஆடு, பன்றி, மாடு போன்றவை பலியிடப் பெறுவதும், சாராயம், சுருட்டுப் படைக்கப் பெறுவதும் அடங்கும்"[15] என்னும் அறிவுநம்பியின் கருத்தும் இவண் நோக்கத்தக்கது ஆகும்.

மது படைத்து வழிபட்டதனைச் சங்க இலக்கியங்களும் பதிவு செய்துள்ளன.

**"நடுகற் பீலி சூட்டி நார்அரி**
**சிறுகலத்து வகுப்பவும் கொள்வன் கொல்லோ" (புற.232:3-4)**

**"இல்லடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப்**
**புடைநடு கல்லின் நாட்பலியூட்டி" (புற.329:1-2)**

**"நடுகற் பீலிசூட்டி துடிப்படித்து**
**தோப்பிக் கள்ளொடு துரூஉப்பலிக் கொடுக்கும்" (அக.35:8-9)**

என்னும் சங்கப் பாடலடிகள் நடுகல் வழிபாட்டில் மது என்னும் சாராயம் படைத்து வழிபட்டதனை மாவிடுதிக்கோட்டை கருப்பர், சிவந்தான்கோட்டை முனிஸ்வரர் கோயிலில் காணமுடிகிறது.

சிறுதெய்வ வழிபாடுகள் குறித்து "தெய்வ உருவிற்கு நீராட்டி, மலர் அணிந்து, விளக்கேற்றி, அகில், சந்தனம் முதலிய நறும் புகைகளை புகைத்து, உயரிய பொருட்களை பலியாகப் படைத்தனர். மன்றங்களிலும், வெறியாடும் களங்களிலும் வழிபட்ட சிறுதெய்வங்களுக்கு குருதிப்பலியும் கொடுத்தனர். அரிசியை பலியாகச் சிதறுதல், ஆட்டுமறியை அறுத்தல், மறியின் குறுதியை சோற்றுடன் கலந்து திரளையாகச் செய்து பலி தூவுதல், கள் வைத்தல் முதலியனவும் உண்டு"[16] என மு.சண்முகம் தெளிவுபடுத்தியுள்ளார். இவ்வழிபாடுகளால் மக்கள் மனநிறைவு அடைவதனையும், மகிழ்ச்சி அடைவதையும் பரமக்குடி மலையாளக்காளியம்மன் கோயிலில் களஆய்வில் காணமுடிந்தது.

### 3.3.1 வெற்றிலை பாக்கு

சிறுதெய்வ வழிபாட்டு முறைகளில் படையலில் தவறாது இடம்பெறுவது வெற்றிலைப்பாக்கு ஆகும். இது பழங்காலந்தொட்டு நடைமுறையில் இருந்துள்ளது என்பதனை,

**"பாகு உகுத்த மஞ்சிகை" (பட்.பா.166)**

என்னும் பட்டினப்பாலை பாடலடிகள் பதிவு செய்திருக்கக் காணலாம்.

### 3.3.2 மஞ்சள்

மஞ்சள் என்பது மங்கலகரமான பொருளாகும். வழிபாட்டில் தவறாது இடம்பெறும். அம்மன் வழிபாட்டில் இப்பொருட்கள் முக்கியமானதாகும். சுமங்கலிப் பெண்கள் தவறாது மஞ்சள் பூசுவதனை காண இயலும். துர்க்கை அம்மன் கோயில்களில் பிரசாதமாக மஞ்சள் மட்டும் வழங்கப்படுவது நாம்

கவனத்தில் கொள்ளத்தகும். நாட்டுப்புற வழிபாட்டில் அருள்வந்தாடும் மருளாடிகளுக்கு மஞ்சள்பால் கொடுப்பது வழக்கத்திலுள்ளது. வீட்டில் நடைபெறும் சுபகாரியங்களிலும், புத்தாடை அணியும் பொழுது மஞ்சள் தடவுவது இன்றளவும் நடைமுறையில் உள்ளது. திருமணத்தில் கட்டப்படும் தாலிக்கயிறும் மஞ்சள் நிறத்திலுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். இச்சிறப்பப்பெற்ற மஞ்சள் வழிபாட்டில் பயன்படுத்தப்பட்டதனை,

**"சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்து" (திரு.முரு.235)**

எனும் பாடல்வரி எடுத்துரைக்கக் காணலாம்.

### 3.3.3 மலர்

வழிபாட்டில் அனைத்துக் கோயில்களிலும் பூக்கள் தவறாது இடம்பெறக் காணலாம்.

**"நீர்த்துடை நெடுங்கலம் தீப்பட மலர்ந்த**
**கடவுள் ஒண்பூ" (பெரும்பா.289)**

**"நெல்லும் மலரும் தூஉய்க் கைதொழுது" (நெடு.ந.வா43)**

என வழிபாட்டில் பூக்கள் பயன்படுத்தப்பட்டதனையும்,

**"கண்ணி கார்நறுங் கொன்றைக் காமர்**
**வண்ண மார்பில் தாருங் கொன்றை" (புறம்.கடவுள் வாழ்த்து)**

மாலையாகப் பயன்படுத்தப்பட்டதையும் சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கக் காணலாம்.

**பூசைப்பொருட்கள் மற்றும் பலியிடும் உயிர்கள்**

| வ. எண் | கோயிலின் பெயர் | பூசைப்பொருட்கள் | பலியிடும் உயிர்கள் |
|---|---|---|---|
| 1. | முத்துமாரியம்மன் அருணகிரிப்பட்டணம் | ஊதுபத்தி, சூடம், தேங்காய், பூ, மாலை, வெற்றிலை பாக்கு | ஆடு, கோழி, சேவல் |
| 2. | ரேணுகாதேவி முத்துமாரியம்மன் நித்யகல்யாணிபுரம் | திருவமுது, பூ, மாலை, ஊதுபத்தி, சூடம், தேங்காய் | கோழி, சேவல் |

| 3. | சமயபுரத்து மாரியம்மன் தேவகோட்டை | மல்லிகை, கதம்பம், சூடம், ஊதுபத்தி, குங்குமம், தேங்காய் | கோழி, சேவல் |
|---|---|---|---|
| 4. | மாரியம்மன் பொன்னத்தி | மல்லிகை, கதம்பம், பட்டாடை, ஊதுபத்தி, சூடம், குங்குமம், தேங்காய், மாலை | ஆடு, கோழி, சேவல் |
| 5. | காளியம்மன் வாழ்கின்றமாணிக்கம் | திருவமுது, பூ, மாலை, ஊதுபத்தி, சூடம், தேங்காய், மஞ்சள் | ஆடு, கோழி, சேவல் |
| 6. | கள்ளாபிரம்புக் காளியம்மன் அழகாபுரிநகர் | பூ, மாலை, ஊதுபத்தி, சூடம், குங்குமம், தேங்காய், திருவமுது | ஆடு, கோழி, சேவல் |
| 7. | மலையாளக் காளியம்மன் பரமக்குடி | மரிக்கொழுந்து, சூடம், ஊதுபத்தி, தேங்காய், திருவமுது | ஆடு, கோழி |
| 8. | பிள்ளைமடத்துக் காளியம்மன் மோயன்வயல் | பூ, மாலை, சூடம், தேங்காய், சாம்பிராணி | ஆடு, கோழி, சேவல் |
| 9. | மடக்கரை காளியம்மன் அண்ணாநகர் | தாலிப்பொட்டு, பூ, மாலை, ஊதுபத்தி, சூடம், மஞ்சள், குங்குமம் | கோழி, சேவல் |
| 10. | செட்டியா ஊருணிக் காளியம்மன் நாச்சாங்குளம் | மஞ்சள், குங்குமம், ஊதுபத்தி, சூடம், மாலை, பூ, தேங்காய் | ஆடு, கோழி, சேவல் |
| 11. | கள்ளாம்பிரம்புக் காளியம்மன் அண்ணாநகர் | மஞ்சள், குங்குமம், பூ, மாலை, ஊதுபத்தி, சூடம் | ஆடு, கோழி, சேவல் |
| 12. | சமுத்திரக்காளி கோட்டூர் | ஊதுபத்தி, சூடம், பூ, மாலை | கோழி, சேவல் |
| 13. | மூக்கரைக்காளியம்மன் வெங்களூர் | குங்குமம், சூடம், ஊதுபத்தி, தேங்காய் | ஆடு, கோழி |

| | | | |
|---|---|---|---|
| 14. | தட்டாரக்காளியம்மன் தேரளப்பூர் | மஞ்சள், குங்குமம், ஊதுபத்தி, சூடம், தேங்காய், பூ, மாலை | கோழி, சேவல், கிடாய் |
| 15. | மூக்கரைக்காளியம்மன் இளக்கினிவயல் | நிலைமாலை, பூ, ஊதுபத்தி, சூடம், தேங்காய், எலுமிச்சை பழம் | ஆடு, கோழி, சேவல் |
| 16. | ஆற்றங்கரை காளியம்மன் தச்சவயல் | ஊதுபத்தி, சூடம், மலர், மாலை, தேங்காய் | ஆடு, கோழி, சேவல் |
| 17. | கூத்தாடி முத்துப் பெரியநாயகியம்மன் தாழையூர் | வாசனைத் திரவியங்கள் பூ, மாலை, ஊதுபத்தி, சூடம் | ஆடு, கோழி, சேவல் |
| 18. | காடேரியம்மன் மஞ்சனி | பூ, மாலை, சூடம், சாம்பிராணி, தேங்காய் | பலியிடுவது இல்லை |
| 19. | செல்லியம்மன் கல்லங்குடி | மஞ்சள், குங்குமம், ஊதுபத்தி, சூடம், தேங்பாய், பூ, மாலை | பலியிடுவது இல்லை |
| 20. | மஞ்சனப்பேச்சி இறகுசேரி | மஞ்சள், பூ, மாலை, தேங்காய், ஊதுபத்தி, சூடம் | பலியிடுவது இல்லை |
| 21. | நாகாத்தம்மன் (இராஜநாகேஸ்வரியம்மன்) இராம்நகர் | பால், திருவமுது, ஊதுபத்தி, சூடம், சாம்பிராணி, பூ, மாலை, தேங்காய் | பலியிடுவது இல்லை |
| 22. | ஆற்றங்கரை நாச்சியம்மன், ஈகரை | பூ, மாலை, சூடம், தேங்காய் | ஆடு, கோழி, சேவல் |
| 23. | வேலாயுதம் ஐயனார் இளங்குடி | பால், பட்டாடை, ஊதுபத்தி, சூடம், சாம்பிராணி, மாலை, தேங்காய் | பலியிடுவது இல்லை |
| 24. | வேம்புடைய ஐயனார் நல்லாங்குடி | பூ, மாலை, ஊதுபத்தி, சூடம், தேங்காய் | பலியிடுவது இல்லை |
| 25. | அன்புக்கணக்கு ஐயனார் நாச்சாங்குளம் | பால், பட்டாடை, ஊதுபத்தி, சூடம், சாம்பிராணி, மாலை, தேங்காய் | பலியிடுவது இல்லை |
| 26. | பொய்சொல்லாமெய்யர் சித்தானூர் | பால், பட்டாடை, ஊதுபத்தி, சூடம், சாம்பிராணி, மாலை, தேங்காய் | பலியிடுவது இல்லை |

| 27. | கொட்டுடைய ஐயனார் கும்மங்குடி | பால், பட்டாடை, ஊதுபத்தி, சூடம், சாம்பிராணி, மாலை, தேங்காய் | பலியிடுவது இல்லை |
|---|---|---|---|
| 28. | அருள்மிகு வேலாயுதமூர்த்தி ஐயனார் சுக்கிரபட்டி | பால், பழம், பன்னீர், பட்டாடை, சூடம், சாம்பிராணி, பூ, மாலை | பலியிடுவது இல்லை |
| 29. | பாண்டிமுனிஸ்வரர் தேவகோட்டை | பூ, பழம், தேங்காய், மாலை, சூடம், சாம்பிராணி | பலியிடுவது இல்லை |
| 30. | சங்கரபதிக்கோட்டை தர்மமுனிஸ்வரர் கண்ணங்கோட்டை | பூ, மாலை, தேங்காய், சூடம், சாம்பிராணி | கோழி, சேவல், கிடாய் |
| 31. | நல்லமுனிஸ்வரர் சிவந்தான்கோட்டை | பூ, பழம், தேங்காய், மாலை, ஊதுபத்தி, சூடம், சாம்பிராணி | கோழி, சேவல் |
| 32. | நல்லாத்துரை முனிஸ்வரர் கண்டியன் புதுவயல் | ஊதுபத்தி, சூடம், சாம்பிராணி, தேங்காய், மாலை, சரிகைபட்டு | ஆடு, கோழி, சேவல் |
| 33. | தர்மமுனிஸ்வரர் வெள்ளுர் | சூடம், சாம்பிராணி, ஊதுபத்தி, பூ, மாலை, தேங்காய் | ஆடு, கோழி, சேவல் |
| 34. | மாவடிக்கருப்பர் தேவகோட்டை | பால், பூ, மாலை, பழம், சூடம், சாம்பிராணி | பலியிடுவது இல்லை |
| 35. | கொம்படிக்கருப்பர் மாவிடுதிக்கோட்டை | பூ, மாலை, சூடம், சாம்பிராணி, தேங்காய், பழம் | சேவல், கிடாய் |
| 36. | சுடலைமாடன் இறகுசேரி | பால், பன்னீர், தேங்காய், ஊதுபத்தி, சூடம், சாம்பிராணி | கருங்கிடாய், வெள்ளாடு, செம்மறிக்கிடாய் |

### 3.4 திருவமுது

நாட்டுப்புற வழிபாட்டில் திருவமுது (நைவேத்தியம்) படைத்தல் கடந்த காலங்களில் அரிதாக இருந்துள்ளது. காரணம் பொருளாதாரச் சூழலாகும். தற்காலத்தில் பெரும்பான்மையான சிறுதெய்வக் கோயில்களில் திருவமுது படைத்து வழிபடப்படுகிறது. சர்க்கரைப் பொங்கல், வெண்பொங்கல், புளியோதரை, தயிர்ச்சாதம் போன்றவை படையலில் முக்கிய இடம்பிடிக்கிறது.

தாழையூர் கூத்தாடி முத்துப்பெரிய நாயகியம்மன், வாடியார் வீதி சமயபுர மாரியம்மன், இறகுசேரி சுடலைமாடசாமி, மஞ்சனப்பேச்சி, இளங்குடி வேலாயுதம் ஐயனார், நித்தியகல்யாணிபுரம் ரேணுகாதேவி முத்துமாரியம்மன், வாழ்கின்றமாணிக்கம் காளியம்மன், அழகாபுரிநகர் கள்ளாம்பிரம்பு காளியம்மன், அண்ணாநகர் மடக்கரைக்காளியம்மன், தேவகோட்டை பாண்டிமுனிஸ்வரர், சிவந்தான்கோட்டை நல்லமுனிஸ்வரர், தேவகோட்டை மாவடிக்கருப்பர் போன்ற கோயில்களில் நாள்தோறும் திருவமுது படைத்து வழிபாடு செய்யப்படுகிறது.

**"கூழுடை கொழு மஞ்சிகைத்**
**தாழுடைத் தண்பணியத்து**
**வாலரிசிப் பலி சிதறி" (பட்.பா.159)**

எனும் பட்டினப்பாலை பாடலடிகள் வழிபாட்டின் பொழுது திருவமுது படைக்கப்படும் நிகழ்வினை எடுத்துரைக்கிறது.

**திருவமுது படைத்தல்**

| வ. எண் | கோயிலின் பெயர் | படைக்கப்படும் திருவமுது |
|---|---|---|
| 1. | முத்துமாரியம்மன் அருணகிரிப்பட்டணம் | சக்கரைப்பொங்கல், சுண்டல் |
| 2. | ரேணுகாதேவி முத்துமாரியம்மன் நித்யகல்யாணிபுரம் | பருப்புசாதம், தேங்காய் சாதம், எலுமிச்சை சாதம், கற்கண்டு சாதம், சர்க்கரைப்பொங்கல் (இவற்றில் ஏதாவது ஒன்று) |
| 3. | சமயபுரத்து மாரியம்மன் தேவகோட்டை | இனிப்பு இல்லாத வெண்பொங்கல் |
| 4. | மாரியம்மன் பொன்னத்தி | சர்க்கரைப்பொங்கல் |
| 5. | காளியம்மன் வாழ்கின்றமாணிக்கம் | சர்க்கரைப்பொங்கல், வெண்பொங்கல், சுண்டல் |
| 6. | கள்ளாபிரம்புக் காளியம்மன் அழகாபுரிநகர் | மஞ்சள் கலந்த பால் |

| | | |
|---|---|---|
| 7. | மலையாளக் காளியம்மன் பரமக்குடி | சர்க்கரைப்பொங்கல் |
| 8. | பிள்ளைமடத்துக் காளியம்மன் மோயன்வயல் | சர்க்கரைப்பொங்கல் |
| 9. | மடக்கரை காளியம்மன் அண்ணாநகர் | சர்க்கரைப்பொங்கல் |
| 10. | செட்டியா ஊருணிக் காளியம்மன் நாச்சாங்குளம் | சர்க்கரைப்பொங்கல் |
| 11. | கள்ளாம்பிரம்புக் காளியம்மன் அண்ணாநகர் | சர்க்கரைப்பொங்கல் (வெள்ளிக்கிழமை), வெண்பொங்கல் (மற்ற நாட்களில்) |
| 12. | சமுத்திரக்காளி கோட்டூர் | சர்க்கரைப்பொங்கல் |
| 13. | மூக்கரைக்காளியம்மன் வெங்களூர் | சர்க்கரைப்பொங்கல் |
| 14. | தட்டாரக்காளியம்மன் தேரளப்பூர் | வெண்பொங்கல், சர்க்கரைப்பொங்கல் |
| 15. | மூக்கரைக்காளியம்மன் இளக்கினிவயல் | சர்க்கரைப்பொங்கல் |
| 16. | ஆற்றங்கரை காளியம்மன் தச்சவயல் | சர்க்கரைப்பொங்கல் |
| 17. | கூத்தாடி முத்துப் பெரியநாயகியம்மன் தாழையூர் | சர்க்கரைப்பொங்கல் |
| 18. | காடேரியம்மன் மஞ்சனி | சர்க்கரைப்பொங்கல், வெண்பொங்கல் |
| 19. | செல்லியம்மன் கல்லங்குடி | சர்க்கரைப்பொங்கல் |
| 20. | மஞ்சனப்பேச்சி இறகுசேரி | சர்க்கரைப்பொங்கல் |
| 21. | நாகாத்தம்மன் (இராஜநாகேஸ்வரியம்மன்) இராம்நகர் | சர்க்கரைப்பொங்கல் |

| 22. | ஆற்றங்கரை நாச்சியம்மன், ஈகரை | சர்க்கரைப்பொங்கல் |
|---|---|---|
| 23. | வேலாயுதம் ஐயனார் இளங்குடி | சர்க்கரைப்பொங்கல் |
| 24. | வேம்புடைய ஐயனார் நல்லாங்குடி | சர்க்கரைப்பொங்கல் |
| 25. | அன்புக்கணக்கு ஐயனார் நாச்சாங்குளம் | சர்க்கரைப்பொங்கல் |
| 26. | பொய்சொல்லாமெய்யர் சித்தானூர் | சர்க்கரைப்பொங்கல் |
| 27. | கொட்டுடைய ஐயனார் கும்மங்குடி | சர்க்கரைப்பொங்கல் |
| 28. | அருள்மிகு வேலாயுதமூர்த்தி ஐயனார் சுக்கிரபட்டி | சர்க்கரைப்பொங்கல் |
| 29. | பாண்டிமுனிஸ்வரர் தேவகோட்டை | சர்க்கரைப்பொங்கல் (வெள்ளிக்கிழமை) வெண்பொங்கல் (மற்ற நாட்களில்) |
| 30. | சங்கரபதிக்கோட்டை தர்மமுனிஸ்வரர் கண்ணங்கோட்டை | சர்க்கரைப்பொங்கல் |
| 31. | நல்லமுனிஸ்வரர் சிவந்தான்கோட்டை | சர்க்கரைப்பொங்கல் |
| 32. | நல்லாத்துரை முனிஸ்வரர் கண்டியன் புதுவயல் | சர்க்கரைப்பொங்கல் |
| 33. | தர்மமுனிஸ்வரர் வெள்ளூர் | சர்க்கரைப்பொங்கல் |
| 34. | மாவடிக்கருப்பர் தேவகோட்டை | சுண்டல், சர்க்கரைப்பொங்கல் |
| 35. | கொம்படிக்கருப்பர் மாவிடுதிக்கோட்டை | சர்க்கரைப்பொங்கல் |
| 36. | சுடலைமாடன் இறகுசேரி | சர்க்கரைப்பொங்கல் |

### 3.5 இசைக்கருவிகள்

இசைக்கருவிகள் இசைத்தல் பண்டைக் காலம்தொட்டு வழிபாட்டு நிலைகளில் இருந்துள்ளது. சிறுதெய்வ நிலையில் தப்பு, மேளம் போன்றவை திருவிழாக் காலங்களில் மட்டும் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. இன்றைய காலகட்டத்தில் நாட்டுப்புறத் தெய்வங்களிலும் பல்வேறு விதமான இசைக்கருவிகள் இசைத்தல் நடைமுறையிலுள்ளது. கோபுரம் மற்றும் கட்டிட அமைப்புள்ள பெரும்பான்மையான சிற்றூர்க்கோயில்களில் மின்சாரத்தில் இயங்கக்கூடிய இசைக்கருவிகள் பொருத்தப் பட்டுள்ளன. தேவகோட்டை சமயபுரமாரியம்மன், பாண்டி முனீஸ்வரர், கண்டதேவி காளியம்மன் கோயில், டி.சிறுவனூர் தட்டாரக்காளியம்மன், ஈகரை ஆற்றங்கரை நாச்சியம்மன், மஞ்சனி காடேரியம்மன், அய்யனார் போன்ற கோயில்களில் மேற்சொன்ன இசைக்கருவிகள் இசைக்கப்பட்டு வருகிறது.

> **"அந்தரப் பல்இயம் கறங்கத் திண்காழ்**
> **வயிர் எழுந்து இசைப்ப வால்வளை ஞரல**
> **உரம் தலைக் கொண்ட உரும்இடி முரசமொடு" (திருமு.119-121)**

எனும் திருமுருகாற்றுப்படைப்பாடல் வழிபாட்டில் இசைக்கருவிகள் பயன்படுத்தப்பட்டதனை எடுத்தியம்புகிறது.

### 3.6 பூசாரி

நாட்டுப்புறக் கோயில்களில் பூசை செய்பவரைப் பூசாரி என அழைக்கின்றனர். இவர்கள் கோயிலுக்கு உரிமை உடையவர்களாக அல்லது அந்தந்த கிராமங்களில் வசிக்கும் மக்கள்களால் நியமிக்கப்பட்டவர்களாக இருக்கின்றனர். திருவிழாக் காலங்களில் மட்டும் கோயிலில் இருப்பர். மற்ற நாட்களில் தினமும் காலை, மாலை அல்லது வெள்ளி, செவ்வாய்க் கிழமைகளில் இருக்கக்காணலாம். இப்பூசாரிகளுக்கு சம்பளம் கொடுப்பதில்லை. பூசைத்தட்டில் பக்தர்கள் வழங்கும் காணிக்கை இவர்களது ஊதியமாக இருக்கின்றது.

### 3.7 திருவிழாக்கள்

நாட்டுப்புற வழிபாட்டில் ஆண்டிற்கொருமுறை திருவிழாக்கள் நிகழ்த்தப்படுகிறது. இவை மண்ணின் பண்பாட்டையும், கலாச்சாரத்தையும் பிரதிபலித்து நிற்கிறது. ஆகம விதிகளுக்கும், வரைமுறைகளுக்கும் உட்படாதவை ஆகும். இவ்விழாக்கள் பாரம்பரியத்தை மையமாகக் கொண்டு பண்பாட்டு அடிப்படையில் வழிபடப்படுகிறது. பெண்மையின் வலிமையும், தமிழரின் கலாச்சாரத்தையும் இவ்வழிபாட்டு விழாவில் காணமுடியும். "விழா என்பதற்கு மங்கலச்சடங்கு, திருவிழா, விழவு, உற்சவம், விவாகக் கொண்டாட்டம், அரசிளங்குமாரக்குயவர் விழா நடத்துதல்"[17] எனப் பொருள் தருகிறது கழகத்தமிழகராதி.

விழா என்னும் சொற்கள் சங்க இலக்கியங்களிலும் பயின்றுவரக் காணலாம். விழா (கலி.83:14-15), விழவு (அகம்.1:115) சாறு (குறுந்.41:1-2) என்னும் இச்சங்க இலக்கியச் சான்றுகள் விழாவினை மையப்படுத்திப் பல சொல் ஒரு பொருளைக் குறிக்கின்றன. திருவிழாக்கள் பண்டைக்காலம் தொட்டுத் தமிழகத்தில் நடைபெற்று வருவதனை இலக்கியங்களும் பதிவு செய்துள்ளன. இந்திரவிழா இருபத்தெட்டு நாட்கள் நடைபெற்றதனை சிலப்பதிகாரம் எடுத்துக்கூறியிருக்கிறது.

"உலகில் உள்ள மக்கள் மகிழ்ச்சியாக உறவுகளோடு சேர்ந்து இன்புற்று வாழ கோயில் திருவிழாக்கள் வழிவகுக்கின்றன. இவ்விழாக்கள் பண்பாடு, கலாச்சாரம், பாரம்பரியம், சமூக பழக்க வழக்கங்கள், அறச்சிந்தனை, தர்மநெறி, சமத்துவம், சகோதரத்துவம், மனிதநேயம், சாதிமத பேதமின்மை, ஒருமைப்பாடு முதலியவற்றை ஏற்படுத்துகிறது"[18] என்பர். திருவிழாக்களில் நீர்மோர், பானகம், அன்னதானம் வழங்கல், கஞ்சி, கூழ் ஊற்றுதல் ஆகியவை அறச்சிந்தனையையும் மனிதநேயத்தையும் வளர்ப்பதற்குக் காரணமாக அமைகின்றன.

## திருவிழாக்கள்

| வ. எண் | கோயிலின் பெயர் | திருவிழா | திருவிழா நடைபெறும் நாள் மற்றும் மாதம் |
|---|---|---|---|
| 1. | முத்துமாரியம்மன் அருணகிரிப்பட்டணம் | ஆடிச்செவ்வாய் | ஆடி மாதம் மூன்றாவது செவ்வாய்கிழமை |
| 2. | ரேணுகாதேவி முத்துமாரியம்மன் நித்யகல்யாணிபுரம் | மதுக்குடம் எடுத்தல் | ஆடி மாதம் நான்காவது செவ்வாய்கிழமை |
| 3. | சமயபுரத்து மாரியம்மன் தேவகோட்டை | முளைப்பாரி திருவிழா | பங்குனி மாதம் இரண்டாவது செவ்வாய்கிழமை |
| 4. | மாரியம்மன் பொன்னத்தி | பொங்கல் விழா | சித்திரை மாதம் மூன்றாவது செவ்வாய் |
| 5. | காளியம்மன் வாழ்கின்றமாணிக்கம் | ஆவணிப் பொங்கல் விழா | ஆவணி மாதம் முதல் செவ்வாய் |
| 6. | கள்ளாபிரம்புக் காளியம்மன் அழகாபுரிநகர் | பூத்திருவிழா | ஆடி மாதம் மூன்றாவது செவ்வாய் |
| 7. | மலையாளக் காளியம்மன் பரமக்குடி | எரிசோறு | ஆடி மாதம் மூன்றாவது செவ்வாய் |
| 8. | பிள்ளைமடத்துக் காளியம்மன் மோயன்வயல் | பொங்கல் விழா | சித்திரை மாதம் மூன்றாவது செவ்வாய் |
| 9. | மடக்கரை காளியம்மன் அண்ணாநகர் | வருடத்திருவிழா இல்லை | இல்லை |
| 10. | செட்டியா ஊருணிக் காளியம்மன் நாச்சாங்குளம் | வைகாசித் திருவிழா | ஆண்டுதோறும் வைகாசி மாதம் முதல் வெள்ளிக்கிழமை |
| 11. | கள்ளாம்பிரம்புக் காளியம்மன் அண்ணாநகர் | சித்திரைப் பொங்கல் | சித்திரை மாதம் பௌர்ணமிக்கு அடுத்துவரும் வெள்ளிக்கிழமை |

| | | | |
|---|---|---|---|
| 12. | சமுத்திரக்காளி கோட்டூர் | சிவராத்திரி திருவிழா | மாசி மாதம் சிவராத்திரி அன்று நடைபெறும் |
| 13. | மூக்கரைக்காளியம்மன் வெங்களூர் | சிவராத்திரி திருவிழா | மாசி மாதம் சிவராத்திரி அன்று நடைபெறும் |
| 14. | தட்டாரக்காளியம்மன் தேரளப்பூர் | | |
| 15. | மூக்கரைக்காளியம்மன் இளக்கினிவயல் | வைகாசிப்பொங்கல் | வைகாசி மாதம் அமாவாசை முடிந்த பதினைந்தாம் நாள் நடைபெறும் |
| 16. | ஆற்றங்கரை காளியம்மன் தச்சவயல் | பொங்கல் விழா | ஆண்டுதோறும் ஆவணி மாதம் ஏதாவது ஒரு தேதியில் |
| 17. | கூத்தாடி முத்துப் பெரியநாயகியம்மன் தாழையூர் | சிவராத்திரித் திருவிழா | மாசி மாதம் சிவராத்திரி அன்று நடைபெறும் |
| 18. | காடேரியம்மன் மஞ்சனி | வாய்கட்டிப்பூசை மற்றும் பொங்கல் விழா | ஆண்டுதோறும் வைகாசி மாதம் முதல் வெள்ளிக்கிழமை |
| 19. | செல்லியம்மன் கல்லங்குடி | பொங்கல் விழா | ஆடி மாதம் இரண்டாவது செவ்வாய்கிழமை |
| 20. | மஞ்சனப்பேச்சி இறகுசேரி | சித்திரை திருவிழா மற்றும் சிவராத்திரி விழா | சித்திரை மாதம் கடைசி செவ்வாய் மற்றும் மாசி மாதம் சிவராத்திரி அன்று |
| 21. | நாகாத்தம்மன் (இராஜநாகேஸ்வரியம்மன்) இராம்நகர் | ஆவணிப்பொங்கல் | ஆவணி மாதம் முதல் செவ்வாய்கிழமை |
| 22. | ஆற்றங்கரை நாச்சியம்மன், ஈகரை | மது எடுத்தல் | ஆனி மாதம் ஏதாவது ஒரு தேதியில் (கடந்த பத்து ஆண்டுகளாக விழா நடைபெறவில்லை) |

| 23. | வேலாயுதம் ஐயனார் இளங்குடி | புரவி எடுத்தல் | தேதி வரையறை இல்லை |
|---|---|---|---|
| 24. | வேம்புடைய ஐயனார் நல்லாங்குடி | புரவி எடுத்தல் | தேதி வரையறை இல்லை |
| 25. | அன்புக்கணக்கு ஐயனார் நாச்சாங்குளம் | புரவி எடுத்தல் | மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை |
| 26. | பொய்சொல்லாமெய்யர் சித்தானூா | புரவி எடுத்தல் | ஆண்டுதோறும் மாசி மாதம் சிவராத்திரி அன்று |
| 27. | கொட்டுடைய ஐயனார் கும்மங்குடி | புரவி எடுத்தல் | இரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை |
| 28. | அருள்மிகு வேலாயுதமூர்த்தி ஐயனார் சுக்கிரபட்டி | புரவி எடுத்தல் | மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை ஏதாவது ஒரு மாதத்தில் |
| 29. | பாண்டிமுனிஸ்வரர் தேவகோட்டை | ஆடிப்பொங்கல் | ஆடி மாதம் நான்காவது வெள்ளிக்கிழமை |
| 30. | சங்கரபதிக்கோட்டை தர்மமுனிஸ்வரர் கண்ணங்கோட்டை | மாட்டுப்பொங்கல் | தை மாதம் மாட்டுப்பொங்கல் அன்று |
| 31. | நல்லமுனிஸ்வரர் சிவந்தான்கோட்டை | பூத்தட்டு, விளக்குபூசை | ஆடி மாதம் 18ம் நாள் |
| 32. | நல்லாத்துரை முனிஸ்வரர் கண்டியன் புதுவயல் | பொங்கல் விழா | ஆண்டுதோறும் ஆனி மாதம் 22-ஆம் தேதி |
| 33. | தர்மமுனிஸ்வரர் வெள்ளூர் | பால்குடம், காவடி எடுத்தல் | வைகாசி மாதம் இரண்டாவது செவ்வாய்கிழமை |
| 34. | மாவடிக்கருப்பர் தேவகோட்டை | பொங்கல்விழா | வைகாசி மாதம் ஏதாவது ஒரு செவ்வாய்கிழமை |
| 35. | கொம்படிக்கருப்பர் மாவிடுதிக்கோட்டை | பொங்கல் விழா | ஆடி மாதம் இரண்டாவது செவ்வாய்கிழமை |
| 36. | சுடலைமாடன் இறகுசேரி | சித்திரை திருவிழா மற்றும் சிவராத்திரி விழா | சித்திரை மாதம் கடைசி செவ்வாய் மற்றும் மாசி மாதம் சிவராத்திரி அன்று |

### 3.7.1 பிற பெயர்கள்

ஊரார் ஒன்றுகூடி வழிபடப்படும் திருவிழாக்கள் செவ்வாய், பொங்கல், முளைக்கொட்டு, குதிரையெடுப்பு என்னும் பல பெயர்களில் அழைக்கப்படுகின்றன. "திருவிழா என்ற சிறப்புவழிபாடு சிறுமரபுத் தெய்வங்களுக்கும் உண்டு. கொடை, பொங்கல், பூசை, களரி, சாமியாட்டம் என்ற பல பெயர்களில் வழக்கிலுள்ளது. பங்காளிகள், ஊரார் ஒன்று சேர்ந்து குறிப்பிட்ட காலங்களில் நிகழ்த்துவர். சாமியாட்டம், பொங்கலிடல், உயிர்ப்பலியிடுதல் போன்றவைகளும் உண்டு"[19] என்னும் கூற்றுப்படி சிற்றூர்களில் பல சொற்கள் வழக்கில் உள்ளதனைக் காணமுடிகிறது.

### 3.7.2 விழா தொடக்கம்

சிற்றூர்த் தெய்வங்களுக்கான திருவிழாக்கள் சில இடங்களில் வருடத்திற்கு ஒரு முறையும், பல இடங்களில் இரண்டு, மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறையும் நடத்தப்பட்டு வருகின்றன. "பல ஊர்கள் சேர்ந்ததனை நாடு என்றும், சேர்க்கை என்றும் அழைக்கப்படுகிறது"[20] சில தெய்வங்கள் குறிப்பிட்ட ஊரில் இருந்தாலும் அது பல சேர்க்கை ஊர்களுக்கும் சொந்தமானதாக இருக்கும். திருவிழாக் காலங்களில் அனைவரும் ஒன்று கூடுவர்.

இவ்வாறு அழைக்கப்படும் நாடு, சேர்க்கை, தனிக்கிராமம் போன்றவற்றிற்கு நாட்டாமை, சேர்க்கைத் தலைவர், ஊர்த்தலைவர் போன்ற பட்டம் பெற்றவர்கள் அந்தந்த கிராமங்களுக்கு தலைமையாக இருந்து வழி நடத்துவர். இவர்களது தலைமையில் சிறப்புக்கூட்டம் நடைபெறும். "எந்தத் தேதியில் காப்புக்கட்டுதல், அதன்பின் நடைபெறும் வழிபாட்டு முறைகள், கூத்துக்கலைகள், திருவிழா நடைபெறும் நாள் முதலியவற்றினை இச்சிறப்புக் கூட்டத்தில் தீர்மானிப்பர்."[21] இக்கூட்டங்களில் வீட்டிற்கு ஒருவர் தவறாது

இடம்பெற வேண்டும். இல்லையெனில் அபராதம் விதிக்கப்படுவதும் நடைமுறையில் உள்ளதனைக் களஆய்வில் காணமுடிந்தது.

இவ்வாறாக ஊர்ச் சிறப்புக் கூட்டங்கள் ஒருமுறையும், ஒன்றுக்கு மேற்பட்ட முறையும் நடத்தப்படுகிறது. இக்கூட்டங்களில் திருவிழா தொடர்பான அனைத்துப் பேச்சு வார்த்தைகளும் பேசி முடிக்கப்பட்டு நாள் குறிக்கப்படும். பின்னர் திருவிழா நாளினை ஊரார்களுக்கும், சேர்க்கை ஊர்களுக்கும் முறைப்படி அறிவிப்புச் செய்வர். இந்நிகழ்வு விழாவின் தொடக்கமாகக் கருதப்படுகிறது.

தாழையூர் கூத்தாடி முத்துப்பெரியநாயகியம்மன் கோயிலில் ஆண்டு தோறும் சிவராத்திரி திருவிழா நடைபெறும். “பொன்னத்தி மாரியம்மன் கோயிலில் சித்திரை மாதம் இரண்டாவது செவ்வாய் காப்புக்கட்டி மூன்றாவது செவ்வாய் ஆண்டுதோறும் ஒரே மாதம் ஒரே தேதியில் திருவிழா நடைபெறுகிறது”[22] என களஆய்வு செய்திகள் குறிப்பிடுகின்றன.

### 3.7.3 வரி

திருவிழா நடத்த பொருளாதாரம் முக்கியப் பங்கு வகிக்கிறது. பணம் இல்லாமல் எந்தச் செயலும் செய்ய இயலாது. குறிப்பிட்ட குடும்பத்திற்குச் சொந்தமான கோயிலாக இருந்தால் அவர்களுடைய பங்காளிகளுக்குள் தொகையினை வரியாக வசூலித்துக் கொள்கின்றனர். ஊர்த் தெய்வமாக இருப்பின் “ஊரார் அனைவரும் சேர்ந்து வரிக் கொடுப்பர். இதனை ‘தலைக்கட்டு வரி’ என்பர். திருவிழாவிற்கு வரி கொடுத்தால் அவ்வூரில் நடைபெறும் குறிப்பிட்ட சில நிகழ்வுகளில் பங்கெடுக்க முடியும்.”[23] இதனை நகரத்தார்கள் புள்ளிவரி என்பர். இப்படி சமூகத்திற்குச் சமூகம், ஊருக்கு ஊர் வேறுபட்டு அழைக்கக் காணலாம்.

இவ்வாறு வசூலிக்கப்பட்ட பணம் ஊர்க்கூட்டத்தில் நியமிக்கப்பட்ட ஒருவரால் நிர்வகிக்கப்படும். அவர் இறுதிவரைக்கும் வரவு செலவுகளைக் கவனித்துக் கொள்வார். இப்பணம் கோயிலின் அனைத்துச் செலவுகளுக்கும் பயன்படுத்தப்படும்.

### 3.7.4 காப்புக் கட்டுதல்

திருவிழா தொடங்கிவிட்டது என்பதன் அறிவிப்பு காப்புக் கட்டுதல் ஆகும். இதனை "கொடிவளைதல் என்றும் கிராமப்புறங்களில் அழைக்கின்றனர்."[24] இந்நிகழ்வு திருவிழாவின் முக்கிய நிகழ்வாகக் கருதப்படுகிறது. அன்றைய தினம் ஊரார் அனைவரும் தத்தம் வீடுகளை சுத்தம் செய்து அன்றிலிருந்து விரதமும் மேற்கொள்வர்.

இலக்கியங்களில் காப்புச் செய்யுள் இயற்றப்படுகிறது. இது பண்டைக் காலம் தொட்டு மரபிலுள்ளது. இறைவனை வணங்கி செய்யுளின் உள்ளே செல்ல வழி செய்கிறது. "பூப்பலி செய்து காப்புக்கடை நிறுத்தி"[25] என்கிறது சிலப்பதிகாரம். இதில் வரும் காப்பு என்பதற்கு உரை எழுதும் அடியார்க்கு நல்லார் வாயிலின் கண் திசைத் தெய்வங்களைக் காவலாக நிறுத்தி என்கிறார். இதன்மூலம் காப்புக்கட்டுதல் என்பது தீய, கெட்ட ஆவிகள் ஊருக்குள் நுழையாதபடி காத்து நிற்கும் வழியாகக் கருதலாம். காப்பியம் எனும் சொல்லில் உள்ள காப்பு என்பது காத்தல் எனும் பொருளில் வழங்குகிறது. இதுபோன்றே சமூகத்தின் பல நிலைகளில் காப்புக் கட்டுதல் நிகழ்கிறது. திருமணத்திற்கு முன்பு மணப்பெண்ணிற்கும், மண மகனுக்கும் காப்புக் கட்டப்படுகிறது. "கழனியில் பயிரிடத் தொடங்குமுன் முன்னதாக மண்ணின் சிறு கூறினைக் கிள்ளி வைத்து, மஞ்சள் கயிறு சுற்றி ஓர் ஓரத்தில் வைத்துவிட்டு நிலத்தில் ஆவண செய்குவர். இதனை நிலக்காப்பு"[26] எனப் பெயரிட்டு அழைக்கின்றனர்.

பொங்கல் விழாவில் வீட்டின் முகப்பில் மா இலை, ஆவர இலை, பூளைப்பூ போன்றவற்றினைக் கொத்தாகச் செறுகப்பெறும் இதுவும் காப்புக் கட்டுதல் என்று அழைக்கின்றனர். இவ்வாறாக ஒவ்வொரு நிலையிலும் காப்புக்கட்டும் நிகழ்வு நடைபெற்று வருகிறது.

கோயில் "திருவிழா தொடங்கும் முன்பாகத் திருக்கோயிலின் நாற்புறங்களிலும், ஊரின் எல்லைப்புறங்களிலும் 'காப்புக் கொடி கட்டுவது' திருக்கோயிலின் மரபு. கொடி ஏற்றி அவிழ்க்கப்படும் வரை பிற ஊருக்குச் செல்லுதல் கூடாதென்றும் செல்ல நேரினும் காப்பவிழ்க்குமுன் திரும்ப வேண்டுமென்றும் கூறப்படுகிறது. 'காப்புத்தடை' நாட்டுப்புற மக்களிடையே வழக்கத்திலுள்ளது. ஏனெனில் தீய சக்திகளிடமிருந்து காப்பாற்றும் நோக்குடன் இதனை அமைப்பதாகக் கருதுவதால் குடும்ப நிகழ்வுகளிலும் இந்நிகழ்வு படர்ந்துள்ளது."[27] இச்செய்தியின் மூலம் காப்புக் கட்டுதல் என்பது ஊருக்கு அறிவிப்பதாக இருப்பினும் முக்கியமாக தீய ஆவிகளிடமிருந்து காப்பாற்ற காப்புக் கட்டப்படுகிறது என்பது தெளிவாகிறது.

இந்நிகழ்வு திருவிழாவின் முந்தைய எட்டாம் நாள் நடத்தப்படுகிறது. வைக்கோலினைக் கயிறுபோல் திரித்து அதில் மா இலை, பூளைப்பூ இலை, வேப்பயிலை போன்றவற்றினைக் கட்டுவர். அதன்பின் திருவிழா நடக்கும் தெய்வத்திற்குக் காப்புக் கட்டப்படும். கோயிலின் பூசாரி விரதம் இருப்பார். அம்மனுக்குக் காப்புக்கட்டியபின் விரதம் மேற்கொண்டு அங்கப்பிரதட்சனம், பால்குடம் எடுத்தல், மாவிளக்கு எடுத்தல் போன்றவற்றினைச் செய்யும் பக்தர்களுக்கும் பூசாரி காப்புக்கட்டிவிடுவார். காப்புக்கட்டுதல் முடிவடைந்தவுடன்,

- ❖ விரதம் மேற்கொள்ள வேண்டும்,
- ❖ தினமும் கோயிலுக்குச் சென்று வழிபட வேண்டும்,
- ❖ பாய்விரித்து, தலையணை வைத்துத் தூங்கக்கூடாது,

- ❖ தீட்டு வீடுகளுக்குச் (இறப்பு, பூப்பெய்தல், குழந்தை பிறத்தல்) செல்லக்கூடாது,
- ❖ இரவில் வெளியூரில் தங்கக்கூடாது,
- ❖ உயிரினைக் கொல்லக்கூடாது, அசைவ உணவு உண்ணக்கூடாது,
- ❖ கணவன் மனைவி உடல் உறவில் ஈடுபடக்கூடாது,
- ❖ கோபம் மற்றும் சண்டையிடுதல் கூடாது,
- ❖ மூன்று வேளையும் உணவு உண்ணக் கூடாது,
- ❖ மஞ்சள் அல்லது பச்சை, ஊதா நிற அதாவது தெய்வங்களுக் கேற்ற உடைகளை அணிய வேண்டும்,
- ❖ மனதில் கெட்ட எண்ணங்கள் தோன்றக் கூடாது,
- ❖ பயபக்தியுடனும், உண்மையுடனும் இருக்க வேண்டும்

இவை ஒவ்வொருவரும் கடைபிடிக்க வேண்டிய முக்கியமான நடைமுறை செயல்களாகும்.

### 3.7.5 கும்மி கொட்டுதல்

குணிந்து நிமிர்ந்து பாடலுடன் கை இரண்டினையும் தட்டிச் செல்வது கும்மி ஆகும். இது ஒரு வகையான நாட்டுப்புறக்கலையாகும். பொதுவாக நாடடுப்புற வழிபாட்டில் நாட்டுப்புறக் கலைகள் அதிகமாக இடம்பெறுவதனைக் காணலாம். காப்புக் கட்டியவுடன் அன்றிலிருந்து எட்டாம் நாள் திருவிழா வரைக்கும் இரவில் கும்மி கொட்டப்படுகிறது. ஆண்களும், பெண்களும் இந்நிகழ்ச்சியில் கலந்து கொள்கின்றனர். சில இடங்களில் ஆண்கள் மட்டுமே கும்மி கொட்டுகின்றனர். தேவகோட்டை "ரேணுகாதேவி முத்துமாரியம்மன் கோயிலில் பெண்கள் கும்மி கொட்டுவதில்லை. இரவுமுழுவதும் ஆண்கள் மட்டும் கும்மி கொட்டுகின்றனர்."[28] பல இடங்களில் பெண்கள் மட்டும் கும்மி கொட்டுகின்றனர். இதில் ஒருவர் பாடல் சொல்ல மற்றவர்கள் அப்பாடலைத்

திரும்பச் சொல்லிப் பாடவேண்டும். வட்டமாக நடந்து சென்று கொண்டே பாடிச்செல்வர்.

இக்கும்மி கொட்டுதல் திருவிழாக் காலங்களில் மட்டுமின்றி மழையின்றி வறண்டு கிடக்கும் காலங்களில் மழை வேண்டி கும்மி கொட்டுவதனைக் காண இயலும். "அம்மன் தெய்வங்களுக்கு முளைப்பாரியிட்டு வழிபாடு செய்யும் போதும், மழை இல்லாமல் வறண்ட காலங்களில் மழைக்காக வேண்டுதலுடன் வழிபாடு நடத்தும் பொழுதும், மாவிளக்கேற்றி விரதம் இருக்கும் பொழுதும், சக்தி கோயில்களில் நடைபெறும் திருவிழாக்களின் போதும் கும்மி கொட்டப்படுகிறது"[29] என கும்மிகொட்டும் பொழுதுகளை வரையறை செய்துள்ளார் சு.சண்முகசுந்தரம். இவற்றின் அடிப்படையில் பெண் தெய்வங்களுடன் அதிக உறவுடையதாக கும்மி கொட்டுதல் விளங்குகிறது. இதனை 'முளைக்கொட்டு' என்று சிற்றூர்களில் கூறுகின்றனர்.

### 3.7.6 அபிடேகம் செய்தல்

விழாவின் தொடக்க நாளிலிருந்து சிறப்பு அபிடேகம் நடைபெறுகிறது. இவ்வாறு செய்யப்படும் அபிடேகத்தால் தெய்வங்களின் வலிமை கூடும் என்று நம்பப்படுகிறது. தெய்வ வலிமை கூடினால் அத்தெய்வத்தை நம்பும் மக்களின் வாழ்வில் வளமும், நலமும் கூடும் எனக் கூறுகின்றனர். தாம் நினைத்தது நிறைவேற, ஊரில் நல்ல மழை பெய்து வேளாண்மை செழிக்க, நோய்நொடிகள் தீர அபிடேகம் ஒரு அருமருந்தாகப் பயன்படுகிறது என்று மக்கள் நம்புவதைக் கள ஆய்வில் காணமுடிந்தது.

அபிடேகத்தின் கலவையை மக்கள் பிரசாதமாகப் பெற்றுச் செல்கின்றனர். ஊராரின் சார்பாகவும், நேர்த்திக்கடன் வைத்திருப்பவர்கள் சார்பாகவும் இதற்கான செலவுகளை ஏற்றுக் கொள்கின்றனர்.

அபிடேகம் செய்யும் ஒவ்வொரு பொருளுக்கும் ஒவ்வொரு பயன் உண்டு என்று மக்கள் நம்புவதாகக் கூறுகிறார் சோமசுந்தரம்.

| அபிடேகப் பொருள் | பலன் |
|---|---|
| "பரல் | ஆயுள் நீட்டிக்க, கால்நடைகள் பெருக |
| தயிர் | மக்கட்பேறு கிடைக்க |
| சர்க்கரை | சிறந்த கல்வியாளர் ஆக |
| இளநீர் | உயர் பதவி கிடைக்க |
| விபூதி | நல்ல அறிவு மற்றும் இறை நம்பிக்கை உண்டாக |
| பஞ்சாமிர்தம் | வெற்றி கிடைக்க, மரணபயம் விலக |
| நெய் | கஷ்டம் தீர |
| நல்லெண்ணெய் | சிறந்த பக்திமானாக"[30] |

மேலே கூறப்பட்டுள்ள பொருட்களைக் கொண்டு அபிடேகம் செய்வதால் அதற்குரிய பலன்கள் பெற்று மக்கள் நல்வாழ்வு வாழ்வர் என்ற இறை நம்பிக்கை கள ஆய்வில் மக்களிடத்தில் பரவலாகக் காணமுடிகிறது. இவ்வகையான அபிடேகங்கள் விழாக் காலங்களில் செய்யப்படுகிறது. இந்நிகழ்வின் பொழுது பக்தர்கள் தவறாது கலந்து கொள்கின்றனர்.

### 3.7.7 அலங்காரம்

ஆண்டின் அனைத்து நாட்களிலும் எந்தவித ஆடம்பரமும், அலங்காரமும் இல்லாமல் கிடக்கும் நாட்டுப்புறத் தெய்வங்களைத் திருவிழாக் காலங்களில் வர்ணம், அலங்காரம் செய்யப்பட்டுக் காண்போரைக் கவரும் வண்ணம் அழகுபடுத்தியிருப்பர். சிலையுள்ள சிலையில்லாத கோயில்களில் காணமுடிந்தது. குறிப்பாகப் பொன்னத்தி மாரியம்மன், வெங்களூர் மூக்கரைக் காளியம்மன் போன்ற கோயில்களில் சிலையில்லை; என்றாலும் திருவிழாக் காலங்களில் தற்காலிகமான சிலைகள் செய்யப்பட்டுப் பூக்களால் அலங்கரிக்கப்பட்டு வைக்கப்பட்டுள்ளன.

இவை திருவிழா முடிந்தவுடன் கோயில் ஊருணி மற்றும் ஊர்க்குளங்களில் கரைக்கப்படுகின்றன. சிலையுள்ள கோயில்களிலும் திருவிழாக்காலங்களில் அலங்கரித்து வழிபாட்டிற்கு வைக்கப்படுகின்றன. ஊரினைச் சுற்றி வலம் வருவதற்கு மூலவரை கொண்டு செல்ல முடியாது. ஆதலால் உற்சவர் அமைக்கப்படுகிறது. ஈகரை ஆற்றங்கரை நாச்சியம்மன் கோயிலில் திருவிழா நடக்கும் எட்டு நாட்களும் அதற்கென்று உருவாக்கப்பட்ட உற்சவர் கோயிலின் முன்னுள்ள 'சேங்கையில்' வைக்கப்படுகிறது. "தற்காலிகமாக அம்மன் போன்ற உருவம் செய்து வர்ணம், பட்டாடைகள் உடுத்தப்பட்டு தினமும் ஊரினை வலம் வரும்"[31] என்கிறார். இவ்வாறான உற்சவர்களை நேர்த்தியான முறையில் உருவாக்கியிருப்பர்.

திருவிழாக் காலங்களில் புதிய பட்டாடைகள் அணிவிக்கப்படும். பொதுவாக மஞ்சள், சிவப்பு, பச்சை போன்ற வண்ணங்களை தேர்வு செய்கின்றனர். ஒவ்வொரு வண்ணமும் குறிப்பிட்டதொரு பண்பு நலன்களை உள்ளடக்கியிருக்கிறது. இவ்வாடைகள் ஊரார் சார்பிலும், நேர்த்திக் கடன்தாரர்களினாலும் வழங்கப்படுகிறது. "மனித வாழ்க்கையின் வெளிச்சமாகவும், மங்கலத்தின் அடையாளமாகவும், மாங்கல்யத்தின் புனிதச் சின்னமாகவும் மஞ்சள் விளங்குகிறது. மஞ்சள் வண்ணம் திருமண வாழ்க்கையில் நிரந்தர அடையாளமாகும். மஞ்சள் இல்லாமல் மனித இணைவுகளும் இல்லை நிகழ்வுகளும் இல்லை"[32] என்பாரின் கூற்றுப்படி மஞ்சள் இல்லாமல் எவ்வித மங்கல நிகழ்வுகளுமில்லை என்பதனை அறியமுடிகிறது. இச்சிறப்புப் பெற்ற மஞ்சள் ஆடைகளைப் பெரும்பாலும் அம்மன் தெய்வங்களுக்கு அணிவிக்கின்றனர்.

இதில் உளவியல் சிந்தனையுமுள்ளது. சுமங்கலிப் பெண்கள் தாம் முகத்தில் மஞ்சளும், கழுத்தில் மஞ்சள் கயிறும் அணிவர். இது பெண்களுடன்

தொடர்புடையது. எனவேதான் இம்மஞ்சள்நிற ஆடைகளைப் பெண் தெய்வங்களுக்குப் பயன்படுத்துகின்றனர். இதன்மூலம் தெய்வங்களும் மங்கலகரமானதாக இருக்கும். அதனை வழிபடும் மக்களின் வாழ்க்கையும் மங்கலகரமானதாக அமையும் என்ற உளவியல் நோக்கம் இங்கு மையப்படுத்தி நிற்கக் காணலாம்.

பச்சை மற்றும் சிவப்பு வண்ண ஆடைகளை ஆண் மற்றும் பெண் தெய்வங்களுக்கு அணிவிக்கின்றனர். பச்சை பசுமையையும், சிவப்புக்காவி நிறம் அடக்கத்தையும் குறித்து நிற்கின்றன. நாட்டுப்புற மக்களின் அடிப்படை ஆதாரம் வேளாண்மை என்பதால் ஒவ்வொராண்டும் செழித்து வளரவேண்டும் என்பதற்கான குறியீடாக இவ்வாடையை உடுத்துகின்றனர். இதேபோல் தெய்வங்களின் மீதான அபாயத்தை மக்களுக்கு உணர்த்த வேண்டும் என்பதன் குறியீடாகச் சிவப்பு வண்ண ஆடை உடுத்தப்படுகிறது. அச்சமும், வழிபாடும் ஒன்றோடொன்று இணைந்தது. இவ்வச்சத்தின் குறியீடு இவ்வண்ண ஆடை எனக்கருதலாம். இவைதவிர பிற வண்ண ஆடைகளும் சிலநேரங்களில் பயன்படுத்தப்படுகின்றன.

ஆடை அலங்காரத்தைத் தொடர்ந்து ஆபரணங்களால் அழகு செய்யப்படுகிறது. ஆடையும், அணிகலனும் பெண்ணுக்கழகு என்பர். அவ்வகையில் பெண் தெய்வங்களுக்குக் காதணி, கழுத்தணி, இடையணி, கை மற்றும் காலணிகளால் அழகுற அலங்காரப்படுத்தப்படுகிறது. இவ்வணிகலன்கள் வெள்ளி மற்றும் தங்கத்தால் ஆனவை. இவ்வணிகலன்கள் பெண் தெய்வங்களுக்கு அதிகமாக அணிவிக்கப்படுகிறது. அண்ணாநகர் கள்ளாம்பிரம்புக் காளியம்மனுக்குச் சிலை முழுதும் வெள்ளியாலான ஆபரணத்தால் அலங்காரம் செய்யப்படுகிறது. தச்சவயல் ஆற்றங்கரைக் காளியம்மன், சமயபுரம் மாரியம்மன், ஈகரை ஆற்றங்கரை நாச்சியம்மன் போன்ற தெய்வங்களுக்கு ஆபரண அலங்காரம் செய்யப்படுவதனைக் கள ஆய்வில்

காணமுடிந்தது. சங்ககால சமூகத்திலிருந்து இக்காலம் வரைக்கும் பெண்கள் அணிகலன் அணிந்து வருகின்றனர். மணப்பெண் அலங்காரத்திலும் இதனைக் காணலாம். பெண்கள் சங்க காலத்தில் காதணிகள் அணிந்து இருந்ததனை,

**"நேரிழை மகளிரு ணங்குணர்க் கவரும்**
**கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை"** **(பட்.பா.22-23)**

எனும் பட்டினப்பாலை பாடல்வரிகள் மேற்சொன்ன செய்தியை எடுத்துக்காட்டி நிற்கின்றன. இதேபோல் ஆண் தெய்வங்களுக்குக் கையில் ஆயுதம், கால் சலங்கை போன்றவைகள் அணிவிக்கப்படுகிறது.

### 3.7.8 மது எடுத்தல்

நாட்டுப்புறத்தெய்வ திருவிழாக்களில் மது எடுத்தல் ஒன்றாகும். இவ்விழா தேவகோட்டை வட்டாரத்தில் ஈகரையிலுள்ள ஆற்றங்கரை நாச்சியம்மன் கோயிலில் நடக்கிறது. மதுவினை இரண்டாகப் பிரிக்கின்றனர். ஒன்று சாதிமது (முதன்மையான மது) மற்றொன்று பக்க மது.

இவ்விரண்டும் இக்கோயில் திருவிழாவில் காணமுடியும். இதற்கு மண்ணால் செய்து தீயால் சுடப்பட்ட மண்பானைகளைப் பயன்படுத்துகின்றனர். இதற்கென்று வேளர்கள் இதனைச் செய்கின்றனர். இப்பானைகள் செய்வதற்குமுன் அவர்கள் விரதம் இருக்கின்றனர். "சாதி மதுவிற்கு இரண்டு பெரிய பானைகளும், பக்க மதுவிற்கு ஒரு சிறிய பானையுமாக மூன்று பானைகள் பயன்படுத்தப்படுகின்றன."[33]

இதற்கென்று தனியாக மதுக்கொட்டகை கட்டப்பட்டுத் தரையில் மாத்து (துணி) விரித்து பிரிமனை (குடத்தை தாங்கி நிற்கும் பொருள்) வைத்து அதன்மேல் குடம் வைக்கின்றனர். அதில் நீரூற்றி நெல்தூவி முளைக்க வைப்பர். இதுவே மதுவாகும். திருவிழாவின் பதினைந்து நாளைக்கு முன்பாக இது ஆரம்பிக்கப்படும். இதனை வளர்ப்பதற்கென்று பூசாரி வீட்டின் பெண் வாரிசுகள் விரதம் இருப்பர்.

வளர்ந்த பயிர்களைப் பிரித்தெடுத்து உரலில் இடித்து சாறு எடுப்பர். இதனோடு கடைச்சாமான்கள் சேர்த்து அக்குடத்தில் இட்டு வைப்பர். இதனைப் பூசாரி வீட்டின் பெண்கள் தான் செய்யவேண்டும்.

மது எடுப்பு நாளன்று ஒவ்வொரு வரும் பித்தளைக் குடத்தில் மஞ்சள் தண்ணீர் ஊற்றி தென்னம்பாலை வைத்துக் கட்டி, பூ அலங்காரம் செய்து இடித்தெடுக்கப்பட்ட மது நீரினைக் கலந்து அக்குடத்தினை "ஊர் மற்றும் அம்மனைச் சுற்றி வரும் சாதி மது கோயிலின் கருவறைக்குள்ளும், பக்கமது கோயிலின் முன்னுள்ள பந்தலிலும் வைத்து அர்ச்சனை செய்யப்பட்டு மதுவினை பிரசாதமாக வழங்குவர்."[34] இவ்விழா இவ்வட்டாரத்தில் சிறப்புப் பெற்றதாகும்.

**3.7.9 பலியும் படையலும்**

தமிழர் தம் வழிபாட்டில் தெய்வத்தை மகிழ்விக்க, அவற்றின் சீற்றத்திலிருந்து விடுபட பலியும், படையலும் செய்கின்றனர். "சிறு தெய்வங்கள் அச்சம் தருவதாயும், கொடியனவாயும், பலி, படை முதலியனக் கொடுத்து திருப்திபடுத்த வேண்டுவனாயும் கருதப்படுகின்றன"[35] என்கிறார் கைலாசபதி. தெய்வங்களைச் சாந்தப்படுத்துவது மூலகாரணியாகும். இதற்கு ஆடு, சேவல், கோழி, பன்றி, குட்டியுடன் கூடிய சினையாடு (சூலாடு) போன்ற உயிரினங்களை உயிர்ப்பலி கொடுத்து விழா எடுக்கின்றனர்.

**"மறிக்குரலறுத்து திணைபிரப் பிரிஇச்**
**செல்லாற்றுன் கவலைப் பல்லியம் கறங்கத்**
**தோற்றமல்லது நோய்க்கு மருந்தாக" (குறு.263)**

எனும் குறுந்தொகைப்பாடல் ஆடு பலியிட்டதனைப் பதிவு செய்திருக்கிறது.

பொன்னத்தி மாரியம்மன், கள்ளாபிரம்புக் காளியம்மன், இளக்கனிவயல் மூக்கரைக்காளியம்மன், தச்சவயல் ஆற்றங்கரை காளியம்மன், மோயன்வயல் பிள்ளைமடத்துக்காளி, சங்கரபதிக்கோட்டை தர்மமுனீஸ்வரர், சுடலைமாடன், நல்லாத்துரை முனிஸ்வரர், கொம்படிக்கருப்பர், செட்டியாஊரணிக்காளியம்மன்

கோவில், வெள்ளூர் தர்மமுனீஸ்வரர், மடக்கரைகாளியம்மன் கோவில் போன்ற கோயில்களுக்கு ஆட்டுக்கிடாயும், சேவலும், கோட்டூர் சமுத்திரக்காளி மற்றும் தட்டாரக்காளியம்மனுக்குக் கோழி மட்டும் உயிர்ப்பலி கொடுக்கப்படுகிறது.

**"சிறுதிணை மலரொடு வினாஇ அறியறுத்து"**

**"உயிர்ப்பலி பெறூஉம் உருகெழு தெய்வம்" (திரு.முரு.218)**

என்னும் சங்க இலக்கியப் பாடல் வரிகளும் உயிர்ப்பலியை எடுத்துக் காட்டியிருக்கின்றன.

நாட்டுப்புறத் தெய்வங்களின் படையல் பொருட்களை மூன்றாக வகைப்படுத்தலாம். அவை 1.இறைச்சி உணவு, 2.சைவ உணவு, 3.போதைப்பொருட்கள்.

இறைச்சி உணவுப் படையலில் உயிர்ப்பலி இடம்பெறுகிறது. பெரும்பாலும் ஐயனார் கோயில்களில் சைவ உணவு படையலாகப் பயன்படுத்தப்படுகிறது. இதேபோல் தேவகோட்டை பாண்டியங் கோட்டை முனிஸ்வரர் ஆலயத்திலும் பொங்கல், சாதம் போன்ற சைவ உணவுகள் படையலில் இடம்பெறுகின்றன.

என்றாலும் வீட்டில் பிறந்து இறந்துபோனவர்களுக்குப் பிடித்தமான, வாழும்போது பயன்படுத்திய பொருட்களைப் படையலில் இட்டு மகிழ்வுபடுத்துகின்றனர். "வழிபாட்டுச் சடங்குகளில் தெய்வங்களுக்கு இறந்துபட்ட முன்னோருக்கு படையலிடப்படும் உணவு இறந்துபட்ட நபரின் அல்லது அந்தத் தெய்வத்தின் விருப்பு, வெறுப்பு பண்பு நலன்களை எடுத்தியம்புவதோடு அது அக்குடும்ப உறுப்பினருடன் கொண்டுள்ள உறவின் ஆயுதத்தையும் தன்மையையும் எடுத்தியம்புகிறது"[36] என்கிறார் நாட்டார் வழிபாட்டின் சடங்கினைப் பற்றிக் கூறும் பிலவேந்திரன்.

கள், சாராயம், பீடி, சுருட்டு போன்றவையும் படையலில் இடம்பெறுகின்றன. இவை போதைப் பொருட்களாக இருந்தாலும் படையல் மூலம் அவை புனிதப் பொருட்களாக மாற்றம் பெறுகின்றன.

### 3.7.10 கூத்து

நாட்டுப்புறத் திருவிழாக்களில் தவறாது இடம்பெறுவது கூத்தாகும். இது மக்களையும், தெய்வத்தையும் மகிழ்விக்கும் ஒரு வடிகால். தமிழரின் பண்பாட்டு அடையாளங்களில் கூத்தும் ஒன்றாகும். இதனை இலக்கியத்தில் நிகழ்த்துக்கலை என்பர். “நிகழ்த்துதல் என்பது நடிகரின் செயல்கள், ஆட்டக்காரர்களின் செயல்கள், இசைஞர்களின் செயல்கள், பார்வையாளர்களின் செயல்கள் ஆகியவற்றை உள்ளடக்கிய நிகழ்ச்சி ஆகும்”[37] என்று விளக்கமளிக்கிறது சமயக்கலைக் களஞ்சியம். இதன்மூலம் ஆடல், பாடல், இசை, நடிகர்கள், பார்வையாளர்கள் இவற்றினை உள்ளடக்கியது கூத்துக்கலை என்பது தெளிவாகிறது.

இக்கூத்துக் கலைகளின் கதைகள் தெய்வங்களின் வரலாற்றினை மையப்பொருளாக கொண்டிருப்பதுண்டு. “வில்லுப்பாட்டுக்களில் சுடலைமாடன், இசக்கியம்மன் போன்ற கிராம தெய்வங்களின் கதைகளை கோயில் விழாக்களில் பாடக்கேட்டு பாமரர்கள் பரவசம் அடைவர்”[38] என்று கூறும் சு.சண்முகசுந்தரத்தின் கூற்று இதனை மெய்ப்பிக்கக் காணலாம். மேலும் “மாரியம்மனுக்குக் கரகம் எடுத்து ஆடுவர் அவ்வாறு கரகப் பானையைத் தலையில் வைத்து ஆடும்பொழுது மாரியம்மனைச் சிறப்பித்துப் பாடுவதும் உண்டு.”[39]

இக்கூத்துக்கலைகள் மூலம் ஆண்டுதோறும் வேலை செய்து அயர்ந்து போன மக்கள் அதனைப்பார்த்து சந்தோசமாக இன்புற்றிருக்க; கூத்துக் கலைஞர்களுக்கும் வருமானம். அதன்மூலம் அவர்களது குடும்பமும் ஒரு

சந்தோச நிலையடையும். “ஊர்த் திருவிழாவில் கூட கூத்துக்கலை என்ற நிகழ்ச்சியை வெளியூர் கூத்துக் கலைஞர்களை கூலிக்கு அமர்த்தி நடத்துவது ஒரு சடங்காகவே பின்பற்றப்படுகிறது.”[40]

இக்கலையின் மூலம் ஊரும், உறவும், கலைஞர்களும் மகிழ்ச்சியடைகின்றனர். இவை பகலிலும், இரவிலும் நடைபெறுகின்றன. பெரும்பான்மையான கோயில் விழாக்களில் இரவு ‘நாடகம்’ நடைபெறுவதைக் களஆய்வில் காணமுடிந்தது. ஆண்டிற்கொருமுறை நடைபெறும் இவ்விழாக்களில் கூத்து தவறாது இடம்பெறுகிறது. “கிராமங்களில் ஆண்டுதோறும் நடைபெறும் தெருக்கூத்து கோயிலுடன் தொடர்பு கொண்ட ஒரு கலையாகும்”[41] எனும் கூற்றின் மூலம் கூத்தும், வழிபாடும் தமிழர் பண்பாட்டின் அடையாளமாக விளங்குகின்றன என்பது தெளிவு. தாழையூர் உசுலாவுடைய அய்யனார் கோயிலில் நடைபெற்ற வள்ளி திருமண நாடகத்தில் நடிக்க வந்த முத்துப்பெரியநாயகி பின்னர் இறந்து தெய்வமானாள் இந்நிகழ்வு அங்குக் கூத்து நடைபெற்றதனை எடுத்துரைக்கிறது. இதேபோல் பொன்னத்தி மாரியம்மன், மஞ்சனி காடேரியம்மன், தேவகோட்டை முத்துமாரியம்மன், ஆற்றங்கரை காளியம்மன், கட்டாயுதமுடைய அய்யனார், பொய்சொல்லா மெய்யர், அன்புக் கணக்கு அய்யனார், பாண்டி முனிஸ்வரர் போன்ற தெய்வங்களின் திருவிழாவில் நாடகம் உள்ளிட்ட கூத்துகள் நிகழ்த்தப்படுகிறது.

### 3.7.11 முளைப்பாரி எடுத்தல்

சிறுதெய்வ வழிபாட்டில் முளைப்பாரி எடுத்தல் பெரும்பான்மையான பெண்தெய்வக் கோயில்களில் நடைபெறும் நிகழ்வாகும். திருவிழாவிற்கு ஒரு வாரத்திற்கு முன்னதாக அதற்கென்று வடிவமைக்கப்பட்ட மண்பானை பாத்திரங்களில் விதைகள் இட்டு வளர்ப்பர். “தானியங்கள் மற்றும் பயறு வகைகளின் வித்துக்களைச் சிறு பாண்டங்களிலும் பெட்டிகளிலும் ஊன்றி

வளர்க்கும் இப்பழக்கம் மிகவும் தொன்மையானது”[42] எனும் ஆ.சிவசுப்பிரமணியனின் கூற்றுப்படி இப்பழக்கம் பழங்காலந்தொட்டு இருந்துள்ளது என்பதனை அறியமுடிகிறது.

முளைப்பாரி வளர்ப்பதற்கு குறிப்பிட்ட வித்துகளைப் பயன்படுத்துகின்றனர். பாரி வளர்க்கும் பாத்திரத்தை முளைக்குடம் என்கின்றனர். இதில் ஆட்டுக்கழிவு, மாட்டுச்சானம், வைக்கோல் போன்றவற்றினை உரமாக இட்டுப் பயறு வகைகளும், கம்பு, நெல் முதலான தானியங்களையும் வளர்க்கின்றனர்.

இவை குறிப்பிட்ட ஒருவரது வீட்டில் வளர்க்கப்படுகிறது. அதற்கென்று நியமிக்கப்பட்ட நபர் பாரி வளர்த்தலில் முக்கியப் பங்காற்றுகிறார். அவரைத்தவிர பிறர் யாரும் அவ்வீட்டிற்குள் செல்வதில்லை. பாரி வளர்க்கும் எட்டு நாளும் கற்பூரம் காட்டப்பட்டு வழிபாடு செய்யப்படுகிறது.

“செவ்வாய்க் கிழமையன்று மாலையில் முளைப்பாரி போடும் பெண்கள் குளித்து ஈரச்சேலையுடன் நீரில் ஊறிய தானியங்களைக் கொண்ட சிறு ஓலைக்கொட்டான்களுடன் முளைப்பானை வைக்கப்பட்டிருக்கும் வீட்டிற்குச் செல்வார்கள். ஒரு பானை அல்லது ஒரு குடத்தில் எல்லா விதைகளையும் இட்டு மொத்தமாக கலந்துவிடுவார்கள். பின்னர் முற்றம் அல்லது திறந்தவெளியில் அனைவரது முளைப்பானைகளையும் வரிசையாக வைத்து அவற்றுள் தானிய முளைகளை தெளித்து அவற்றின்மீது எருத்தூவி நீர் தெளிப்பர். அடுத்து முளைப்பானைகளுக்கு கற்பூரம் காட்டி வழிபாடு நிகழும்.”[43]

களஆய்வுப் பகுதியில் சமயபுர மாரியம்மன் கோயிலில் இவ்விழா நடைபெறுகிறது. இக்கோயில் பூசாரி வீட்டில் பாரி வளர்க்கப்படுகிறது. அவரது வீட்டுப் பெண்கள் மட்டும் பங்கெடுக்கின்றனர். பிறர் செல்வதில்லை. இதற்காக

“பாய் தலையனை வைத்து படுப்பதில்லை. அசைவம் உணவு தவிர்த்து சைவம் மட்டுமே ஒருவேளை உண்டு விரதம் இருக்கவேண்டும்.”[44]

இக்கோயிலில் ஆண்களும், பெண்களும் முளைப்பாரி தூக்குகின்றனர். எட்டாம் நாள் “செவ்வாய்க்கிழமை இரவு பூசாரியின் வீட்டிலிருந்து முளைப்பாரி தூக்கப்பட்டுத் தின்னப்பச்செட்டி ஊரணிக்கு அருகில் உள்ள முளைப்பாரி பந்தலுக்கு கொண்டு சென்றுவிடுவர். இதற்காக ஆண்டுதோறும் அங்குப் பந்தல் போடப்படுகிறது. செவ்வாய்க்கிழமை இரவு முழுவதும் அங்கு பாரியினை வைத்து கும்மியும், பூசையும் செய்யப்படுகிறது.”[45]

மறுநாள் புதன்கிழமை இரவு தின்னப்பச்செட்டி ஊரணியில் இருந்து முளைப்பாரிகளைத் தூக்கி தேவகோட்டையின் முக்கிய வீதிகளான பேருந்து நிலையம் வழியாக தியாகிகள் சாலை, வாடியார்வீதி வழியாக சமயபுரம் மாரியம்மன் கோயிலை வந்தடையும். நகர் வலம் வரும்பொழுது மேளதாளங்கள் முழங்க மின்னொளி அமைக்கப்பட்டு ஒருவருக்குப்பின் ஒருவராக வரிசையாக வருவர். “புதன்கிழமை இரவு முழுவதும் மாரியம்மன் கோயிலில் முளைப்பாரி வைக்கப்பட்டு இருக்கும்.”[46] அன்று இரவு சிறப்புப் பூசைகள் செய்து முளைப்பாரியினைச் சுற்றி கும்மி கொட்டப்படுகிறது. மறுநாள் காலையில் முளைப்பாரியினை தூக்கிக் கொண்டு சென்று கருதாவூரணியில் கலக்கப்படுகிறது. “ஊர் செழிக்க மழை வேண்டி முளைப்பாரி எடுப்பர். முளைப்பாரி எடுத்தால் நாடு செழிக்கும், பசுமை சிறக்கும் என்பது மக்களின் நம்பிக்கை.”[47] இதனைப் பெரும்பான்மையாக மாரியம்மன் கோயில்களில் காணமுடிகிறது.

**‘கன்னி வந்து நீர் தெளிச்சா**
**கல்யாணம் கூடுமம்மா**
**இருசி வந்து நீர் தெளிச்சா**
**இந்திரனை பெத்தெடுப்பாள்**

**மலடி வந்து நீர் தெளிச்சா**
**மைந்தனை பெத்தெடுப்பாள்’**

என்னும் நாட்டுப்புற கும்மிப்பாடல் முளைப்பாரி எடுப்பதன் நோக்கத்தையும், மக்கள் நம்பிக்கையையும் பதிவு செய்திருக்கிறது.

இம்முளைப்பாரி திருவிழா பொன்னத்தி மாரியம்மன், நாச்சாங்குளம் செட்டியா ஊருணிக் காளியம்மன், தேவகோட்டை ரேணுகாதேவி முத்துமாரியம்மன் போன்ற கோயில்களில் ஆண்டுதோறும் நடத்தப்பட்டு வருவதனைக் களஆய்வில் காணமுடிந்தது.

இத்திருவிழாக்கள் ஆண்டுதோறும் செவ்வாய்க் கிழமைகளில் மட்டும் நடத்தப்படுகிறது. “செவ்வாய்க்கிழமை அம்மன்களின் பிறந்த நாளாகக் கருதப்படுகிறது”[48] என்பதன் காரணமாக இந்நாளை விழாவிற்குரிய நாளாகத் தேர்ந்தெடுக்கின்றனர்.

### 3.7.12 திருமஞ்சனக்குடம் எடுத்தல்

தேவகோட்டை நித்திய கல்யாணிபுரத்தில் உள்ள ரேணுகாதேவி முத்துமாரியம்மன் கோயிலின் விழாக்களில் சிறப்பிடம் பெறுவது திருமஞ்சனக்குடம் மற்றும் மதுக்குடம் எடுத்தலாகும். இதற்கு கோயிலின் நிர்வாகத்தினரால் ஆண்டுதோறும் ஒருவரை நியமிக்கின்றனர். “இவர் கோயிலின் விழாவிற்குரிய வரிக்கொடுப்பவர்களில் முதலியார் இனத்தைச் சேர்ந்தவராக இருக்க வேண்டும் என்பது நடைமுறையாகும்.”[49] ஏனெனில் இக்கோயிலின் அனைத்து நிருவாகமும் முதலியார்கள் கவனிக்கின்றனர். இவ்வினத்திற்கு மட்டும் இக்கோயில் பாத்தியப்பட்டதாகும்.

திருமஞ்சனக்குடம் தூக்கும் நபர் குறைந்தபட்சம் பதினைந்து நாட்களிலிருந்து ஒரு மாதம் வரைக்கும் விரதம் இருப்பர். விரதம் மேற்கொண்ட நபர் மஞ்சள் உடை அணிந்து சாமியைப் போல் வேடமிட்டிருப்பர். இவரை சாமி

என்று அழைக்கின்றனர். இவருடைய காலில் விழுந்து பக்தர்கள் வணங்குவதனையும், விபூதி குங்குமம் பெற்றுச் செல்வதனையும் களஆய்வில் காணமுடிந்தது.

திருவிழாவின் ஒன்பதாம் நாள் செவ்வாய்க்கிழமை காலையில் தேவகோட்டையிலுள்ள செல்லப்பச்செட்டி ஊருணி சிவன் கோயிலில் இருந்து திருமஞ்சனக்குடம் எடுத்து வரப்படுகிறது. இக்குடம் அம்மன் போன்று வடிவமைக்கப்பட்டிருக்கும்.

பூக்களால் அலங்காரம் செய்து குடத்தின் வாயிலில் தேங்காய், வேப்பிலை, மாஇலை, தென்னம்பாலை போன்றவைகளால் அழகுபடுத்தப்பட்டுச் செயற்கையாகச் செய்யப்பட்ட அம்மன் உருவமும் அதன் நடுவினில் செறுகி வைக்கப்பட்டிருக்கும்.

இக்குடத்தினைச் சாமியாடி தூக்குமுன் மேளதாளம் முழங்க வழிபாடுகள் நடத்தப்படுகிறது. அனைவரும் திருமஞ்சனக் குடத்தினை வணங்குகின்றனர். சாமி அருள்வந்தாடுகிறார்.

அருளோடு திருமஞ்சனக்குடத்தைத் தன் தலையில் தூக்கிக் கொண்டு பக்தர்கள் சூழ வான வேடிக்கை, மேளதாளத்துடன் முக்கிய வீதிகளின் வழியாக ரேணுகாதேவி முத்துமாரியம்மன் கோயிலை வந்தடைகிறார். இக்குடத்திற்குள், “கசுதூரி மஞ்சள், பூலாங்கிழங்கு, விரலி மஞ்சள், ரோஜாமொட்டு, செண்பகமொட்டு, வெட்டிவேர், வாசனைப்பட்டை, சவ்வாது, புணுகு, பன்னீர், சந்தனத்தைலம்”[50] போன்ற பதினோறு வகைப் பொருட்களினால் அரைக்கப்பட்ட கலவை வைக்கப்பட்டிருக்கும்.

பதினோறு வகைப் பொருட்களின் கலவையினால் அம்மனுக்கு அபிடேகம் நடத்தப்படுகிறது. இதனைப் பிரசாதமாக வாங்கிச் செல்கின்றனர். இதற்காகப் பக்தர்கள் கூட்டம் அதிகமாகக் காணப்படும்.

காலையில் இந்நிகழ்வு முடிந்தவுடன் இரவு பத்து மணிக்கு மதுக்குடம் எடுக்கப்படுகிறது. திருமஞ்சனக்குடம் தூக்கிய நபர்தான் மதுக்குடமும் தூக்க வேண்டும் என்பது அக்கோயிலின் வரையரைகளில் ஒன்றாகக் காணப்படுகிறது. "இதனை சாமிகுடம் என்றும் அழைக்கின்றனர்."[51]

இது வேப்பிலை, மாஇலை, தென்னம்பாலை, கதம்பம் மற்றும் மல்லிகைப் பூக்களால் அழகுபடுத்தப்பட்டிருக்கும். இக்குடத்திற்குள் தேங்காய், ஊதுபத்தி, சூடம், சாம்பிராணி, விபூதி, குங்குமம் போன்றவைகளை வைத்திருப்பர். மதுக்குடம் அம்மன் ஆலயத்திற்கு வந்தவுடன் சிறப்பு ஆராதனை நடத்தப்பட்டு அக்குடத்திற்குள்ளிருந்த பொருட்களால் அம்மனுக்கு அர்ச்சனை செய்து தீபம் காட்டப்படுகிறது. இந்நிகழ்வுகளுடன் திருவிழா நிறைவுபெறுகிறது. இதுபோன்ற நிகழ்வுகள் வேறெங்குமில்லை.

### 3.7.13 பூக்கொடுத்தல்

தாழையூரில் அமைந்துள்ள கூத்தாடி முத்துப்பெரியநாயகியம்மன் கோயிலின் திருவிழாக்களில் சிறப்பிடம் பெறுவது பூக்கொடுத்தல் ஆகும். களஆய்விற்குச் சென்ற இடங்களில் வேறெங்கும் இல்லாத இந்நிகழ்வு இக்கோயிலில் மட்டும் நடைபெறுவது சற்று வினோதமானது ஆகும். பொதுவாக பூ, பழம், தேங்காய் போன்ற அர்ச்சனைப் பொருட்களுடன் கோயிலுக்கு வழிபடச் செல்லும் பொழுது கோயில் பூசாரி அர்ச்சனை செய்து விபூதி, குங்குமத்துடன் பூவும் சேர்த்துக் கொடுப்பது வழக்கம். இது காலங்காலமாக கோயில்களி லிருக்கும் வழக்கமாக இருப்பினும், "கூத்தாடி முத்துப்பெரியநாயகியம்மன் கோயிலில் சிவன்ராத்திரிக்கு மறுநாள் (அவ்வொருநாள்) மட்டும் விபூதி, குங்குமத்துடன் பூக்கொடுப்பர்."[52] பின் வருடத்தின் எந்த நாளிலும் பூக்கொடுக்கப்படுவதில்லை. ஆதலால் இதனைப் பெறுவதற்கு ஆயிரத்திற்கும் மேற்பட்ட மக்கள் ஒரேநாளில் கூடுவர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

தாழையூர் ஐயனார் கோயிலில் நடக்கும் சிவன்ராத்திரி திருவிழாவிற்கு நாடக நடிகையாக நடிக்க வந்தவள் முத்துப்பெரியநாயகி. அவள் இறந்துபோன சிவன்ராத்திரிக்கு மறுநாள் மட்டும் இப்பூக்கொடுத்தல் நடக்கிறது.

மற்ற நாட்களில் விபூதி, குங்குமம் மட்டும் வழங்கப்படுகிறது. ஒரு நடிகை (கூத்தாடி) என்பதால் அவளுக்குப் பூக்கள் போன்ற வாசனைப் பொருட்கள் மீது அதிக ஆசை. அம்மனுக்கு பிடித்த பொருள் பூ என்பதால் அதனைப் பெற்றுச் செல்பவர்கள் வாழ்க்கையில் வளமும் நலமும் பெற்றுச் சுகபோக வாழ்வமையும் என்ற நம்பிக்கையிருப்பதாக பக்தர் கூறியதைக் களஆய்வில் காணமுடிந்தது. பூக்கொடுத்தலுடன் இக்கோயிலின் திருவிழா நிறைவுபெறுகிறது.

**3.7.14 கரகம் எடுத்தல்**

அருணகிரிப்பட்டினத்திலுள்ள முத்துமாரியம்மன் கோயில் திருவிழாவின் சிறப்பு கரகம் எடுத்தல் ஆகும்.

ஆண்டுதோறும் நடைபெறும் ஆடித்திருவிழாவில் எட்டாம் நாள் செவ்வாய்க்கிழமை ஆறு மணிக்குச் சக்திக்கரகம் திருவீதி உலா வருதல் நடைபெறுகிறது. இக்கரகமெடுத்தல் முக்கிய நிகழ்வாகக் கருதப்படுகிறது. மாரியம்மன், காளியம்மன் போன்ற பெண் தெய்வக் கோயில்களில் மட்டும் சக்திக் கரகம் எடுக்கப்படுகிறது. சக்தி என்னும் சொல் அம்மனைக் குறிக்கும். ஆதலால் அம்மன் கோயில்களில் இது நடைபெறுகிறது.

இக்கோயில் குறிப்பிட்ட இரண்டு சாதிகளுக்கு மட்டும் உரிமையுள்ளது (இல்லத்து பிள்ளைமார், அகமுடையர்) என்பதால் ஒவ்வொராண்டும் ஒவ்வொரு சாதியினருக்குச் சக்தி கரகம் தூக்குவதற்கு வாய்ப்புக் கொடுக்கின்றனர். கரகம் தூக்குபரை கோயில் நிர்வாகம் முடிவு செய்கிறது.

“கரகம் தூக்குபவர் திருவிழாவிற்கு முன்பு ஒருமாத காலம் விரதம் இருப்பர்.”[53] எட்டுநாட்களுக்கு முன்பு கையில் காப்புக் கட்டி; விரதமிருக்கும் ஒரு

மாதமும் வீட்டில் தூங்கக்கூடாது. கோயிலில் தூங்க வேண்டும் போன்ற கட்டுப்பாடுகள் விதிக்கப்படுகிறது.

"கரகம் செய்வதற்குப் பித்தளைச் செம்பு (வெண்கலம்) நீர், வேப்பிலை, தென்னம்பாலை, மணல், காசு, பொன், தேங்காய், மலர்கள் போன்றவை பயன்படுத்தப்படுகின்றன."[54] இவையனைத்தும் பக்தர்களால் புனிதப் பொருளாகப் பார்க்கப்படுகின்றன. கருதாவூரணி விநாயகர் கோயில் ஊருணியிலிருந்து தூக்கிவரப்படுகிறது.

ஊருணிக்கரையில் மாத்து (வெள்ளை வேட்டி) விரித்து வெண்கலச் செம்பில் நீரும் மணலும் நிரப்பி அதற்குள் நாணயங்கள், பொன் நகைகள் இட்டு, வேப்பிலை, மாஇலை, தென்னம்பாலை போன்றவைகளால் கரகத்தை அழகுபடுத்துகின்றனர். கூம்பு வடிவில் இருக்க வேண்டுமென்பதற்காக மஞ்சள் பூசிய தேங்காயினைச் செம்பின் வாய்பகுதியில் வைத்து சுற்றிலும் மலர்களால் அலங்கரித்து அம்மனின் உருவமும் செய்து வைக்கப்படுகிறது.

### 3.7.15 கண் திறத்தல்

கரகத்தில் செய்து வைக்கப்பட்ட அம்மனுக்குச் சக்தி கொடுப்பதற்காக 'கண் திறத்தல்' எனும் நிகழ்வு நடைபெறுகிறது. "கண் திறத்தல் சடங்கு மூலமாக இறைமைப்பண்பு இறங்குவதாக நம்புகின்றனர். இந்நம்பிக்கை தெற்கு ஆசியா முழுவதும் இருந்து வருகிறது. சேவலின் இரத்தம் தோய்ந்த விரல்களைக் கொண்டு கண் திறத்தல் சடங்கு நிகழ்த்தப்படுகிறது."[55] இவ்வாறாக சக்தி கொடுக்கப்பட்ட கரகத்தினை தூக்கியவுடன் மேளதாளம் முழங்கும்.

முக்கிய வீதிகளில் உலா வந்து இறுதியில் முத்துமாரியம்மன் கோயில் வந்தடையும். "மாரியம்மன் கோயில்களில் முதலில் உருவமில்லாமல் வழிபாடு செய்தபோது சக்தியை அடக்க குடத்தில் நீர் எடுத்து கரகம் அமைத்து சக்தி

வடிவாகக் கொண்டு வழிபட்டனர்”[56] என்று சக்திக்கரகம் எடுப்பதற்கான காரணத்தை கு.சந்திரன் விளக்கி உள்ளார். “கரகம் எடுக்கும் பக்தர்களுக்கு தேவி தீர்க்காயுளும், ஆரோக்கியமும், ஐஸ்வரியமும், புகழும் தந்து காப்பாற்றி அருள்புரிவாள்”[57] எனக் கரகம் எடுப்பதால் ஏற்படும் நற்பலனை எடுத்துரைக்கிறார் சிறிவேதவியாசர்.

அன்று இரவு முழுவதும் அம்மனின் கருவறையில் கரகம் வைக்கப்பட்டு மறுநாள் காலையில் செம்பில் இருந்த நீரினைக் கொண்டு அம்மனுக்கு அபிடேகம் செய்கின்றனர். மற்ற பொருட்களான வேப்பிலை, மாஇலை, பூக்கள், மணல் ஆகியவற்றினை அருகிலுள்ள கிணறு மற்றும் ஊருணியில் போட்டுவிடுகின்றனர். “நாணயங்கள் மற்றும் தங்கத்தால் ஆன பொருட்களை அம்மனின் நிர்வாகத்தினரிடம் கொடுத்துவிடுவர்.”[58] இதனை நினைவுபடுத்தும் விதமாக அன்று இரவு கரகாட்டம் நடத்தப்படுகிறது. இந்நிகழ்வுகளுடன் கோயில் திருவிழா நிறைவுபெறுகிறது.

**3.7.16 எரிசோறு போடுதல்**

பாவனக்கோட்டை மலையாளக்காளியம்மன் கோயில் திருவிழாவின் முக்கிய நிகழ்வாக எரிசோறு போடுதல் திகழ்கிறது. “மற்ற கோயில்களில் நடப்பது போன்ற செவ்வாய் போடுதல், காப்புக்கட்டுதல், முளைக்கொட்டுதல், எட்டுநாள் திருவிழா என்பன போன்ற எதுவும் இக்கோயிலில் நடப்பதில்லை.”[59]

ஆண்டுதோறும் ஆடி மாதம் மூன்றாவது செவ்வாய்க்கிழமை கோழிப்பூசை மற்றும் கிடாய் வெட்டுதல் நடக்கிறது. அன்றைய தினம் மாலை ஆறு மணிக்கு எரிசோறு போடுதல் நடத்தப்படுகிறது.

இந்நிகழ்வு சங்க காலத்திலேயே நடைபெற்று இருப்பதனை,

**“வளநகர் சிலம்பப்பாடி பலிகொடுத்**
**துருவச் செந்திணை குறுதியொடு தூஉய்”** **(அக.22-9-10)**

எனும் அகநானூற்றுப் பாடலடிகள் இரத்தம் கலந்த திணைகள் தூவப்பட்டதனைப் பதிவு செய்யப்பட்டிருக்கின்றது.

எரிசோறு நிகழ்வு ஊர் மக்களாலும், பக்தர்களாலும் அபாயகரமானதாகக் கருதப்படுகிறது. காரணம் சுத்தமில்லாமலும், முறையான விரதமில்லாமலும் பூசாரி இருப்பாரேயானால் கெட்ட ஆவிகளால் (பேய்கள்) துன்பத்திற்கு ஆளாக்கப்படுவர் என்றும், தெய்வம் இரத்தம் கலந்த சோற்றினை ஏற்றுக் கொள்ளாது என்பதாலும் மிகவும் பயபக்தியுடன் பூசாரி உட்பட அனைவரும் காணப்படுகின்றனர்.

இந்நிகழ்வு ஊர்மக்களின் செலவில் செய்யப்படுகிறது. எரிசோறு கொடுப்பவரினை ஊரார் முடிவுசெய்வர். ஊர்க்கூட்டத்தில் இந்நபரினைத் தேர்வு செய்கின்றனர். இவ்வூரைச் சேர்ந்த ஆனந்தகுமார் வகையறாக்கள் எரிசோறு கொடுக்கின்றனர்.

“இவர் 45 நாட்கள் விரதம் இருக்கிறார். இவ்விரதம் கடுமையானதாக இருக்க வேண்டும் என்கின்றனர்.”[60] எரிசோறு கொடுக்கும் நாளன்று கோயிலில் சாமியாடும் இராமன் அருள் வந்தாடியவுடன் அவருக்கருகில் தயாராக உள்ள இரத்தம் கலந்த சோத்து உருண்டைகள் நான்கையும், ஒரு வாளியில் தண்ணீரும் எடுத்துச் செல்வர்.

கோயிலின் சற்றுத் தொலைவிற்குச் சென்று திசைக்கொரு உருண்டையாக மேல்நோக்கி வீசப்படுகிறது. “அவ்வாறு வீசப்பட்ட உருண்டைகள் கீழே விழுவதில்லை எனக் கூறுகின்றனர்.”[61] அவற்றினை தெய்வம் பிடித்துக் கொள்ளும் என்கின்றனர். எரிகின்ற சோறு என்னவாகிறது என்பதனை யாரும் பார்ப்பதில்லை என்பதனைக் கள ஆய்வின் வழி காண நேர்ந்தது. இந்நிகழ்வு முடிந்தவுடன் ஆராதனைகள் செய்து விரதம் முடிக்கிறார். இந்நிகழ்ச்சியோடு திருவிழா முடிவு பெறுகிறது.

### 3.7.17 வாய்கட்டிப் பூசை

மஞ்சனிக் காடேரியம்மன் கோயிலின் வருடத் திருவிழா வைகாசி மாதம் இரண்டாவது செவ்வாய்க்கிழமை தொடங்கி மூன்றாவது செவ்வாய்க் கிழமை முடிவுறுகிறது.

❖ காப்புக் கட்டும் பொழுது அம்மனுக்கு முதலில் முறியாத விரல் மஞ்சளினை மஞ்சள் துணியில் கட்டுகின்றனர். இதனை வசந்தனி ஊரைச் சேர்ந்த வேளாளர்கள் (குலாளர்கள்) செல்கின்றனர்.

❖ தொடர்ந்து பூசாரி மற்றும் விரதம் இருப்பவர்களுக்குக் காப்புக் கட்டப்படுகிறது. இதில் 1¼ ரூபாய் வைத்துக் கட்டுகின்றனர்.

❖ “திருவிழா முடிந்து காப்புக் களைந்தவுடன் 1¼ ரூபாய் பணத்தினை வீட்டின் கோயில் அறையில் பத்திரமாக வைத்து வருகின்றனர்.”[62]

இந்நிகழ்வுகளுடன் துவங்கும் திருவிழாவின் முக்கியமானதாகக் கருதப்படுவது வாய்கட்டிப் பூசையாகும்.

இவ்வழிபாடு திருவிழாவின் எட்டாம் நாள் இரவு நடைபெறுகிறது. இதனை கோயில் பூசாரி பெத்தபெருமாள் செய்கிறார். முன்பு இவரது தந்தை இவ்வழிபாட்டைச் செய்திருக்கிறார். காப்புக்கட்டிய நாளிலிருந்து எட்டு நாளைக்கு பூசாரி விரதம் மேற்கொள்கிறார்.

காப்புக் கட்டிய நாளிலிருந்து வழிபாடு முடியும் வரைக்கும் இயற்பெயரினைக்கூறி அழைப்பதில்லை. “இயற்பெயர் வேறாக இருப்பினும் சாமியாடி, பூசாரி எனச் சிற்றூர்களில் அழைக்கின்றனர்.”[63]

இரவு நேரத்தில் பூசாரி பெத்தபெருமாள் வாயில் மஞ்சள் துணியைக் கட்டிக் கொள்கிறார். முகத்தில் கண் மட்டும் தெரியும். தெரியாதளவிற்கு மற்றொரு துணியால் முகத்தினை மூடிக் கொள்கிறார். கருவறைக்கு இவரைத் தவிர்த்து வேறு யாரும் செல்லக்கூடாது என்ற கட்டுப்பாடு காணப்படுகின்றது.

“இவ்வழிபாட்டின் பொழுது சைவச்சாதம், சர்க்கரைப் பொங்கல், வெண்பொங்கல், புளியோதரை, தயிர்ச்சாதம், சுண்டல் உள்ளிட்ட உணவுப் பொருட்களை அம்மனின் கருவறையில் வைக்கப்பட்டு பூசை நடத்தப்படுகிறது.”[64] அன்றொருநாள் அதனை அம்மன் உண்பதாக மக்கள் நம்புகின்றனர். ஆதலால் உணவில் பூசாரியின் எச்சில், மூச்சுக்காற்று போன்றவை பட்டுவிடக்கூடாது என்பதற்காக முகத்தினை துணியால் மறைத்து இருப்பர் எனக் கருதயிடமுண்டு. “சில சிறுதெய்வக் கோயில்களில் பூசை செய்யும் நேரத்தில் பூசை செய்வோர் வாயில் துணியை கட்டிக்கொள்வர்”[65] என்னும் தொ.பரமசிவத்தின் கூற்றும் இதனை மெய்ப்பிக்கக் காணலாம். இவ்வழிபாடு முடிந்தவுடன் பக்தர்களுக்குப் பிரசாதம் வழங்கப்பட்டுத் திருவிழா நிறைவுபெறுகிறது.

### 3.7.18 சாமியாடுதல்

நாட்டுப்புற வழிபாட்டுத் திருவிழாக்களில் சாமியாடுதல் முக்கியமானதாகக் கருதப்படுகிறது. சாமியாடுபவரின் உடலில் தெய்வமேறி நிகழும் நிகழ்வாக பக்தர்கள் பார்க்கின்றனர். அவர்களிடம் அருள்வாக்குக் கேட்பது, குறைகள் முன்வைப்பது, நினைத்ததைக் கேட்பது, அதற்குச் சாமியாடுபவர் காரணங்களையும், தீர்வுகளையும் முன்வைப்பதினைக் களஆய்வில் காணமுடிகின்றன.

சாமியாடுதல் ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட பல கோயில்களில் நடைபெற்றாலும் இளக்கனிவயல் மூக்கரைக்காளியம்மன் கோயில் மற்றும் இறகுசேரி சுடலைமாடன் கோயில்களில் திருவிழாவின் சிறப்பு நிகழ்வாக இச்சாமியாடுதல் கொண்டாடப்படுகிறது.

ஒவ்வொராண்டும் வைகாசி மாதம் இக்கோயிலுக்குத் திருவிழா நடத்தப்படுகிறது. இம்மாதத்தின் அமாவாசை முடிந்து அடுத்து வரும் வெள்ளிக்கிழமை காப்புக் கட்டுதலுடன் விழா தொடங்குகிறது. எட்டு நாளும் அம்மனுக்குச் சிறப்பு அலங்காரம், அபிடேகமும் செய்யப்படுகிறது.

எட்டாம் நாளன்று காலையில் சாமியாடி அருள்வாக்குச் சொல்லுதல் நடைபெறுகிறது. "சாமியாடல் ஆதிகாலந்தொட்டே தமிழ்நாட்டில் நிலவி வந்தமைக்கு இலக்கியச் சான்றுகள் உள்ளன. சிலப்பதிகாரத்தில் உள்ள வேட்டுவவரியில் இச்செய்தி காணப்படுகிறது. சாமியாடுபவர் திருநீற்றை அளித்து அவர்களுக்கு அருள்வாக்குக் கூறுகின்றனர்."[66] இக்கோயிலின் திருவிழாவிலும் பூசாரி சாமியாட்டம் ஆடி மக்களின் மனக்குறை நீக்குவதாக பக்தர்கள் தெரிவித்தனர். சாமியாட்டம் திருவிழாவில் மட்டும் காணப்படுகிறது மற்ற நாட்களில் நடைபெறுவதில்லை.

"சாமியாடுவோர் ஆண்களாக இருப்பின் வேட்டியை வரிந்து கட்டியும், பெண்களாக இருப்பின் முடியை விரித்துப்போட்டும் சாமியாடுவர். சாமியாடுபவர் கையில் வேப்பிலையும், எலுமிச்சைப்பழமும் இருக்கும். அந்தக் குறிப்பிட்ட சிறுதெய்வத்திற்குரிய ஆயுதங்கள், கருவிகள், சிறுபிரம்பு, பூண் கட்டிய தடிக்கம்பு, சாட்டை, வாள், கட்டாரி ஆகியவற்றில் ஒன்றை ஏந்தி ஆடுவர்."[67] இக்கோயிலிலுள்ள பூசாரியும் கையில் பிரம்பும், எலுமிச்சைப் பழமும் வைத்துக் கொண்டு சாமியாடுவதனைக் களத்தில் காண நேர்ந்தது.

### 3.7.19 விளக்குப்பூசை

பண்டைக்காலம் தொட்டு விளக்குப்பூசை பெருந்தெய்வக் கோயில்களில் மட்டும் நடைபெற்றது. காலமாற்றத்தின் காரணமாக, வழிபாட்டு நிலையில் ஏற்பட்ட சமயங்களின் தாக்கத்தினாலும் படிப்படியாக சிறுதெய்வக் கோயில்களிலும் இடம்பிடிக்கத் தொடங்கியது. இன்றைய காலகட்டத்தில் பல்வேறு நாட்டுப்புறக் கோயில்களில் விளக்குப்பூசை நடைபெறுகிறது என்பதனைக் களஆய்வின் மூலம் அறியமுடிந்தது.

விளக்குப் பூசையில் பெண்கள் மட்டும் பங்கு கொள்கின்றனர். வீடு மற்றும் கோயிலறையில் விளக்குப்போடுவது பெண்கள் என்பது

குறிப்பிடத்தக்கதாகும். வாழ்க்கைப்பட்டு தன் கணவன் வீட்டிற்குச் செல்லும் பெண்களை தன் “வீட்டிற்கு விளக்கேத்த வந்த லெட்சுமி”[68] என்னும் சொல் வழக்கும் இவண் கவனிக்கத்தகும்.

எரியும் விளக்கு நெருப்புடன் தொடர்புடையது. நெருப்பென்பது அழிக்கக்கூடிய சக்தியைக் கொண்டது. இச்சக்தி விளக்குப் பூசையின் காரணியாக விளங்குகிறது. தம் மனதிலுள்ள மன இருளையும் அகற்றி தீபம் போல் ஒளி வீசும் வாழ்க்கை அமைய வேண்டும் என்பது இந்நிகழ்வின் உள்ளாந்த காரணமாகக் கொள்ளலாம்.

“விளக்கு வழிபாடு செய்வதன் நோக்கம் புற இருளை அகற்றுவதாகும். இவ்வாறு புற இருளை அகற்றும் விளக்கின் முன் அமர்ந்து அக இருளாகிய தீப சிந்தனைகளை விட்டுவிட்டு இறை நாமங்களைப்பாடி மன இருளை அகற்றுவதே திருவிளக்கு வழிபாட்டின் நோக்கமாகும்”[69] என்பாரின் கூற்றும் திருவிளக்குப் பூசையின் காரண காரியத்தை எடுத்துரைத்துரைக்கின்றன. கண்ணகி மதுரையைத் தீயிட்டு அழித்தது பற்றி சிலப்பதிகாரம் எடுத்துரைத்திருக்கிறது. இதில் கண்ணகி தீயனவற்றை மட்டும் அழித்தது குறிப்பிடத்தக்கதாகும். இதன் குறியீடு விளக்குப்பூசை எனக்கருதயிடமுண்டு.

இப்பூசையில் பங்குபெறும் பெண்கள் விளக்கு, கரண்டி, தாம்பூலம், தீர்த்தக்குவளை போன்றவற்றினைக் கொண்டு செல்கின்றனர். மூலவருக்கு எதிரில் முன் மண்டபத்தில் அமர்ந்து இப்பூசையினைச் செய்வர்.

இந்நிகழ்வுகள் நாட்டார் வழிபாட்டுத் திருவிழாக்களில் ஒன்றாகி வருகின்றது. தேவகோட்டை முத்துமாரியம்மன், ஆற்றங்கரை காளியம்மன், ஆற்றங்கரை நாச்சியம்மன், மாவடிக்கருப்பர், கள்ளாம்பிரம்புக் காளியம்மன், மஞ்சனப்பேச்சி போன்ற கோயில்களில் இவ்விளக்குப்பூசை நடைபெற்று வருவதனை களஆய்வில் உறுதி செய்ய முடிந்தது.

நாட்டுப்புறக் கோயில்களின் திருவிழாக்களில் இந்நிகழ்வு புதுமையானதாகத் தோன்றுகிறது. காரணம் இதுபோன்ற விளக்குப்பூசைகள் ஆகமவிதிக் கோயில்களில் காணப்படுகின்றன. சமயவாதிகளின் தவறான கருத்துப் பரப்புரையால் இப்பூசைகள் நாட்டார் வழிபாட்டுத் திருவிழாக்களில் இடம்பிடித்திருக்கின்றன என்று கருதயிடமுண்டு.

## 3.8 தொகுப்புரை

- ❖ வழிபாட்டு முறையில் கோயிலுக்குக் கோயில் வேறுபாடுகள் காணப்படுகின்றன.
- ❖ தனிமனித, கூட்டு மற்றும் பொதுநிலையில் வழிபாடு நடைபெறுகிறது.
- ❖ சில தெய்வங்களுக்குத் தினவழிபாடும், பல தெய்வங்களுக்கு வார மற்றும் மாதவழிபாடும் நடத்தப்படுகின்றன.
- ❖ முக்கியத் திருவிழா நாட்களில் சிறப்பு வழிபாடு செய்யப்படுகிறது.
- ❖ வெற்றிலை, பாக்கு, மஞ்சள், ஊதுபத்தி, சாம்பிராணி, தேங்காய், பூ, மாலை போன்றவை பூசைக்குரிய முக்கியப் பொருட்களாக உள்ளன.
- ❖ சுருட்டு, பீடிக்கட்டு, பிராந்தி, சாராயம் போன்றவை முனிஸ்வரர், கருப்பர் கோயில்களுக்குப் படைக்கப்படுகிறது.
- ❖ நாட்டுப்புற வழிபாட்டில் திருவிழாக்கள் ஆண்டிற்கு ஒருமுறை நிகழ்த்தப்படுகின்றது.
- ❖ செவ்வாய், பொங்கல், வழிபாடு, குதிரையெடுப்பு எனப் பல பெயர்களில் இவ்விழா அழைக்கப்படுகிறது.
- ❖ திருவிழாக்களில் உயிர்ப்பலியிடுதலும், உறவினர்கள் அழைப்பும் நடைபெறுகின்றன.
- ❖ விழாத் தொடக்கத்தின் குறியீடாகக் காப்புக் கட்டுகின்றனர்.
- ❖ காப்பு அவிழ்க்கும் வரையில் காப்புத்தடை என அழைக்கப்படுகிறது.

- விழாவிற்கு ஊரார் சார்பாக வரி வசூல் செய்கின்றனர்.
- காப்புக் கட்டிய எட்டு நாளும் முளைக்கொட்டும், விரதமும் கடைபிடிக்கப்படுகிறது.
- தெய்வங்களுக்குச் சிறப்புவழிபாடும், அபிடேகமும் செய்யப்படுகிறது.
- மது எடுத்தல் இவ்வட்டாரத்தில் ஈகரையில் மட்டும் நடத்தப்படுகிறது.
- அம்மன் தெய்வங்களில் முளைப்பாரி எடுக்கப்படுகிறது.
- திருமஞ்சனக்குடம் எடுத்தல் ரேணுகாதேவி முத்துமாரியம்மன் கோயிலில் மட்டும் நடைபெறக் காணலாம்.
- பால்குடம் எடுத்தலும், பூத்தட்டும் சிறுதெய்வ வழிபாட்டில் பல இடங்களில் காணமுடிகிறது.
- சிவன்ராத்திரியின் மறுநாள் மட்டும் கூத்தாடி முத்துப்பெரியநாயகி அம்மன் கோயிலில் பூக்கொடுக்கப்படுகிறது. மற்ற நாட்களில் கொடுப்பதில்லை.
- எரிசோறு போடுதல் பாவனக்கோட்டை மலையாளக் காளியம்மன் கோயிலில் மட்டும் நடைபெறுகிறது.
- சேந்தனி காடேரியம்மன் கோயிலில் வாய்கட்டிப் பூசை நடத்தப்படுகிறது.
- தேவகோட்டை வட்டாரத்தின் பல கோயில்களில் சாமியாடும் நிகழ்வுகள் காணப்படுகின்றன.
- சாமி ஆடுபவரைச் சாமியாடி என அழைக்கின்றனர்.
- சாமியின் அருள்வாக்குத் தெய்வம் நேரில் வந்து சொல்வதாக நம்புகின்றனர்.
- விளக்குப்பூசை பெருந்தெய்வ நிலையில் இருந்துவருகிறது. தற்பொழுது நாட்டார் வழிபாட்டுக் கோயில்களிலும் இவ்விளக்குப்பூசை நடைபெறக் காணலாம்.
- சமயங்களின் தாக்கமும், சமயவாதிகளின் பரப்புரையும் இதற்குக் காரணமாக இருக்கலாம்.

**சான்றெண்விளக்கம்**

1. நாகப்ப நாச்சியப்பன், திருக்கோயில் வழிபாடு, ப.20.
2. ப.சி.குருசண்முகாம்பாள், திருவில்லிப்புத்தூர் வட்டாரச் சிறுதெய்வங்கள் (மு.ப.ஆ.), ப.161.
3. கழகத் தமிழ் அகராதி, ப.308.
4. மா.இராசமாணிக்கம், வழிபாடு, ப.62.
5. S.Vaiyapuripillai, Tamil Lexicon, Vol.VI, P.3545.
6. கோ.தங்கச்செல்வி, நாட்டுப்புறப் பெண் தெய்வங்கள் (மு.ப.ஆ.), ப.191-192.
7. தகவல்: வெள்ளைச்சாமி, இராம்நகர், தேவகோட்டை, நாள்: 24.01.2016.
8. இணையத்தளம், http//www.keetru.com.
9. இணையதளம், http//www.koodal.com.
10. அருண.நடராசன், இந்துமத நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களும், ப.50.
11. மேலது, ப.51.
12. தகவல்: சோமசுந்தரம், தேவகோட்டை, நாள்: 06.02.2016.
13. தகவல்: சக்திவேல், தாழையூர், நாள்: 31.01.2016.
14. தகவல்: வேலுச்சாமி, மாவிடுதிக்கோட்டை, நாள்: 17.04.2016.
15. அறிவுநம்பி, தமிழரின் வழிபாட்டுச் சிந்தனைகள், ப.96.
16. இணையத்தளம், http//www.koodal.com.
17. ச.வே.சுப்பிரமணியன், கழகத்தமிழகராதி, ப.3720.
18. க.கண்ணகி (ப.ஆ.), தமிழ் வழிபாடும் சிறுதெய்வங்களும், ப.12.
19. மு.பாண்டி, சிவகங்கை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள், பக்.74-75.
20. தகவல்: பி.ஆர்.சந்திரன், தேவகோட்டை, நாள்: 27.03.2016.
21. தகவல்: இராமச்சந்திரன், டி.சிறுவனூர், நாள்: 02.04.2016.
22. தகவல்: முத்து, பொன்னத்தி, நாள்: 07.02.2016.
23. தகவல்: இராமாயி அம்மாள், சித்தானூர், நாள்: 02.04.2016.
24. தகவல்: வெள்ளையன், இளங்குடி, நாள்: 07.02.2016.
25. சிலம்பு: பா.அ-231
26. அறிவுநம்பி, தமிழரின் வழிபாட்டுச் சிந்தனைகள், ப.67.
27. மேலது, ப.67
28. தகவல்: நடராசன், நித்தியகல்யாணிபுரம், தேவகோட்டை, நாள்:10.06.2016.
29. சு.சண்முகசுந்தரம், நாட்டுப்புற இயல், ப.87.
30. தகவல்: சோமசுந்தரம், தேவகோட்டை, நாள்: 06.02.2016.

31. தகவல்: இரவிக்குமார், ஈகரை, நாள்: 10.05.2016.
32. இணையத்தளம், http//www.koodal.com.
33. தகவல்: நடராசன், ஈகரை, நாள்: 10.05.2016.
34. தகவல்: நடராசன், ஈகரை, நாள்: 10.05.2016.
35. இணையத்தளம், http//www.koodal.com.
36. ஜோசப், குலதெய்வ வழிபாடும் இடப்பெயர்ச்சியும் (மு.ஆ) ப.69.
37. Mircea Eliade, the encyclopedia of Religion, Vol.IV, P.436.
38. சு.சண்முகசுந்தரம், தமிழில் நாட்டுப்புறப்பாடல்கள், ப.175.
39. மேலது, ப.173.
40. வானதீபன், நாட்டுப்புற ஆட்டக்கலைகள், பக்.80-81.
41. க.அறிவுநம்பி, நாட்டுப்புறக்களங்கள், ப.43.
42. ஆ.சிவசுப்பிரமணியன், மந்திரங்களும் சடங்குகளும், ப.81.
43. மேலது, ப.65.
44. தகவல்: பாப்பம்மாள், தேவகோட்டை, நாள்: 07.02.2016.
45. தகவல்: பாப்பம்மாள், தேவகோட்டை, நாள்: 07.02.2016.
46. தகவல்: சரவணன், தேவகோட்டை, நாள்: 07.02.2016.
47. க.கண்ணகி (ப.ஆ.) தமிழ்வழிபாடும் சிறுதெய்வங்களும், ப.83.
48. ஆ.சிவசுப்பிரமணியன், மந்திரங்களும் சடங்ககளும், ப.64.
49. தகவல்: குமாரவேல்,நித்தியகல்யாணிபுரம், தேவகோட்டை, நாள்:10.06.2016.
50. தகவல்:குமாரவேல், நித்தியகல்யாணிபுரம், தேவகோட்டை, நாள்:10.06.2016.
51. தகவல்: லெட்சுமணன், தேவகோட்டை, நாள்: 10.06.2016.
52. தகவல்: சக்திவேல், தாழையூர், நாள்: 01.04.2016.
53. தகவல்: வெள்ளையன், அருணகிரிபட்டிணம், நாள்: 09.05.2016.
54. தகவல்: வெள்ளையன், அருணகிரிபட்டிணம், நாள்: 09.05.2016.
55. தே.ஞானசேகரன், மந்திரம் சடங்குகள் சமயம், ப.70.
56. கு.சந்திரன், மதுரை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள், ப.93.
57. சிறிவேதவியாசர், முத்துமாரியம்மன் வரலாறும் வழிபாடும், ப.91.
58. தகவல்: வெள்ளைச்சாமி, அருணகிரிபட்டிணம், நாள்: 09.05.2016.
59. தகவல்: இராக்கம்மாள், பாவனக்கோட்டை, நாள்: 06.06.2016.
60. தகவல்: அன்பழகன், பாவனக்கோட்டை, நாள்: 06.06.2016.
61. தகவல்: கருப்பையா, பாவனக்கோட்டை, நாள்: 06.06.2016.
62. தகவல்: பெத்தபெருமாள், மஞ்சனி, நாள்: 03.04.2016.

63. அ.அறிவுநம்பி, வளர்தமிழ்க் களங்கள், ப.39.
64. தகவல்: பெத்தபெருமாள், மஞ்சனி, நாள்: 03.04.2016.
65. தொ.பரமசிவம் (கட்.), இணையத்தளம், http//www.keetru.com.
66. க.கண்ணகி (ப.ஆ.) தமிழ் வழிபாடும் சிறுதெய்வங்களும், ப.328.
67. இணையத்தளம், http//www.koodal.com.
68. தகவல்: வேலாயி, பொன்னத்தி, நாள்: 01.05.2016.
69. த.கலாவதி, சிறுதெய்வ வழிபாடுகள் (இ.ஆ) , ப.117.

## இயல்-4

## நம்பிக்கைகளும் நேர்த்திக்கடன்களும்

4.1 நம்பிக்கை விளக்கம்

4.2 தேவகோட்டை வட்டார தெய்வ நம்பிக்கை

4.2.1 திருமணம்

4.2.2 பிள்ளைப்பேறு

4.2.3 உருவம் போடுதல்

4.2.4 திருநீறு பெறுதல்

4.2.5 சத்தியம் செய்தல்

4.2.6 சீட்டு எழுதுதல்

4.2.7 பல்லி சொல்கேட்டல்

4.2.8 பூக்கட்டிப்பார்த்தல்

4.2.9 தீட்டு

4.2.10 சோரம் ஏற்படல்

4.2.11 பெண்கள் சாப்பிடக்கூடாது

4.2.12 தொழுதால் துன்பம் நீங்கும்

4.2.13 நோய்கள் நீங்கும்

4..3 நம்பிக்கையை உணர்த்துதல்

4.3.1 நேர்த்திக்கடன்

4.3.2 மாவிளக்கு எடுத்தல்

4.3.3 அக்னிசட்டி எடுத்தல்

4.3.4 தொட்டில் கட்டுதல்

4.3.5 பால்குடம் எடுத்தல்

4.3.6 பூத்தட்டு எடுத்தல்

4.3.7 முடிக்காணிக்கை

4.3.8 தீமிதித்தல்

4.3.9 உருள்தண்டம்

4.3.10 காணிக்கை செலுத்துதல்

4.3.11 ஆயிரங்கண் பானை எடுத்தல்

4.3.12 சிதறு தேங்காய் உடைத்தல்

4.3.13 விளைபொருட்களைச் செலுத்துதல்

4.3.14 அலகு குத்துதல்

4.3.15 காவடி எடுத்தல்

4.3.16 புரவி எடுத்தல்

4.3.17 உயிர்ப்பலி இடுதல்

4.4. தொகுப்புரை

## இயல்-4

## நம்பிக்கைகளும் நேர்த்திக்கடன்களும்

பல தலைமுறைகளைக் கடந்து வாழும் தமிழ்ச் சமூகம் தம் முன்னோர்கள் விட்டுச்சென்ற பண்பாடுகள், பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் இன்றளவும் பின்பற்றி வருகின்றனர். பிறப்புத் தொடங்கி இறப்புவரை ஒவ்வொரு நிலையிலும் நம்பிக்கை நிலை நிறுத்தப்படுகிறது. 'நம்பினார்க் கெடுவதில்லை' என்னும் மூத்தோர் பழமொழிக்கிணங்க நம்பிச் செய்யும் செயல்களில் வெற்றி பெறுகின்றனர். இது தனிமனித மற்றும் சமூக நிலையில் வளர்ச்சியடைந்துள்ளது.

நம்பிக்கைகள் குறித்து தொல்காப்பியம் தொடங்கி தற்கால இலக்கியங்கள் வரை பதிவு செய்யப்பட்டுள்ள சான்றுகளின் அடிப்படையில் பழங்காலத்திலிருந்தே வழக்கத்தில் இருந்துள்ளன. இவை வழிபாடு மற்றும் வழிபாடில்லாத மற்ற நிலையிலும் காலூன்றி நிற்கிறது. தெய்வவழிபாட்டின் மூலமும் முதன்மையும் நம்பிக்கையைச் சார்ந்து அமைகிறது. களஆய்வுத் தரவுகளின்வழி தேவகோட்டை வட்டார மக்களின் வழிபாட்டு நம்பிக்கைகள் மற்றும் நேர்த்திக்கடன்கள் குறித்தும் இவ்வியல் விவரித்துச் செல்கிறது.

### 4.1 நம்பிக்கை - விளக்கம்

நம்பிக்கையைச் சுற்றி வாழ்வியல் சுழல்கிறது. தனி மனிதனின் நம்பிக்கை சமூகத்தின் நம்பிக்கையாக பரிணாமம் பெறுகிறது. சிற்றூர் மக்களிடத்தில் தாம் வணங்கும் தெய்வங்களின் மீதான நம்பிக்கை அதீதமானதாகும். இவர்களின் வாழ்வியலில் வழிபாடு இரண்டறக் கலந்தது. இதன் தொடக்கம் நம்பிக்கை என்பது ஆய்வாளர்களின் கருத்தாகும். "அச்சத்தின் காரணமாகவும், அவ்வச்சத்தை நீக்குதற்குரிய நம்பிக்கைகளின் காரணமாகவும் வழிபாடு தோன்றியது"[1] என்னும் கூற்று மேற்சொன்ன செய்தியை மெய்பிக்கிறது.

நம்பிக்கை என்பது நம்பு எனும் சொல்லில் இருந்து பிறந்ததாகும். இதனைத் தொல்காப்பியம் எடுத்தாண்டிருக்கிறது. 'நம்புமேவு நசையாகும்மே" (தொல்.சொல்.329) என்பதில் நம்பு எனும் சொல் விருப்பம் எனும் பொருளில் கையாளப்பட்டுள்ளது. இதன் தொடர் நிகழ்வாக சங்க இலக்கியங்கள் நம்பு என்பதற்கு நம்பிக்கை என்னும் பொருளில் கையாளப்பட்டுள்ளதனைச் சங்க இலக்கியப் பாடல்கள் பதிவு செய்திருக்கக் காணலாம். (நற்றிணை.175)

"அச்சம் காரணமாக மனிதன் இயற்கையின் தோற்றத்தினையும், செயல்பாடுகளையும் தனது வாழ்வியல் நடப்புக்களோடு தொடர்புபடுத்தி நோக்கிய நிலையில் நம்பிக்கைகள் தோற்றம் கொண்டன. தீமைகளில் இருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ள முயலும் தற்காப்பு (Self Defense) முயற்சியும், நன்மையே அடைய வேண்டும் என்ற விருப்பார்வமும் நம்பிக்கைகளை நிலை நிறுத்துகின்றன. இத்தகைய மனிதனின் நல உணர்வு (Wefane) காரண காரியத்தைக் காண விரும்பாமல் நம்பிக்கைகளைப் பற்றுகின்றன. பொதுவாக நம்பிக்கைகளை உளஉருவாக்கம் (Mental Creation) என வரையறை செய்பவர்கள் மிகுதி"[2] எனினும் கூற்று நம்பிக்கை என்பது உளவியல் சார்ந்த நிகழ்வாகப் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. "நம்பிக்கை என்பது ஒன்றைப் பற்றிய உண்மையை ஏற்பதாகும். உள் மனதின் எண்ணங்களே நம்பிக்கைக்கு அடிப்படையாகும். உளவியல் துறையும் இக்கருத்தினையே வலியுறுத்துகிறது. இச்சொல் பல பொருளைத் தந்தாலும் அது உளவியல் தொடர்பானது"[3] எனும் இக்கூற்று மேற்சொன்ன கருத்திற்கு அரண் செய்கிறது.

இக்கருத்துக்களின் அடிப்படையில் இச்சொல்லை நோக்குமிடத்து அச்ச உணர்ச்சியின் வெளிப்பாடாகவும், தம்மைக் காத்துக்கொள்ள தம் ஆழ்மனதின்

கட்டளை நம்பிக்கையாக உருமாறுகிறது என்பதனை அறியமுடிகிறது. மேலும் ஆழ்மனம் சம்மந்தப்பட்டது என்பதால் உளவியலுடன் தொடர்புபடுத்தப்படுகிறது.

சமூகம் என்பது பல தரப்பட்ட மக்களின் கூட்டுக் கலவையாகும். இவர்கள் தங்களின் வாழ்வியலின் நெறிகளைக் கடைபிடிக்கவும், சமூக மரபுகளை வெளிப்படுத்தவும் நம்பிக்கை வடிகாலாக அமைகின்றன. "நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்படுகின்றன. பின்னர் அவை சமூகத்தால் பாதுகாக்கப்படுகின்றன. தனிமனித உணர்வும், சமுதாய உணர்வுமே நம்பிக்கைகளை மேலும் மேலும் வளர்க்கின்றன. அவை காலம் காலமாக தொடர்கின்றன."[4]

தமிழர்களின் பல்வேறு வகையான நம்பிக்கைக் கூறுகளைச் சங்க இலக்கியங்களின் வாயிலாகக் காணலாம். என்றாலும் தமிழர்களின் வழிபாடு தொடர்பான நம்பிக்கைகள் நாட்டுப்புற வழிபாட்டில் அதிகமாகக் காணப்படினும் இவை சமயம் சார்ந்தும், சமயச் சார்பு அல்லாத நம்பிக்கைகளும் உள்ளன என்பதனைக் களஆய்வுத் தகவல் மூலம் அறிந்துகொள்ள முடிந்தது.

சிற்றூர் மக்களிடத்தில் தம் தெய்வங்களின் மீதான அன்பும், அச்சமும் மிகுந்து காணப்படுகின்றன. அத்தெய்வங்களின் அனுமதியின்றி குடும்பத்தாரும் எந்த ஒரு நற்செயலும் செய்யமாட்டார்கள். தெய்வத்தின் அனுமதியின்றி செய்தால் தெய்வகுற்றமாகிவிடும் என்ற அச்ச உணர்வே ஆகும். தெய்வ அனுமதியுடன் செய்தால் நன்றாக முடியுமென்ற நம்பிக்கையின் வெளிப்பாடு என்று அறியமுடிகிறது.

சிறுதெய்வ வழிபாட்டில் நம்பிக்கைகள் குறித்து சு.சண்முகசுந்தரம் "சத்தியம் பலித்திடும், தகடு வைத்தல் தொழுதால் துன்பம் நீங்கும், பிள்ளைவரம், தீ மிதித்தல், இரத்தம் குடித்தல், மஞ்சள் நீராடல், மயானம் செல்லல், சாட்டையால் அடித்தல், மழை வருமென்றால் வரும், நோய்கள்

நீங்கும், பேய்கள் விலகும், நல்ல பலன் உண்டாகும்”[5] எனப் பகுத்துக் காட்டியுள்ளார்.

இக்கருத்துக்களின் அடிப்படையிலும், களஆய்வுத் தரவுகளின் துணைகொண்டும் தேவகோட்டை வட்டாரச் சிறுதெய்வ வழிபாட்டின் நம்பிக்கைகளைக் காணலாம்.

## 4.2 தேவகோட்டை வட்டார தெய்வ நம்பிக்கைகள்

இவ்வட்டாரத்தில் ஆய்விற்குத் தெரிவு செய்யப்பட்டுள்ள களஆய்வுக் கோயில்களில் நேரடியாகச் சென்று சேகரித்த தரவுகளின் அடிப்படையில் கீழ்க்கண்ட நம்பிக்கைகளை மக்களிடத்தில் காணமுடிந்தது.

### 4.2.1 திருமணம்

திருமணம் குறிப்பிட்ட வயதினில் நடைபெற வேண்டிய சடங்கு முறையாகும். ஆண்கள் அல்லது பெண்களுக்குக் குறிப்பிட்ட வயதினை அடைந்தும் திருமணம் ஆகாமலிருப்பர். இவர்கள் சமூகத்தின் ஏளனப் பார்வைக்கும், மன உளைச்சலுக்கும் ஆளாவர் என்பது சமூகம் உணர்த்தும் செய்தி. குறிப்பிட்ட சில தெய்வங்களை மனம் வருந்தி வணங்கினால் திருமணம் கைகூடும் என்ற நம்பிக்கைப் பரவலாகக் காணப்படுகிறது.

தாழையூர் கூத்தாடி முத்துப்பெரியநாயகி அம்மன் கோயில், தேவகோட்டை மடக்கரை காளியம்மன் கோயில் ஆகிய தெய்வங்களுக்குத் தாளிப்பொட்டு எடுத்துக் கட்டுவதாக நேர்ந்து கொண்டால் ஓராண்டிற்குள் திருமணம் நடைபெறும் என்பது இப்பகுதி மக்களின் நம்பிக்கையாக இருக்கிறது.

“திருமணம் ஆகாத ஆண் அல்லது பெண் கோயிலில் ஒன்பது முறை வலம் வரவேண்டும். வெள்ளி, செவ்வாய்க் கிழமைகளில் ஏழு அல்லது ஒன்பது என்ற எண்ணிக்கையில் வரும்படி (ஏழு வெள்ளி (அ) ஏழு செவ்வாய்) வழிபாடு

செய்தால் திருமணம் நடைபெறும்"[6] என நம்பப்படுகிறது. இவை இன்றளவும் கடைபிடிக்கப்படுகிறது.

### 4.2.2 பிள்ளைப்பேறு

களஆய்வுக் கோயில்களில் பிள்ளைப்பேறு வேண்டி கட்டப்பட்ட தொட்டில்கள் சாட்சியாக உள்ளன. இவை பெரும்பாலும் அரசமரம், ஆலமரம், அத்திமரம் போன்றவைகளில் கட்டித் தொங்கவிடப்பட்டுள்ளன. "குழந்தையை உருவாக்குகின்ற ஆணின் விந்தும், குழந்தையின் பசியைப் போக்கும் பாலும் வெண்மைநிறமானவையாகும். வெண்மைநிற திரவப் பொருளைச் சுரக்கும் மரங்கள் பால் மரங்கள் என்று அழைக்கப்படுகின்றன. எனவே தான் பசுவின் நஞ்சுக் கொடியையும், பிள்ளைவரம் வேண்டி சிறுதெய்வக் கோயில்களில் காணிக்கையாகச் செலுத்தும் தொட்டிலும் இதன் காரணமாகவே ஆல், அத்தி போன்ற பால் மரங்களில் கட்டப்படுகின்றன"[7] என்பர்.

சிவந்தான்கோட்டை நல்ல முனிஸ்வரர், வெள்ளூர் தர்ம முனிஸ்வரர், தாழையூர் கூத்தாடி முத்துப்பெரியநாயகியம்மன், மஞ்சனி காடேரியம்மன், இளக்கினிவயல் மூக்கரைக்காளியம்மன், இராம்நகர் நாகேஸ்வரியம்மன், வெங்களூர் மூக்கரைக்காளியம்மன், கல்லூரி நகர் கள்ளாம்பிரம்புக் காளியம்மன், கண்டதேவி காளியம்மன், இறகுசேரி சுடலைமாடன், நாச்சாங்குளம் செட்டியா ஊருணிக் காளியம்மன் போன்ற கோயில்களில் ஆலமரம் மற்றும் அரசமரங்களில் பிள்ளைவரம் கேட்டு ஏராளமான தொட்டில்கள் கட்டப்பட்டுள்ளதனை களஆய்வில் காணமுடிந்தது. இதுபோன்ற நம்பிக்கைகள் முன்னோர்களுக்கு நன்மை கிடைத்திருப்பதால் பின்னால் வந்தவர்களும் அதனைக் கடைபிடிக்கின்றனர். இந்நம்பிக்கைகள் நன்மையில் முடிகின்றன, நினைத்ததும், கேட்டதும் கிடைக்கிறது என்பதற்கு அடையாளம் நூற்றுக்கும் மேற்பட்ட தொட்டில்கள் உணர்த்தும் செய்திகளாகும்.

"மருத்துவரால் கைவிடப்பட்ட பெண்ணிற்குக் குழந்தை பிறந்துள்ளது"[8] என்கிறார் ஆற்றங்கரை நாச்சியம்மன் கோயில் பூசாரி. தேவகோட்டையைச் சேர்ந்த "இஸ்லாமியப் பெண் காதர்பீவியின் மகனான அப்துல்லாவிற்குப் பதினெட்டு ஆண்டுகள் கழித்து காளியம்மனின் ஆசியால் குழந்தை கிடைத்தது"[9] என்கிறார் இராமன். இராம்நகரைச் சேர்ந்த "அஞ்சலிதேவிக்குப் பத்து ஆண்டுகள் கழித்து நாகேஸ்வரியம்மனுக்குத் தொட்டில் கட்டியதால் குழந்தைப்பேறு பெற்றதாகச் சொல்கிறார்"[10] அக்கோயிலின் நிருவாகி.

இச்செய்திகளும், பலன் அடைந்தவர்களிடம் பெற்ற தகவல்களும் நம்பிக்கைகளின் சான்றாதாரங்களாக விளங்குகின்றன. நம்பிக்கை உளவியல் சார்ந்த நிகழ்வாகும். பிள்ளைப்பேறு அறிவியல் முறைப்படி உடல் சார்ந்த நிகழ்வாகும். ஆனால் களஆய்வு உணர்த்துவது முன்னோருக்குப் பாக்கியம் கிடைத்திருக்கிறது. தமக்கும் கிடைக்கும் என்ற உள்ளார்ந்த மனநிலையை தன்னம்பிக்கை ஏற்படுத்துகிறது. முடியாது என்றிருந்த நிலை மாறி உளவியல் அடிப்படையில் அமைதியுடன் எதிர்நிலைக்கு மனம் பக்குவமடைகிறது. இதற்கு நம்பிக்கை நிலைக்களனாக அமைகிறது. தெய்வத்தின் சக்தியால் தமக்குக் கேட்டது கிடைக்கும் என்ற மனநிலையைக் களஆய்வில் எதிர்நோக்க முடிந்தது.

### 4.2.3 உருவம் போடுதல்

இளக்கினிவயல் மூக்கரைக்காளியம்மன் கோயிலில் உருவம் போடும் நம்பிக்கையைக் காணமுடிந்தது. உடலின் எந்தப் பாகத்தில் நோயால் பாதிக்கப்பட்டு செயல் இழந்து காணப்படுகிறதோ அப்பகுதி போன்று உருவ அமைப்பினைத் தகடுகளில் செய்து உண்டியலில் போடுகின்றனர். இதன்மூலம் நோயால் பாதிக்கப்பட்ட பகுதிகள் நோய் நொடிகளிலிருந்து காப்பாற்றப்படுகிறது என்ற நம்பிக்கை இப்பகுதி மக்களிடம் காணப்படுகிறது.

### 4.2.4 திருநீறு பெறுதல்

ஊர்த்திருவிழாவில் சாமியாடிகள் அருள் வந்து சாமியாடுவது வழக்கமாக உள்ளது. இச்சிறுதெய்வக் கோயில்களின் பூசாரிகளிடம் திருநீறு வாங்கிப் பூசுவது நம்பிக்கைகளில் ஒன்றாகக் கருதப்படுகிறது.

கண்ணங்கோட்டை சங்கரபதி தர்மமுனிஸ்வரர் கோயில் பூசாரி வீரமுத்துவிடம் திருநீறு வாங்கிப் பூசினால் பேய், பிசாசு, காய்ச்சல், கால் கை விளங்காமல் போதல் ஆகியவை சரியாகிவிடும் என்று கூறுகின்றனர். "வாரியங்காடு கிராமத்தைச் சேர்ந்த சிங்கராயருக்கு கை மற்றும் கால்கள் முடங்கிப்போயின. உடனே வீரமுத்துவிடம் அழைத்துச் சென்று விபூதி வாங்கிப் போட்டவுடன் கொஞ்சம் கொஞ்சமாக சரியாகிவிட்டது."[11] இது சங்கரபதி முனிஸ்வரர் எனக்குக் கொடுத்த சக்தி என்கிறார் வீரமுத்து.

இந்நிகழ்விற்குப் பிறகு சிங்கராயர் வாராவாரம் இக்கோயிலுக்கு செல்கிறார். இப்பகுதியில் சிறியவர் முதல் பெரியவர் வரைக்கும் உடல் உபாதைகளுக்குத் திருநீறு கொடுத்துச் சரிசெய்கிறார். இதன் மூலம் தமக்குள்ள துன்பம் தீருகிறது என்ற நம்பிக்கையினை இப்பகுதியில் காணமுடிகிறது.

தேவகோட்டையிலுள்ள சமயபுரம் மாரியம்மன் கோயில் பூசாரி வெள்ளி, செவ்வாய்க் கிழமைகளில் உடல் பாதிக்கப்பட்டவர்களுக்கு விபூதி கொடுத்துச் சரிசெய்வதாக நம்பப்படுகிறது.

இதற்குப் பூசாரிகளின் மீதுள்ள நம்பிக்கையாக இருந்தாலும் குறிப்பிட்ட தெய்வங்களின் வடிவங்களாய்ப் பார்க்கப்படுகிறார்கள். அத்தெய்வங்களின் பெயர் சொல்லி விபூதி வழங்கும் நிகழ்வுகள் இன்றளவும் வழக்கத்திலுள்ளது.

### 4.2.5 சத்தியம் செய்தல்

சிறுதெய்வ வழிபாட்டின் நம்பிக்கைகளில் சத்தியம் செய்தல் என்பது முக்கியமானதாகும். தான் வணங்கும் தெய்வத்திடம் அனைத்தையும்

ஒப்படைத்தலாகும். இந்நிகழ்வு பெரும்பாலும் ஐயனார், கருப்பர், காளியம்மன் போன்ற கோயில்களில் நடைபெறுகிறது. பணம் கொடுக்கல் வாங்கல், பொருள்கள் திருடுபோதல், பலி போடுதல் போன்றவை இதன் காரணிகளாகக் கருதலாம்.

தமது வீட்டிலுள்ள பொருள் காணாமல் போய்விடலாம், வாங்கிய பணத்தை இல்லை என்று மறுத்துவிடுவர். இந்நிலைகளில் மக்கள் கடைசியில் தஞ்சம் அடையும் இடம் தமது கோயில்களாகும். தெய்வத்திடம் முறையிட்டால் நல்லதீர்ப்புக் கிடைக்கும் என்ற நம்பிக்கை இன்றளவும் காணப்படுகிறது. இதிலொன்று சத்தியம் செய்தல் ஆகும். மாவிடுதிக்கோட்டை பதினெட்டாம்படிக் கருப்பர் கோயிலில் சத்தியம் செய்தல் நடக்கிறது.

சித்தானூர் பொய் சொல்லா மெய்யர் எனும் ஐயனார் கோயிலில் சத்தியம் செய்துவிட்டால் தவறு செய்தவர்கள் தண்டிக்கப்படுவர் என்று நம்பப்படுகிறது.

இளங்குடி ஐயனார் கோயில் பரிவாரத் தெய்வங்களில் ஒன்றான சின்னக் காளியம்மன் இப்பகுதி மக்களின் நீதி வழங்கும் தேவதையாகப் பார்க்கப்படுகிறது. இக்காளியம்மனுக்கு மிளகாய் எரித்தல் என்னும் முறை செய்யப்படுகிறது. தமக்கு யாராவது துரோகம் அல்லது தவறு செய்துவிட்டால் சின்னக்காளியம்மன் கோயில் சன்னதியின் முன்பாக மிளகாயினைத் தீயிலிட்டு எரிப்பர். இதன்மூலம் அம்மன் கோபமடைந்து தமக்குத் துன்பம் இழைத்தவரை தண்டிக்கும் என்ற நம்பிக்கையில் இந்நிகழ்வு செய்யப்படுகிறது.

மிளகாய் காரம் உள்ள பொருளாகும். ஆதலால் தீயிலிட்டு எரிக்கும் பொழுது மனிதனால் நெடியைத் தாங்கமுடியாது. இதனால் கோபமும் ஆத்திரமும் அடைவர். இதேபோல் தெய்வமும் கோபத்திற்கு ஆளாகி தீயவரைத் தண்டிக்கும் என நம்பப்படுகிறது.

### 4.2.6 சீட்டு எழுதுதல்

இளக்கினிவயல் மூக்கரைக் காளியம்மன் கோயிலில் சீட்டு எழுதும் வழக்கமிருக்கிறது. தங்களின் குறைகளை சீட்டில் எழுதி அம்மனின் பாதத்தில் வைத்துவிடுவர். இவ்வாறு செய்தால் தமது குறைகள் களையப்படும் என்பது பக்தர்களின் நம்பிக்கையாகும்.

தேவகோட்டை சமயபுர மாரியம்மன் கோயிலிலும் இவ்வழக்கம் காணப்படுகிறது. சமயத் தெங்வங்களுக்கு நூற்றிஎட்டு முறை எழுதி மாலையாகச் சமர்பிப்பர். இதன் தாக்கமாக நாட்டுப்புறத் தெய்வங்களிலும் இந்நம்பிக்கைகள் இடப்பெயர்ச்சி ஆகியிருக்கலாம்.

### 4.2.7 பல்லி சொல் கேட்டல்

மனிதர்களின் நம்பிக்கைகளில் பல்லி சொல் கேட்டல் சங்க காலந்தொட்டு இருந்திருக்கிறது என்பது சங்கப்பாடல்களில் பதிவு செய்யப்பட்டிருக்கக் காணலாம்.

“பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி” (அக.289), (நற்.246) போன்ற பாடலடிகள் பல்லி சொல் கேட்கும் வழக்கத்தினை எடுத்துக்கூறுகின்றன.

**“கன்னிமார் கோயிலின் உச்சத்திலே கெளவுலி**
**கெச்சுக் கெச்சுச் சென்று நிமித்தஞ் சொல்ல”**

எனும் நாட்டுப்புறப்பாடலும் பல்லிசொல் கேட்டலுக்குச் சான்றாக இருக்கிறது.

தேவகோட்டை வட்டாரச் சிறுதெய்வ வழிபாட்டில் பல கோயில்களில் இப்பழக்கத்தினைக் காணமுடிகின்றன. இதனை “திருவலம் கேட்டல் என்றும் கூறுகின்றனர்.”[12]

தாழையூர் கூத்தாடி முத்துப்பெரியநாயகி அம்மன் கோயிலில் நாம் நினைத்தது நிறைவேற அம்மனிடம் வேண்டிக் கொண்டிருக்கும் பொழுது கோயிலின் அருகிலுள்ள உதிய மரத்தில் பல்லி சொல் கேட்டால் நிச்சயமாக

நினைத்த செயல் நடக்கும் என்ற நம்பிக்கை இருக்கிறது. இவ்விடம் தவிர்த்து ஏனைய இடங்களில் பல்லிசொல் கேட்டால், அது தீயது நினைத்தது நடக்காது என நம்புகின்றனர். இதேபோல் மோயன்வயல் பிள்ளைமடத்துக் காளியம்மன் கோயிலில் திருவலம் கேட்டல் என்னும் நம்பிக்கை உள்ளது. இக்கோயிலில் “அம்மனின் சன்னதிக்கு வலதுபுறம் பல்லி சொல் கேட்டால் நினைத்தது நடக்கும் என நம்புகின்றனர். இவ்வூரைச் சேர்ந்த காயாம்பு என்பவருக்கு அம்மன் திருவலம் வலதுபுறம் கேட்க வெளிநாடு சென்று செல்வச் செழிப்போடு இருப்பதாகக் குறிப்பிடுவதனை”[13] ஈண்டு கவனத்தில் கொள்ளல் வேண்டும்.

கண்டியன் புதுவயல் நல்லாத்துரை முனிஸ்வரர் கோயிலில் கருவறைக்கு அருகிலுள்ள உதியமரத்தில் பல்லி சொல் கேட்டல் நன்மை தரும் என்ற நம்பிக்கை காணப்படுகிறது. இதனைப்போன்று தட்டாரக் காளியம்மன், மூக்கரைக் காளியம்மன், வேலாயுதம் அய்யனார் போன்ற கோயில்களில் பல்லி சொல் கேட்கப்படுகிறது. இந்நிகழ்வு மனதிலுள்ள எண்ணங்களை மட்டும் கேட்பது ஒருபுறம் இருப்பினும், ஊருக்குக் கேட்பது, திருவிழா நடத்த உத்தரவு கேட்பது, மழை வேண்டிக் கேட்பது, இப்படியாக பொதுவான நிலையிலும் திருவலம் கேட்கப்பட்டுச் சாமி உத்தரவிற்காகக் காத்திருப்பதைக் களஆய்வில் காணமுடிந்தது. இதனைத் தெய்வத்தின் அருள்வாக்காக மக்கள் நம்புகின்றனர்.

### 4.2.8 பூக்கட்டிப் பார்த்தல்

நாட்டுப்புற வழிபாட்டு நம்பிக்கைகளில் பூக்கட்டிப் பார்த்தலும் ஒன்றாகும். ஏதேனும் ஒரு செயலைத் தொடங்குமுன் அதனைத் தொடர்வதா, வேண்டாமா என்பதனைத் தங்களின் தெய்வத்தின் வாயிலாகக் கேட்கப்படுவதாக நம்புகின்றனர்.

வீடு கட்டுதல், திருமணம் செய்தல் போன்ற தனிநபர் நிலையிலும், கோயில் கட்டுதல், இடம் தேர்வு செய்தல், திருவிழா நடத்துதல், கூத்து

நிகழ்த்துதல், உயிர்ப்பலி கொடுத்தல், தெய்வத்தை இடம் பெயர்த்தல் போன்ற பொதுநிலைகளிலும் இப்பூக்கட்டிப் பார்க்கும் நம்பிக்கை காணப்படுகிறது. இதற்காகக் குறிப்பிட்ட சில வண்ணங்களில் பூக்கள் வாங்கி வருகின்றனர். வெள்ளை, சிவப்பு, ஊதா போன்ற பிற நிறங்களில் வாங்கி வரப்பட்ட பூவினை காகிதத்தில் தனித்தனியாக மடித்து கோயிலின் முன்பாக வைத்து விடுவர்.

குழந்தைகள் அல்லது முதியவர்களில் ஒருவரை அழைத்து; ஒன்றினை எடுக்கச் சொல்வர். காகிதத்தின் உள்ளே வெள்ளை நிறப்பூ இருந்தால் நன்மை என்றும், சிவப்பு நிறத்தில் உள்ள பூ தீமை என்றும் பிற வண்ணப் பூக்கள் தடை என்றும் நம்புகின்றனர்.

சிறுவனூர் தட்டாரக் காளியம்மன், பொன்னத்தி மாரியம்மன், சமயபுர மாரியம்மன், ஆற்றங்கரை நாச்சியம்மன், பதினெட்டாம்படிக் கருப்பர், வேலாயுதமூர்த்தி அய்யனார் போன்ற கோயில்களில் இப்பூக்கட்டிப் பார்க்கும் பழக்கம் இருப்பதனைக் களஆய்வில் காண நேர்ந்தது.

### 4.2.9 தீட்டு

மனித வாழ்க்கையில் மூன்று நிலைகளில் தீட்டு கடைபிடிக்கப்படுகிறது.

- பிறக்கும் பொழுது
- வாழும் பொழுது
- இறக்கும் பொழுது

குழந்தை பிறந்த, இறப்பு நடந்த வீட்டில் முப்பது நாளும், வாழும் பொழுது பெண்களின் மாதவிடாய் காலமான மூன்று நாட்களும், பெண் பருவத்திற்கு வந்த சில நாட்களும், தீட்டான காலங்கள் என்பது சமூகத்தின் கட்டமைப்பாக உள்ளது.

இத்தீட்டுக் காலங்களில் தெய்வங்களை வணங்குவதும், கோயிலுக்குச் செல்வதும் குற்றம் என்றும், மீறி வழிபட்டால் தீங்கு ஏற்படும் எனவும் மக்களால்

நம்பப்படுகிறது. இக்காலங்களில் "தீட்டில் சம்பந்தப்பட்டவர்கள் யாரும் கோயில்களுக்குச் செல்வதில்லை"[14] என்கின்றனர்.

மஞ்சனி "காடேரியம்மன் கோயிலிருக்கும் பகுதியிலுள்ள கண்மாயில் உள்ள நீரினை எடுத்து இறந்துபோன பிணத்தைக் குளிப்பாட்ட மாட்டார்கள்."[15] ஒருவர் இறந்துபோனதிலிருந்து முப்பது நாள் வரைக்கும் இக்கண்மாயில் இறந்துபோன குடும்பத்தார் இறங்கமாட்டார்கள். மாதவிலக்கான பெண்கள் பதினோறு நாட்கள் இக்கோயில் கண்மாயில் தண்ணீர் எடுக்கமாட்டார்கள். பிறப்பு நடந்த வீட்டாரும் இக்கண்மாயில் முப்பது நாள் இறங்குவதில்லை. அவ்வாறு நடந்துவிட்டால் அக்குடும்பத்தார்க்கு ஏதேனும் தீங்கு ஏற்படும் என்னும் நம்பிக்கை காலம்காலமாகக் கடைபிடிக்கப்பட்டு வருகிறது.

### 4.2.10 சோரம் ஏற்படல்

தெய்வங்களுக்குப் படைக்கப்படும் மற்றும் நேர்த்திக்கடன் பொருட்கள் எந்தவிதத்திலும் சோரம் (உடைதல்) ஏற்படக்கூடாது. அவ்வாறு ஏற்படும் நிலையில் கெட்ட சகுனம் என்று நம்பப்படுகிறது.

சித்தானூர், சுக்கிரபட்டி, ஐயனார் கோயில்களுக்குக் குதிரை எடுப்புத் திருவிழா நடத்தப்படுகிறது. குதிரை தூக்கப்படும் இடத்திலிருந்து கோயிலில் வைக்கப்படும் வரைக்கும் இடைப்பட்ட எவ்விடத்திலும் கீழே வைக்கக்கூடாது. நேர்த்தி செய்யும் வரை குதிரைக்குச் சேதாரம் ஆகக்கூடாது. அதாவது குதிரையின் பாகங்கள் உடைதல், கால் தடுக்கி விழுந்து குதிரையைக் கீழே போட்டுவிடுதல் போன்றவை நிகழ்ந்தால் அக்குடும்பத்தார்க்குக் கெடுதல் நிகழும் என்று நம்பப்படுகிறது.

தேங்காய் உடைக்கும் பொழுது வட்டமாக உடைய வேண்டும், அழுங்கிப்போயிருக்கக்கூடாது, சூடம் காட்டும் பொழுது அனையக்கூடாது போன்ற நம்பிக்கைகள் மக்களிடத்தில் காணப்படுகின்றன.

#### 4.2.11 பெண்கள் சாப்பிடக்கூடாது

களஆய்விற்குச் சென்ற சில இடங்களில் குறிப்பிட்ட தெய்வங்களுக்குப் படைக்கப்படும் உணவுகளைப் பெண்கள் சாப்பிடக்கூடாது என்ற கட்டுப்பாடு உள்ளதனைக் காணமுடிந்தது. கண்டியன் புதுவயல் நல்லாத்துரை முனிஸ்வரர் கோயிலின் திருவிழா நாளன்று ஊரார் சார்பாக வெட்டப்படும் கிடாயினைக் கோயில் வளாகத்தில் சமைத்துச் சாப்பிடுகின்றனர். "இவ்வுணவினை ஆண்கள் மட்டும் சாப்பிட வேண்டும். பெண்கள் சாப்பிடக்கூடாது"[16] என்கின்றனர்.

பெண்கள் சாப்பிட்டால் அக்குடும்பத்தினருக்கும், சாப்பிட்ட பெண்ணிற்கும் தெய்வத்தால் தீமை நிகழும் என்றும், உடல் ரீதியான பாதிப்புகள் ஏற்படும் என்று நம்பப்படுகிறது. கண்ணங்கோட்டை சங்கரபதி முனிஸ்வரர், வெள்ளுர் முனீஸ்வரர் கோயில்களில் இந்நம்பிக்கை பின்பற்றப்பட்டு வருகிறது.

#### 4.2.12 தொழுதால் துன்பம் நீங்கும்

வாழ்க்கை என்பது இன்பமும் துன்பமும் கலந்த கூட்டுக் கலவையாகும். தாங்கள் சந்திக்கும் இன்பத்திற்கும், துன்பத்திற்கும் தெய்வங்களின் கருணைப் பார்வை காரணம் என்பது திடமான நம்பிக்கையாக இருக்கிறது.

திருமணம், காதுகுத்துதல், புதுமனை புகுவிழா போன்ற நிகழ்வுகளில் இடையூறு வரக்கூடாது எனக் கருதுகின்றனர். இதற்காக தெய்வத்தைச் சரணடைகின்றனர். மேற்சொன்ன நிகழ்வுகளுக்கு அழைப்பிதழில் தாங்களின் ஊர்த்தெய்வம், குலதெய்வம், காவல் தெய்வங்களின் பெயரோடு துணை என்னும் வார்த்தைச் சேர்த்து அச்சடிக்கப்படுவது வழக்கத்திலுள்ளது. இந்நிகழ்வுகள் துன்பம் தீர்த்து நன்மை பயக்கும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் வழக்கத்தில் கொண்டுள்ளனர்.

#### 4.2.13 நோய்கள் நீங்கும்

நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்பர். இப்பழமொழிக்கேற்ப நோய்கள் இன்றி வாழவிரும்புகின்றனர் என்றாலும் ஏதாவதொரு நோய்க்கு

மனிதன் ஆட்பட்டு படுத்த படுக்கை, மருத்துவச்செலவு, மருத்துவரால் கைவிடப்பட்ட நிலை போன்ற பல்வேறு காரணிகளால் பல்வேறு மன உளைச்சலுக்கு ஆட்படுகிறான்.

இதுபோன்ற நிலைகளில் மனிதன் தெய்வத்தை நம்புகிறான். தெய்வத்தால் தாம் காப்பாற்றப்படுவோம் என்ற நம்பிக்கையில் தீராத நோயாக இருந்தாலும் தம் வீட்டுத் தெய்வத்தால் தீர்த்து வைக்கமுடியும், மருத்துவம் கைவிட்டாலும் தம் தெய்வம் கைவிடாது என்ற நம்பிக்கை இவ்வட்டாரத்தில் காணப்படுகிறது.

தாழையூர் கூத்தாடி முத்துப்பெரியநாயகியம்மன் கோயிலின் பரிவாரத் தெய்வமான உதிரக்காளிக்குப் பச்சரிசி மாவால் களி செய்து படைத்து வழிபட்டால் பெண்களுக்கு மாதவிலக்கு நேரத்தில் ஏற்படும் அதிக உதிரப்போக்கு சரியாகும் என நம்பப்படுகிறது. ஆதலால் இக்காளிக்கு உதிரக்காளி எனப் பெயரிட்டு அழைத்து வருகின்றனர்.

இக்கோயிலின் பின்புறமுள்ள வில்வமரத்தை வெள்ளி, செவ்வாய் ஒன்பது முறை வலம் வந்தால் ஏவல், பில்லி, சூனியம் சரியாகும் என்ற நம்பிக்கையும் காணப்படுகிறது.

நாச்சாங்குளம் செட்டியாஊருணிக் காளியம்மனுக்கு வெள்ளி, செவ்வாய் தொடர்ந்து விளக்கேற்றினால் உடலிலுள்ள தீராத நோயும் தீரும் என நம்பப்படுகிறது.

இறகுசேரி சுடலைமாடன் கோயிலுக்கு 7,11,21 என்ற எண்ணிக்கையிலான நாட்களில் விளக்குப் போட்டு வந்தால் ஏவல், செய்வினைகள், பில்லி, சூனியத்தால் உடல் பாதிப்படைந்தவர்கள் குணமடைவர் என்ற நம்பிக்கை காணப்படுகிறது.

### 4.3 நம்பிக்கையை உணர்த்துதல்

**'யானைக்குப் பலம் தும்பிக்கை**
**இறைபக்திக்குப் பலம் நம்பிக்கை'**

என்னும் மூதோர் வாக்கு இறைவழிபாட்டின் நிலைக்களனாக நம்பிக்கையை சுட்டிக்காட்டி இருக்கிறது. நம்பிக்கை இன்றி எச்செயலையும் செய்ய இயலாது என்பது உளவியலாகும். "நம்பிக்கை என்பது ஒன்றைப் பற்றிய உண்மையை ஏற்பதாகும்"[17] என்னும் கருத்தின்படி இதில் உண்மையும் புரையோடிக் கொண்டிருக்கிறது என்பதனையும் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

"நாம் நினைப்பதை அல்லது எதிர்பார்ப்பதை மட்டும் நம் கண்முன் கொணர்ந்து நிறுத்தி அவற்றை ஏற்றுக் கொள்ளச் செய்வதனை நம்பிக்கை என்றும் இதனை நம்பிக்கைகளின் அலகுகளான புலன்கள் நேரடியாக உணர்ந்து கொள்ளுதல் ஒன்றை ஏற்றுக் கொள்ளும் காரண காரியங்கள் ஆகியன உறுதி செய்கின்றன"[18] என்னும் சுசிலா கோபாலகிருஷ்ணனின் கூற்றுப் புலன்களும், காரணகாரியத் தொடர்பும் அடிப்படையாக உள்ளதனை உணர்த்துகிறது. களஆய்வு நம்பிக்கைகளிலும் இவை காரணிகளாக விளங்குவதனைக் காணமுடிந்தது.

"சில எண்ணங்களை உள்மனம் (Sub-Conscious) திடீரென்று மூளைக்கு உணர்த்துகிறது. மூளையில் பதியும் அந்த எண்ணங்கள் உண்மையாகி உறுதிப்படுத்தும் போது நம்பிக்கையாகிவிடுகிறது."[19] தெய்வவழிபாட்டின் நிகழ்வுகள் இதனை உறுதி செய்கின்றன. இவை காலம்காலமாக தொன்றுதொட்டுச் சமூகத்தால் தலைமுறையிலிருந்து அடுத்த தலைமுறைக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. உண்மையில்லை என்றால் ஏதாவது ஒரு காலகட்டத்தில் காணாமல் போயிருக்கும். தெய்வங்களின் மீதான நம்பிக்கை தொடர்வினையாகக் கடைபிடிக்கப்பட்டு வருகிறது.

இதுபோன்ற நம்பிக்கைகளின் அடிப்படையில் வழிபாடு வளர்ச்சி அடைகிறது. தெய்வத்தின் மீதான பக்தியும், காதலும், வழிபாட்டு நிலையும் வளர்ச்சியின் அடுத்த கட்டத்திற்கு எடுத்துச் செல்கிறது.

சீட்டு எழுதுதல் என்பது சமய தெய்வங்களில் காணப்பட்ட நிலை. ஆஞ்சநேயர் கோயில்களில் அவரது நாமத்தினை நூற்றியெட்டு முறை எழுதி மாலையாகத் தொடுத்து வழிபட்டு வருவது காலம் காலமாக நடைமுறையிலுள்ளது. சிறுதெய்வ வழிபாட்டில் கள ஆய்விற்குச் சென்ற சில இடங்களில் தத்தம் குறைகளைச் சீட்டெழுதி கருவறையில் வைத்துப் பரிகாரம் தேடுவதைக் காண நேர்ந்தது.

இச்செயல் சமயவாதிகள், சமயங்களின் தாக்கத்தால் ஏற்பட்டிருக்கலாம். பழங்காலத்தில் சிறுதெய்வ வழிபாட்டில் இதுபோன்ற நம்பிக்கை இருந்ததாகச் சான்றுகள் இல்லை. பிற்காலத்தில் இந்நம்பிக்கை தோன்றியிருக்கலாம்.

நம்பிக்கை என்ற பெயரில் ஆணாதிக்கமும் கட்டவிழ்த்து விடப்பட்டிருப்பதைச் சில கோயில்களில் காணமுடிந்தது. முனீஸ்வரருக்குச் சமைத்துப்போடும் உணவினைப் பெண்கள் சாப்பிடக்கூடாது என்பது ஆணாதிக்கச்சூழலே காரணியாக இருக்கலாம். தெய்வத்தின் முன் ஆண், பெண் என்ற பேதம் இல்லை. இவ்வேறுபாட்டை உருவாக்கி பெண்களை ஒதுக்கித் தள்ளியது யார் என்ற வினாவும் எழத் தோன்றுகிறது.

களஆய்வில் இதற்கு விடைகான முற்பட்ட பொழுது சரியான பதிலை யாரும் முன் வைக்கவில்லை. பெண்கள் சாப்பிடக்கூடாது என்று எந்தத் தெய்வமும் சொல்வதற்கு வாய்ப்பில்லை. “காலம் காலமாக இப்படித்தான் நடக்கிறது”[20] எனும் செய்தியை களஆய்வில் குறிப்பிடுகின்றனர்.

### 4.3.1 நேர்த்திக்கடன்

நம்பிக்கைகளின் வெளிப்பாடே நேர்த்திக்கடன் செலுத்துதல் எனக் கொள்ளலாம். தமக்குத் துன்பம் தீர்த்த தெய்வத்திற்குக் கைம்மாறு செய்தல்

இதன் குறியீடு எனக் கொள்ளலாம். மனிதனின் வாழ்வியலில் பல்வேறு கட்டங்களைத் தாண்டித்தான் முன்னேற வேண்டியுள்ளது. பிறப்பு முதல் இறப்பு வரைக்கும் பலவகையான இன்னல்களையும், இன்பங்களையும் சந்தித்துவருகிறான். இந்நிகழ்வுகளுக்குத் தெய்வங்களுக்கு செய்யும் படையலும், பரிகாரமும் நேர்த்திக்கடனாகிறது.

“நேர்த்திக்கடன் என்றும், தெய்வங்களுக்குச் செய்யும் கைம்மாறு என்றும், பிரார்த்தனை என்றும், வழிபாடு என்றும் தமிழ் அகராதி குறிப்பிடுகிறது. மேலும் நேருதல், கடன் என்ற இரு சொற்களும் சேர்ந்து நேர்த்திக்கடன் ஆயிற்று என்றும், நேருதல் என்பது கொடுத்தல் என்ற பொருளை தமிழ் அகராதி”[21] சுட்டிக்காட்டுகிறது. “நிவர்த்திக்கடன் வழக்கம் என்பது குறிப்பிட்ட நிலப்பகுதியில் வழங்கும் எழுதாச் சட்டம்”[22] எனக் கலைக்களஞ்சியம் விளக்கமளிக்கிறது.

இக்கூற்றுக்களின் அடிப்படையில் தெய்வத்திற்கு கைம்மாறாக மனிதன் திருப்பிச் செலுத்துகிறான். அதாவது கடன் என்பது திருப்பிக் கொடுத்தல் என்றே பொருள் கொள்ளலாம். இவ்வழக்கம் சமூகத்திலும், வழிபாடுகளிலும், ஆண், பெண் பேதமின்றி பலதெய்வங்களுக்கும் செலுத்தப்படுகிறது. என்றாலும் தெய்வத்திற்குத் தெய்வம், ஊருக்கு ஊர் நேர்த்திக்கடன் முறைகளில் சிறு மாறுதல்களும், வேறுபாடுகளும் காணப்படுகின்றன.

நம்பிக்கையும், பயமும் வழிபாட்டைத் தூண்டுகின்றன. இவ்வழிபாட்டில் வேண்டப்படும் வேண்டுதல் முழுமை அடையும்பொழுது அங்கு நன்றியுணர்வுடன் அது முடிவடைகிறது. இதுவே நேர்த்திக்கடனின் மையப்புள்ளி எனக் கொள்ளலாம்.

நோய்கள் தீர்த்தல், கேட்டது கிடைத்தல், குடும்ப வளமை, பிள்ளைப்பேறு உண்டாதல், வேளாண்மை செழிக்க, வேலைவாய்ப்பு, வெளிநாடு செல்லல், கல்வி பெறுதல் என வாழ்வியலின் ஒவ்வொரு நிலையிலும் வழிபாடு

செய்யப்படுகிறது. இதன் தொடர்நிலை நேர்த்திக் கடனாகிறது. தங்களுக்குக் கிடைத்திட்ட பலன்களின் அடிப்படையில் நேர்த்திக்கடனின் தன்மையும், தகுதியும் மாறுபடுகின்றன.

சங்க காலம் தொட்டு இவ்வழக்கம் வழக்கத்தில் இருந்துள்ளது.

**"வேண்டினர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட**
**ஆண்டாண்டுறைதலும் அறிந்தவாறே" (திரு.முரு.254-255)**

என்று திருமுருகாற்றுப்படை சுட்டுகின்றது.

**"பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும் இவை**
**நாலும் கலந்துனக்கு நான் தருவேன் - கோலஞ்செய்**
**துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீ எனக்குச்**
**சங்கத் தமிழ் மூன்றும் தா" (நல்வழி.பா.1)**

என ஔவையார் பாலும், தேனும், பாகும் இறைவனுக்குக் கொடுத்து சங்கத் தமிழைத் தனக்குத் தருமாறு கேட்டதாக ஔவையாரின் பாடல் வரிகளும் சான்றாக இருக்கின்றன.

சிறுதெய்வங்கள் மனிதராகப் பிறந்து இறந்து போனவர்கள் என்பதால் அவர்தம் புழங்கு பொருட்கள் படையலிலும் நேர்த்திக்கடனாகச் செலுத்தப் படுகின்றன என்பதை,

**'போதலைக் கூட்டாற்றுக் கருப்பனின்**
**புந்தி குளிர்ந்திடவே**
**கோதிலாக் குட்டி வெட்டிச்**
**சாராயம் ரொட்டி**
**கும்பிட்டு வையுங்கடா'**

என்னும் அறிவு நம்பியின் பாடலடிகள் சாராயம், ரொட்டி போன்ற பொருட்களும் படைக்கப்பட்டு நிவர்த்தி செய்யப்பட்டன என்பதனை எடுத்துக்காட்டுகிறது.

### 4.3.2 மாவிளக்கு எடுத்தல்

அம்மன் கோயில்களில் மட்டும் இந்நேர்த்திக்கடன் செலுத்தப்படுகிறது. பச்சைநெல் குத்தி அரிசியாக்கி அதனைத் தண்ணீரில் ஊறவிட்டு உரலில் இட்டு இடித்துச் சலித்து மாவாக்குகின்றனர். இவ்வாறு தயாரிக்கப்படும் மாவினை

யாரும் எச்சில்படுத்தமாட்டார்கள். இதில் வெல்லம், தண்ணீர் விட்டுப் பிசைந்து பதமாக வைத்துக் கொள்வர். அம்மன் ஆலயத்திற்குச் சென்று யாருக்கு மாவிளக்கு பார்க்க வேண்டுமோ அவர்களை படுக்க வைத்து உடம்பில் வாழை இலையில் கொண்டு சென்ற மாவினை தட்டையாக வைத்து நடுவினில் சிறிது பள்ளம் போல் செய்து அதில் நெய்விட்டு எரியவிடுவர். மாவில் விளக்கெரிவதால் இதனை மாவிளக்கு என்கின்றனர்.

கண் மாவிளக்கு, வயிற்று மாவிளக்கு, தலைக்குமேல் மாவிளக்குப் போன்ற பெயர்களில் அழைக்கின்றனர். கண் மாவிளக்கு என்றால் கண்ணில் வைத்து எடுக்கப்படுகிறது.

இதற்கு மாவிளக்கு எடுப்பவர் முன்பாக வாழை இலை பரப்பி இரண்டு (இரட்டைத் தேங்காய்) தேங்காய் உடைத்து பூ, பழம், சாம்பிராணி, ஊதுபத்தி வாசனை காட்டி சூடம் ஏற்றி வழிபடுகின்றனர்.

இந்நிகழ்வை வாடியார்வீதி சமயபுர மாரியம்மன், தேவகோட்டை முத்துமாரியம்மன், பொன்னத்தி மாரியம்மன் போன்ற கோயில்களில் காணமுடிந்தது.

உடல்நிலை பாதிக்கப்பட்டவர்கள் மாவிளக்கு எடுக்கின்றனர். இதில் முதற்காரணம் அம்மையும், அடுத்த நிலையில் பிற நோய்களும் வரிசைப்படுகின்றன என்பதனைக் களஆய்வில் காணமுடிந்தது.

### 4.3.3 அக்னிசட்டி எடுத்தல்

அக்னி என்பது தீயுடன் தொடர்புபடுத்தப்படுகிறது. அம்மன் தெய்வங்களுக்குச் செலுத்தப்படும் நேர்த்திக்கடன்களில் இதுவும் ஒன்றாகும். தீயினைப் பழங்காலந்தொட்டு வழிபாட்டு நிலையில் கையாண்டுள்ளனர். தீவினைகள் அழிவதற்கும், தீமைகள் விலகுவதற்கும் தீயுடன் கூடிய சட்டியைக் கையிலேந்தி நேர்த்தி செலுத்துகின்றனர். அம்மை பார்த்தவர்கள்,

நோய்களிலிருந்து மீண்டவர்கள், பிள்ளைப்பேறு பெற்றவர்கள் இந்நேர்த்திக்கடன் செலுத்துகின்றனர்.

அம்மன் உருவம் பொறிக்கப்பட்டிருக்கும் புது மண்சட்டியில் வேப்பவிறகுகள் வைத்து விளக்கெண்ணெய் ஊற்றி தீ மூட்டுகின்றனர். தீச்சட்டியை நேர்த்திக்கடன் செலுத்துபவர் வேப்பிலையுடன் கையில் வாங்கி ஊர்வலமாகவும், கோயிலினை வலம் வந்தும் நேர்த்தி செலுத்துகின்றனர்.

தீ வளர்க்கப்படும் முறைக்குச் “சட்டி வளர்த்தல்” என்கின்றனர். தேவகோட்டை சமயபுரமாரியம்மன், முத்துமாரியம்மன் போன்ற கோயில்களில் இந்நேர்த்திக்கடன்கள் செலுத்தப்படுகிறது.

### 4.3.4 தொட்டில் கட்டுதல்

குழந்தை இல்லாத தம்பதியர் கோயில்களில் தான் உடுத்திய சேலைத்துணி, புதுத்துணி, பட்டுத்துணி போன்றவற்றாலும் மரக்கட்டைகளால் ஆன தொட்டில்களும் கட்டி அதில் மண் பொம்மைகள் அல்லது கோயிலில் கிடக்கும் கல் முதலியவற்றினை தொட்டிலில் இட்டுச்செல்வர். இதனால் தமக்குக் குழந்தை பிறக்கும் என்ற நம்பிக்கையாகும்.

நாளடைவில் இது நடந்தேறி குழந்தை பெற்ற நிகழ்வுகளும் நிரம்பக் காணப்படுகின்றன. திருவிழாவின் பொழுது புதுச்சேலையில் தொட்டில் கட்டி அதனைத் தாங்கிக் கொள்வதற்கு ஐந்து, ஏழு, ஒன்பது என்ற எண்ணிக்கையில் கரும்புகள் சேர்த்து தாயும், தந்தையும் கோயிலினை வலம் வருவர். இதனைக் ‘கரும்பால தொட்டி’ என்றழைக்கின்றனர். இந்நேர்த்திக்கடன் மஞ்சனி காடேரியம்மன், அருணகிரிப்பட்டிணம் முத்துமாரியம்மன், ஈகரை ஆற்றங்கரை நாச்சியம்மன், தச்சவயல் ஆற்றங்கரைக் காளியம்மன் போன்ற கோயில்களில் நடைபெறுகிறது.

இந்நேர்த்திக்கடன் களஆய்வு சென்ற பகுதியில் ஆண் தெய்வக் கோயில்களில் காணப்படவில்லை என்பதால் சில காரண காரியங்களை முன்வைக்கலாம்.

- பெண் வளமையின் குறியீடு
- குழந்தையை சுமப்பவள் பெண்
- பிறப்பிற்கு அடிப்படையானவள்

எனும் கருத்துக்களை மையமிட்டுப் நோக்குமிடத்து பெண் தெய்வங்களால் குழந்தை வரம் கிட்டும் என்ற நம்பிக்கை நாட்டுப்புற மக்களிடம் பரவலாகக் காணப்படுகிறது.

பிறப்பிற்கு அடிப்படையாகவும், அடையாளமாகவும் பெண் கருதப்படுகிறாள். பெண்களால் குடும்பம் விரித்தியடைகிறது. இதனால் பெண்வழிச் சமூகம் தமக்கென ஒரு தனியிடம் பிடித்தது. இக்காரணங்களை மையமிட்டுப் பெண் தெய்வக் கோயில்களில் பிள்ளைவரம் வேண்டியும், பிள்ளைத் தொட்டில், கரும்பால் தொட்டில் கட்டும் வழக்கமும் பெருகி உள்ளதாகக் கருதமுடிகிறது.

**4.3.5 பால்குடம் எடுத்தல்**

நாட்டுப்புறத் தெய்வங்களின் திருவிழாக்களில் பால்குடம் எடுத்தல் நிகழும். இது ஆண் பெண் தெய்வக் கோயில்களில் நடைபெறுகிறது என்றாலும் பெரும்பான்மை பெண்தெய்வக் கோயில்களில் நடைபெறுகிறது. தேவகோட்டை இராம்நகர் நாகாத்தம்மன், கள்ளாம்பிரம்புக் காளியம்மன், சமயபுரம் மாரியம்மன், அண்ணாநகர் கள்ளாம்பிரம்புக்காளியம்மன், முத்துமாரியம்மன், ஆற்றங்கரைக் காளியம்மன், செட்டியா ஊருணிக் காளியம்மன், கல்லூரி நகர் கள்ளாம்பிரம்புக் காளியம்மன், பாண்டி முனிஸ்வரர், சுடலைமாடன், தர்மமுனிஸ்வரர் ஆகிய கோயில்களில் பால்குடம் எடுக்கும் நிகழ்வுகள் நடைபெறுகின்றன.

பால்போல் செல்வம் பெருக வேண்டும் என்பதற்காக பால்குடம் படைப்பதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். பால் பொங்கும் தன்மையுடையது. அதுபோல் சுகமும், தனமும், பொன்னும், பொருளும் தம்வீட்டில் பொங்க வேண்டும் என்பதன் குறியீடு பால்குடம் எடுத்தல் எனக் கருதமுடிகிறது. புதிதாக வீடு குடிபோதல், மற்றும் பொங்கலிடுகையில் பால் பயன்படுத்தப்படுவது கருதத்தக்கதாகும். அர்ச்சனைப் பொருட்களில் பால் முதன்மையிடம் பெறுவது புனிதத்தையும், தூய்மையினையும் பறைசாற்றுகின்றது. நாச்சாங்குளம் செட்டியா ஊருணிக் காளியம்மன் கோயிலில் ஆண்டுதோறும் நடக்கும் வைகாசித் திருவிழாவில் பால்குடம் எடுத்தல் முக்கிய நிகழ்வாகக் கூறுகின்றனர்.

திருவிழாவின் எட்டு நாளுக்கு முன்பு அம்மனுக்குக் காப்புக் கட்டப்படுகிறது. அன்று பால்குடம் எடுப்பவர்களுக்கும் காப்பு கட்டிவிடப்படுகிறது. அன்றிலிருந்து விரதம் மேற்கொள்கின்றனர். இந்நிகழ்வில் ஆண்களும், பெண்களும் கலந்து கொள்கின்றனர்.

நாச்சாங்குளம் விநாயகர் கோயிலிருந்து பால்குடம் தூக்கிவரப்பட்டு வேலாயுதப்பட்டிணம் அருகிலுள்ள செட்டிய ஊருணிக் காளியம்மன் கோயிலை வந்தடைகிறது. இது பெரும்பாலும் மண்குடமாக இருப்பதனைக் களஆய்வில் காணமுடிந்தது.

குடத்தைச் சுற்றிலும் வேப்பிலை, மாஇலை கலந்த தோரணம் கட்டி அழகுபடுத்தியிருப்பர். முன்பாக விநாயகர் கோயிலில் வைத்துச் சிறப்புப் பூசைகள் செய்யப்படுகிறது. இறுதியில் குடத்திலுள்ள பாலால் அம்மனுக்கு அர்ச்சனை நடத்தப்படுகிறது. படைக்கப்பட்ட பாலை பிரசாதமாகப் பெற்றுச் செல்கின்றனர்.

கல்லூரி நகர் கள்ளாம்பிரம்புக் காளியம்மன் கோயிலின் பால்குடம் இராம்நகரில் உள்ள பாலமுருகன் கோயிலிலிருந்து தூக்கிவரப்படுகிறது.

இறகுசேரி மாடன், மஞ்சனப்பேச்சியின் பால்குடம் தேவகோட்டை சிவன் கோயிலிலிருந்து தூக்கிவரப்படுகிறது.

இராம்நகர் நாகாத்தம்மன் கோயிலுக்குத் தாணிச்சாவூரணி விநாயகர் கோயிலிலிருந்து பால்குடம் எடுத்துவரப்படுகிறது. வெள்ளூர் தர்மமுனிஸ்வரர் கோயிலின் பால்குடம் திருவேகம்பத்தூர் சிவன்கோயிலிலிருந்து தூக்கிவரப்படுகிறது.

மேற்கண்ட நிகழ்வுகளின் மூலம் சிறுதெய்வ திருவிழாக்களில் பெருந்தெய்வங்களை இணைத்துள்ளனர் என்பதனைக் காணமுடிகிறது. சிவன், விநாயகர், முருகன் போன்ற பெருந்தெய்வங்களைப் பால்குடத் திருவிழாவில் ஒன்றோடொன்று இணைத்து மக்களைச் சமயங்களின் பக்கம் திசை திருப்பியுள்ளனர் என்பதனை இந்நிகழ்வுகள் சுட்டிக்காட்டுகின்றன.

### 4.3.6 பூத்தட்டு எடுத்தல்

இராம்நகர் நாகாத்தம்மன் கோயில், அண்ணாநகர் மடக்கரை காளியம்மன், கல்லூரிநகர் கள்ளாம்பிரம்புக் காளியம்மன், இளக்கினிவயல் மூக்கரைக் காளியம்மன், சமயபுரம் மாரியம்மன் போன்ற கோயில்களில் பூத்தட்டு எடுத்தல் நடைபெறுகின்றது. வழிபாட்டில் சிறப்பிடம் பெறுவது பூக்கள் ஆகும்.

**“நெல்லும் மலரும் தூஉய்க் கைதொழுது”   (நெ.ந.வா.அடி.43)**

எனும் நெடுநல்வாடை பாடலடி பூக்கள் தூவி வழிபட்டதனைப் பதிவு செய்திருக்கிறது. இதனால் இவ்வழிபாட்டுமுறை சங்க காலம் தொட்டு வழக்கில் இருந்துள்ளது என்பதனை அறியமுடிகிறது.

இராம்நகர் நாகாத்தம்மன் கோயிலில் ஆண்டுதோறும் நடைபெறும் ஆவணி மாதத் திருவிழாவில் பூத்தட்டு எடுத்தல் நடைபெறுகிறது. இதில் “பெண்கள் மட்டும் கலந்து கொள்கின்றனர். பத்து வயதுக்குட்பட்ட ஆண், பெண் இருபாலரும் கலந்து கொள்வதனையும் காணமுடிந்தது.”[23] நூற்றுக்கும் மேற்பட்ட

எண்ணிக்கையில் கலந்து கொள்ளும் பெண்கள் அண்ணாசாலை காமாட்சியம்மன் கோயிலிலிருந்து பூத்தட்டுத் தூக்கி வருகின்றனர்.

காமாட்சி அம்மன் கோயிலின் முன்பாக அனைத்துத் தட்டுகளிலும் பூக்கள் நிரப்பப்படுகிறது. இதில் கதம்பம், மல்லிகை, மரிக்கொழுந்து, ரோஜா போன்றவை இடம்பெறுகின்றன. இவை உதிரிப்பூக்களாக இருக்கிறது.

பரப்பி வைக்கப்பட்டிருக்கும் அத்தட்டுக்களுக்கு அருச்சனை செய்யப்படுகிறது. அதன்பின்பு அங்கிருந்து முக்கிய வீதிகளின் வழியாக தூக்கிவரப்பட்டு நாகாத்தம்மன் கோயிலினை வந்தடைகிறது. மேளம், நாதஸ்வரம் போன்ற இசைக்கருவிகள் இசைக்கப்படுகின்றன.

நாகாத்தம்மன் கோயிலை வந்தடைந்ததும் அம்மனின் எதிரில் பூத்தட்டுக்கள் வைத்துப் பூசை செய்யப்படுகிறது. தட்டுக்களிலுள்ள பூக்களால் அம்மனுக்கு அர்ச்சனை செய்கின்றனர். பின் பூக்களைப் பக்தர்களுக்குப் பிரசாதமாக வழங்குகின்றனர். இதனைப் பெற்றுச் செல்லும் பெண்கள் தனது தலையிலும், வீட்டின் கோயில் அறையிலும் வைத்து வழிபடுவதாகக் கூறுகின்றனர்.

#### 4.3.7 முடிக்காணிக்கை

மொட்டை எடுத்தல், முடி இறக்குதல் எனும் பெயரில் இந்நேர்த்திக்கடன் செலுத்தப்படுகிறது. சிறியவர் தொடங்கி, பெரியவர் வரைக்கும் ஆண், பெண் பேதமின்றி அனைவரும் இந்நேர்த்திக்கடனைச் செலுத்துகின்றனர்.

தீராத வியாதிகள், குடும்பவளமை, குழந்தைப் பிறப்பு, கேட்டது கிடைத்தல் போன்ற காரணங்களுக்காகவும் இன்னப்பிற நிகழ்வுகளுக்காகவும் முடி இறக்குகின்றனர். இதனைக் கண்ணதாசன் "மொட்டை எடுப்பவர்கள் என்னுடைய ஆணவத்தையும், அகங்காரத்தையும், இராஜபோகத்தையும் உன் முன்னால் இறக்கி வைக்கிறேன் என்று நினைத்துக் கொண்டே முடி

இறக்குகிறார்கள்”[24] என்கிறார். இதன்மூலம் தான் என்ற அகங்காரம் ஒழிந்து தன் தெய்வத்தின் முன் சரணடைவதைக் குறிக்கக் காணலாம். இவ்வட்டாரத்தில் முடி இறக்குதல் திருவிழாக்காலங்களில் அதிகமாகவும், மற்ற நாட்களில் குறைவாகவும் காணப்படுகின்றன. வீட்டில் பிறக்கும் தலைப்பிள்ளைக்கு குலதெய்வக் கோயிலில் முதன்முதலாக முடி இறக்குகின்றனர்.

### 4.3.8 தீ மிதித்தல்

இதனைப் பூக்குழி இறங்குதல், பூ மிதித்தல் எனும் சொல்லாடல்கள் குறிக்கின்றன. தீயினைப் ‘பூ’ என அழைக்கப்படுகின்றன. இவண் நோக்கத்தக்கதாகும். அதனைப் பூவாக நினைத்து இறங்குகின்றனர் என்ற உள்ளாந்த பொருளுமுள்ளது. இவ்விழாவை மாரியம்மன், காளியம்மன் போன்ற கோயில்களில் மிகுதியாகக் காணலாம்.

தான் குற்றமற்றவர் என்ற நிலையினைச் சமூகத்திற்கு எடுத்துக் காட்டுவதற்குத் தீயினைக் களமாகக் கொண்டது நம் தமிழ்ச் சமூக வரலாறு. அவை:

- ❖ கண்ணகி தன் ஒரு முலையினால் தீயை உருவாக்கி மதுரையை எரித்தாள்.
- ❖ சீதை தன் கற்புத் திறனைக்காட்டத் தீயில் இறங்கி வந்தாள்.
- ❖ நந்தனார் தன் பக்தியை வெளிக்காட்ட தீயில் புகுந்தார்.

இந்நிகழ்வுகள் தீயுடன் தொடர்புடைய செய்திகளாகும்.

ஆரம்ப கால இயற்கை வழிபாட்டிலும் நெருப்பு இருந்துள்ளது. மேற்கண்ட நிகழ்வுகள் சமூகத்தை மையமிட்டுத் தம் நேர்மையை, உள்ளன்பைச் சோதித்துக் காட்டக்கூடியன. கோயில்களில் நடக்கும் தீ மிதித்தல், தன் தெய்வத்திடம் உண்மையான பக்தி நிலையையும், அன்பின் வெளிப்பாட்டையும்,

கேட்டது கிடைத்தற்கான நன்றிக் கடனாகவும் செய்கின்றனர் என்ற உள்ளார்ந்த பொருளாகக் கொள்ளலாம்.

தீராத நோயினால் துன்பப்பட்டவர் நோய் தீர்ந்தவுடன் தீமிதிக்கிறார். குழந்தை இல்லாமல் இருந்த தம்பதியர் தமக்குக் குழந்தை பிறந்தவுடன் இந்நேர்த்திக்கடனைச் செலுத்துகின்றனர். தமது உடல் மற்றும் உள்ளத் தூய்மையினை இந்நேர்த்திக்கடன் பிரதிபலிக்கிறது. "நெருப்பைத் தூய்மையின் அடையாளமாக மக்கள் கருதுகிறார்கள். தீதும், பாவமும் அழிய நெருப்புக் குளிக்க வேண்டும்"[25] எனும் கூற்றும் நெருப்பைத் தூய்மையின் அடையாளமாக எடுத்துரைத்திருக்கிறது.

இந்நேர்த்திக்கடன் செலுத்துபவர் கடுமையான விரதமிருந்து, அம்மனுக்குரிய மஞ்சள் ஆடை தரித்து, நெற்றியில் குங்குமம் கழுத்தில் மாலையிட்டு அருள் வந்து ஆடிய பின் தீயில் இறங்குவர். "தீயில் இறங்கும் பொழுது பஞ்சு மெத்தையில் இறங்குவது போன்று இருக்கும்"[26] என்பாரின் கூற்றினைக் களஆய்வில் காணமுடிகின்றது. இந்நிகழ்வுகள் அருணகிரிப்பட்டிணம் முத்துமாரியம்மன், தேவகோட்டை சமயபுரமாரியம்மன், இராம்நகர் நாகாத்தம்மன், கல்லங்குடி செல்லியம்மன் கோயில்களில் நடைபெறுகின்றன.

### 4.3.9 உருள் தண்டம்

இது இரண்டு நிலைகளில் செலுத்தப்படுகிறது. அவை உருள்தண்டம், கும்பிடுதண்டம் ஆகும். உருள்தண்டம் என்பது ஆண்களும், பெண்களும் செலுத்துகின்றனர். கும்பிடுதண்டம் பெரும்பாண்மை பெண்களும் சிறுவயதினரும் செலுத்தக்காணலாம். இந்நிகழ்வுகள் அம்மன் கோயில்களில் அதிகமாக நிகழ்கின்றன.

கும்பிடுதண்டம் செலுத்துபவர் ஈரத்துணியுடன் வேப்பிலை வைத்துக்கொண்டு அடியளந்து கைகால்களை நீட்டி கும்பிட்டு விழுந்து

ஆலயத்தை மூன்று முறை சுற்றிவருவர். உருள்தண்டம் என்பது ஈரத்துணியுடன் வேப்பிலை, தேங்காய் வைத்துக் கொண்டு தலைக்குமேல் கும்பிட்டபடி இரண்டு மூன்று பேர் அவரை உருட்டிச் செல்ல உருண்ட நிலையில் கோயிலை மூன்றுமுறை வலம் வருவர்.

இந்நேர்த்திக்கடன்கள் வன்மைத் தன்மையுடன் செய்யப்படுபவை ஆகும். உடலை வருத்தித் தெய்வத்திடம் சரணடைதல் ஆகும். இதனைச் செலுத்துபவர்கள் பெரும்பாலும் இறப்பின் எல்லைக்குச் சென்று உயிர் திரும்பியவர்கள் என்பர். பல நம்பிக்கைகளை முன் வைத்து இந்நேர்த்திக்கடன் செலுத்துவதனையும் காணமுடிந்தது. பொன்னத்தி மாரியம்மன், சமயபுர மாரியம்மன், அருணகிரிப்பட்டிணம் முத்துமாரியம்மன் போன்ற கோயில்களில் காணமுடிகிறது.

#### 4.3.10 காணிக்கை செலுத்துதல்

பெரும்பான்மையான கோயில்களில் காணிக்கை செலுத்துதல் நடைமுறையிலுள்ளது. பொன், பொருள், வெள்ளி, பணம் போன்ற ஏதாவது ஒன்றாக இருக்கக் காணலாம். வசதிக்கு ஏற்றபடியும், தெய்வத்தால் தமக்கு ஏற்பட்ட நன்மைகளின் அளவீடும் காணிக்கையின் தன்மையினை முடிவு செய்கின்றன.

நோய், விபத்து போன்ற காரணங்களினால் உயிர்பிழைத்த கணவனைக் காப்பாற்றியதற்காகத் தன் தாலியை மனைவி நேர்த்திக்கடன் பொருளாகச் செலுத்துகிறாள். இதை மரபு வழிப்பட்ட கடனாகக் கொள்ளலாம். கணவன் இருக்கும் வரைக்கும் மனைவிக்குப் பூவும், பொட்டும் என்று சமூகம் கட்டமைத்திருக்கிறது. இதற்காக பெண்கள் மண் சோறு திண்பதனையும் காணலாம். தன் கணவன் தீர்க்க ஆயுளுடன் வாழ தாலியைத் தானமாக வழங்குகின்றனர்.

பணமாக உண்டியல் மூலமாகவும், சிறுதெய்வக் கோயில்களின் நிர்வாகத்தினரிடம் நேரடியாகவும் வழங்கப்படுகின்றன. கோயில் கட்டுவதற்குச் செங்கல், மணல், சிமெண்ட் போன்றவையும் பக்தர்களால் வாங்கிக் கொடுக்கப்படுகிறது. வசதி படைத்தவர்கள் தங்கம் மற்றும் வெள்ளியால் தெய்வத்தின் உருவங்கள் வாங்கிச் செலுத்துகின்றனர்.

கண்டியன் புதுவயல் நல்லாத்துரை முனிஸ்வரர் கோயிலுக்குப் பெரிய அளவிலான வெண்கல அண்டாவும், கருப்பருக்குக் கச்சையும், அரிவாளும், சிந்தாமணியைச் சேர்ந்த சுந்தரேசன் என்பவர் வாங்கிக் கொடுத்துள்ளார்.

தேவகோட்டை மாவடிக்கருப்பர் ஆலயத்திற்குப் பாராளுமன்ற உறுப்பினர் நாகாடி செந்தில்நாதன் நேர்த்திக்கடனாக கோயிலின் முன்பாக வளைவு (ஆர்ச்) கட்டிக் கொடுத்திருக்கிறார். தேவகோட்டை தாழையூர் கூத்தாடி முத்துப்பெரியநாயகி அம்மன் கோயிலுக்குப் பலர் மின்விசிரியும், முகம் பார்க்கும் கண்ணாடியும் (பெரிய அளவு) வாங்கிக் கொடுத்துள்ளனர். வேலாயுதமூர்த்தி அய்யனார் கோயிலுக்குக் கோயிலைச் சுற்றிலும் நம்பியார் என்பவர் முள்கம்பி அமைத்துக் கொடுத்துள்ளார்.

இவ்வாறு பல்வேறு நிலைகளில் காணிக்கை செலுத்துதல் அமைகிறது. நன்றிக்கடனாகவும், தெய்வம் தம்மைக் காக்கும் என்ற நம்பிக்கையுடனும் இந்நேர்த்திக்கடன் செலுத்தப்பட்டு வருகிறது.

### 4.3.11 ஆயிரங்கண் பானை எடுத்தல்

இது மாரியம்மன் கோயிலில் நிகழ்கின்றது. அம்மை நோயினால் பாதிக்கப்பட்டு மீண்டவர்கள் ஆயிரங்கண் பானை எடுக்கின்றனர். இதற்காகச் செய்யப்பட்ட பானைகளை வாங்கி கோயில் குளத்தில் குளித்து ஈரத்துணியுடன் தலையில் சுமந்து செல்வர். இக்குடத்திற்குள் சாமிக்கு அர்ச்சனை செய்யக்கூடிய தேங்காய், பூ, பழம், ஊதுபத்தி போன்றவை வைக்கப்படும்.

ஆயிரங்கண் பானை எடுப்பவர் விரதமிருந்து இதனைச் செய்வர். மேளதாளங்கள் முழங்க சாமி ஆட்டமாடி அருளுடன் தூக்கிச்செல்வர். “ஆயிரங்கண் பானையை காணிக்கையாகச் செலுத்தினால் குழந்தைகளுக்கு அம்மை நோய் வராது என நம்புவது தமிழ் மக்களிடையே காணப்படும் நம்பிக்கையாகும்”[27] என்பாரின் கூற்று அம்மை நோயுடன் ஆயிரங்கண் பானையைத் தொடர்புபடுத்தியிருப்பது இவண் கவனிக்கத்தகும்.

இப்பானையில் ஓட்டைகள் (சிறுசிறு துவாரங்கள்) ஆயிரம் இருப்பதில்லை. என்றாலும் ஆயிரம் கண்ணுடையாள் என்று அம்மனைப் பக்தியுடன் வணங்குதல், தன் உள்ளக்கிடக்கையால் அம்மனின் மீதுள்ள அளவற்ற பக்தியாலும் அவளுக்குச் செலுத்துகின்ற பானையை ஆயிரங்கண் பானை என அழைக்கின்றனர். தேவகோட்டை சமயபுர மாரியம்மன், அருணகிரிப்பட்டிணம் முத்துமாரியம்மன் கோயில்களில் இவை சிறப்புப் பெற்றுத் திகழ்கிறது என்பதனைக் களஆய்வில் காணமுடிந்தது.

### 4.3.12 சிதறு தேங்காய் உடைத்தல்

தேங்காய் இறைவனுக்குப் படைக்கப்படும் பூசைப் பொருட்களில் முதன்மையானதும், இன்றியமையாததும் ஆகும். இதனை இரண்டு வகைகளில் உடைக்கின்றனர். இரண்டாக உடைத்தல், சிதறியோடும்படி உடைத்தல். இதில் சிதறியோடும்படி உடைப்பது சிதறு தேங்காய் உடைத்தல் ஆகும்.

ஆண், பெண் என்ற இரண்டு வகைக் கோயில்களிலும் உடைக்கப்படுகிறது. நூற்றியெட்டு (108) தேங்காய் உடைப்பது வழக்கத்திலுள்ளது. வெளிநாடு செல்லுதல், அரசுப்பணி கிடைத்தல், நோய் நொடி தீர்த்தல், குடும்பத்தில் உள்ள துன்பங்கள் தீருதல் போன்றவை இந்நேர்த்திக்கடன் செலுத்துவதற்குக் காரணங்களாகின்றன என்பது களஆய்வுத் தகவல். “தேங்காய் எப்படி சிதறி ஓடுகிறதோ அதுபோன்று தம் துன்பங்களும்

சிதறி ஓடும்”[28] என்ற நம்பிக்கை இந்நேர்த்திக் கடனில் முதன்மை பெறுகிறது. “மனிதன் ஆன்மீக விடுதலை பெறுவதற்கு இடையூறாக அவனிடம் குடிகொண்டுள்ள முப்பெரும் தீய சக்திகளை அழிப்பதற்காகவே தேங்காய் சூறை போடப்படுகிறது”[29] எனும் சோமலேயின் கருத்து நோக்கத்தக்கது. ஆன்மீக வழியில் செல்வதற்குத் தீய சக்திகளை அழித்தல் வேண்டும் என்னும் பொருளில் கூறியிருப்பதும் ஈண்டு நோக்கத்தகும். தீய சக்திகளை அழித்தால் துன்பம் தீர்ந்து விடும் எனும் பொருளில் இங்கு கையாளப்பட்டுள்ளது.

### 4.3.13 விளைபொருட்களைச் செலுத்துதல்

சிற்றூர்களில் பிரதானத் தொழில் வேளாண்மை ஆகும். இத்தொழில் செழிக்க மழை வேண்டும். இதற்காக ஆண்டுதோறும் தம் தெய்வங்களை மகிழ்விக்கும் விதமாக விழா எடுப்பர். இவ்விழாவில் தம் நிலங்களில் விளைந்த விளைபொருட்களைத் தெய்வங்களின் முன்வைத்து நேர்த்தி செய்வர். இதன்மூலம் விவசாயம் செழித்து வளரும் என்ற காரணத்திற்காக இந்நேர்த்தி செய்யப்படுகிறது. “அறுவடையில் முதல் நெல்கட்டில் சிறிது எடுத்து அந்தந்த ஊர்த்தெய்வக் கோயிலில் கட்டுவர்”[30] எனும் சுசிலா கோபாலக்கிருஷ்ணன் கூற்றும் இதனை மெய்பிக்கக் காணலாம்.

தாம் வணங்கும் தெய்வங்களை மகிழ்வுபடுத்தி அதனைத் தம் வசப்படுத்துவதற்குத் தம்முடைய விளைபொருட்களையும் வைத்து வழிபடும் வழக்கம் பண்டைக் காலம் தொட்டு இருந்துள்ளது.

பருவமழை பொய்த்துவிட்டால் வேளாண்மை செய்ய இயலாது. எங்கும் வறட்சி, பஞ்சம் எற்பட்டு பல்வேறு நோய்நொடிகளும், வறுமையும் ஆட்கொண்டுவிடும். இந்நிலை ஏற்படாமலிருக்க இந்நேர்த்திக்கடன் செலுத்துவதாக நம்பப்படுகிறது.

“கண்ணங்கோட்டை முனிஸ்வரர் கோயிலில் இக்கோயிலுக்கான தனி வயல்வெளியில் விவசாயம் செய்யப்படுகிறது. இதில் விளையும் விளைபொருட்கள் அனைத்தும் அக்கோயிலுக்குச் சொந்தம்”[31] எனக் கூறுகிறார் வீரமுத்து. நெல் விளைவித்து அரிசியாக்கப்பட்டுப் பக்தர்களுக்கு அன்னதானமாக வழங்கப்படுகிறது. பிற பொருட்களாக இருப்பின் அதனை விற்று கோயிலுக்குச் செலவு செய்யப்படுகிறது.

மிளகாய், நெல், கேழ்வரகு போன்றவற்றினைத் தெய்வங்களுக்குப் படைத்து நேர்த்தி செய்வதனைக் கல்லங்குடி செல்லியம்மன் மாவிடுதிக்கோட்டை கருப்பர் போன்ற கோயில்களில் காணலாம்.

### 4.3.14 அலகு குத்துதல்

இந்நேர்த்திக்கடனை ஆண் மற்றும் பெண் இருபாலாரும் செய்கின்றனர். இதற்கு முப்பது நாள் விரதம் இருக்கின்றனர். வேல், சூலாயுதம் போன்ற அமைப்புடன் இரும்புக் கம்பிகளை இரண்டு கண்ணங்கள் மற்றும் நாக்கின் நுனிப்பகுதி, நெற்றி போன்ற இடங்களில் குத்திக் கொண்டு ஊர்வலம் சென்று கோயிலினை மும்முறை வலம்வந்து முறைப்படி அர்ச்சனை செய்து அலகு குத்தியவரால் மீண்டும் அது பிடுங்கப்படுகிறது.

அலகு குத்தி, பிடுங்கும் பொழுது இரத்தம் வருவதில்லை. வந்தாலும் விபூதி வைத்தவுடன் நின்றுவிடும். “குத்தும் பொழுதும் பிடுங்கும் பொழுதும் வலிப்பது இல்லை.”[32] ஏனெனில் “தெய்வங்களின் அருள்பெற்று இச்செயல் நடைபெறுவதால் தன்னிலை மறந்தவர்களாக இவர்கள் இருப்பதாலும், உடல் மறத்துப் போனது போல் இருக்கும்”[33] என்கிறார் கோயிலின் பூசாரி மாணிக்கம்.

இது உடல் வருத்தி செய்யப்படுகின்ற நேர்த்திக்கடன். கடுமையான நோய்களிலிருந்து மீண்டவர்கள் அதிகமாக இந்நேர்த்திக்கடன் செய்வதனைக் களஆய்வில் காணமுடிந்தது. இந்நிகழ்வுகள் சமயபுர மாரியம்மன், ஆற்றங்கரைக்

காளியம்மன், செட்டியா ஊருணி காளியம்மன், மடக்கரைக் காளியம்மன் போன்ற கோயில்களில் இந்நேர்த்திக்கடன் செலுத்துகின்றனர்.

### 4.3.15 காவடி எடுத்தல்

பெருந்தெய்வமான முருகன் கோயிலுக்கு காவடி எடுத்தல் பண்டைக் காலந்தொட்டு வழக்கத்திலுள்ளது. இன்று காவடி எடுத்தல் நிகழ்வுகள் சிறுதெய்வவழிபாட்டு முறைகளிலும் மெல்ல பரவிவருகின்றன.

வெள்ளூர் தர்ம முனிஸ்வரர் கோயிலில் ஆண்டுதோறும் நடைபெறும் திருவிழாவில் காவடி தூக்கிவருதல் நடைபெறுகிறது. திருவேகம்பத்தூரிலுள்ள தெப்பக்குளத்தில் நீராடி அங்கிருந்து காவடி தூக்கி வெள்ளூர் முனிஸ்வரர் கோயில் வந்தடைகிறது. இக்காவடி தூக்குபவர்கள் ஒருவேளை உணவுமுண்டு பதினைந்து நாட்கள் விரதமிருந்து காவடி எடுக்கின்றனர்.

காவடியிலுள்ள பொருட்களை மையமிட்டு அதன் பெயரும் மாற்றியமைக்கப்படுகிறது. பால்க்காவடி, பன்னீர்க்காவடி, புட்பக்காவடி, இளநீர்க் காவடி, சர்க்கரைக் காவடி, சந்தனக்காவடி, அக்னிக்காவடி, மஞ்சள்காவடி, மயில்க்காவடி எனப் பெயரிட்டு அழைக்கின்றனர். இக்கோயிலில் செலுத்தப்பெறும் காவடி பால், இளநீர், புட்பம் காவடிகளாகும். இவற்றினைக் கோயிலில் செலுத்தி முறையான வழிபாடு செய்து விரதத்தை முடிக்கின்றனர்.

### 4.3.16 புரவி எடுத்தல்

நாட்டுப்புறங்களில் காவல் தெய்வமாகவும், குலதெய்வமாகவும் வழிபடப்படும் ஐயனாருக்குச் செலுத்தப்படும் நேர்த்திக்கடன் புரவி எடுத்தல். புரவி என்பது குதிரை எனப் பொருள்படும். ஆதலால் இதனைக் குதிரையெடுப்பு என அழைப்பர். “கிராமங்களில் காணப்படும் ஐயனாருக்கு மண்ணால் ஆன குதிரைகள், யானைகள் செய்து வைத்து நேர்த்தி செய்வது வழக்கமாக உள்ளது”[34] என்பர். இவ்வழக்கம் ஐயனார் கோயில் தவிர்த்துப் பிற

கோயில்களுக்கு செலுத்துவதில்லை என்பதனைக் களஆய்வின் வழிக் காணமுடிந்தது.

"குதிரையெடுப்பு விழாவில் தொடக்கம் முதல் முடிவு வரை முக்கியப் பங்காற்றுபவர்கள் 'குயவர்' இனத்தவராவர்."[35] மண்ணால் ஆன குதிரைகளைச் செய்வதும், அதற்கு வண்ணம் பூசுவதும், கண் திறந்து உயிர் கொடுப்பதும், கோயிலில் வைத்துப் பூசை செய்வதுமாக அனைத்துப் பணிகளையும் குயவர்கள் செய்கின்றனர்.

ஐயனாருக்குக் குயவர்கள் உறவுடையவர்கள் எனப் புராணம் சொல்வதும்; இப்பகுதி சிற்றூர்களில் இவ்விழாவில் குயவர்கள் மிகுதியாக செயல்படுவதும் ஈண்டு நோக்கத்தக்கதாகும். பெரும்பான்மை ஐயனார் கோயில்களில் குலாளர்கள் பூசை செய்பவர்களாக இருக்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது. இந்நேர்த்திக்கடனில் மண்ணாலான குதிரைகள், அம்மன், கருப்பர் உருவங்கள், தவழும் பிள்ளை, காளைக்கன்று போன்றவையும் நேர்த்தி செய்யப்படுகின்றன.

சித்தானூர் பொய்சொல்லா மெய்யர், நல்லாங்குடி வேம்புடைய ஐயனார், சுக்கிரபட்டி வேலாயுதமூர்த்தி ஐயனார், இலங்குடி வேலாயுதம் ஐயனார், கும்மங்குடி கொட்டுடைய ஐயனார், டி.சிறுவனூர் கட்டாயுதமுடைய ஐயனார், நாச்சாங்குளம் அன்புக்கணக்கு ஐயனார் ஆகிய கோயில்களில் இந்நேர்த்திக்கடன் செலுத்தப்படுகிறது. நோய் நொடி தீர்த்தல், குடும்ப வளமை, வேலைவாய்ப்பு, குழந்தைப் பாக்கியம் போன்றவற்றிற்கான காரணகாரியங்கள் இந்நேர்த்திக்கடன் நம்பிக்கைகளாகக் களத்தில் காணமுடிந்தது.

சித்தானூர் "ஐயனார் கோயிலுக்குக் குதிரையெடுக்கும் அவ்வூரார் கோயிலில் இருந்து பிடிமண் எடுத்துச் சென்று குதிரை செய்யும் வேளாளர்களிடம் கொடுப்பர்."[36] இது இதன் முதல் பணி ஆகும். இவை

நிகழ்ந்தபின் நேர்த்திக்கடன் குதிரையெடுப்பவர்கள் வேளாளர்களிடம் சென்று பணம் கொடுத்து குதிரை செய்வர்.

இக்குதிரைகள் செய்யப்பட்டு, வர்ணம் பூசி அழகுபடுத்தப்பட்டு டி.சிறுவனூர் பொட்டலில் வைத்திருப்பர். திருவிழா நாளன்று சித்தானூரிலிருந்து ஊரார் சார்பாகவும், நேர்த்திக்கடன்காரர்களும் சிறுவனூர் சென்று குதிரைகளுக்குக் கம்புகள் கட்டி (தூக்குவதற்கு வசதியாக) தூக்கி வருவர். இதில் கண் திறத்தல் நிகழும். ஊராரின் சார்பில் கொண்டு செல்லும் கோழி விரல் நுனியில் வெட்டி இரத்தத்தினை அனைத்துக் குதிரைகளுக்கும் வைத்து வேளாளர்கள் கண்திறப்பர்.

முதலில் ஊர்க்குதிரையும், அதனைத் தொடர்ந்து நேர்த்திக் கடன் குதிரைகளும், அதன்பின் காளைக்கன்று, தவழும் பிள்ளை, பிறதெய்வ உருவங்களும் ஒன்றன்பின் ஒன்றாக வந்து சேரும்.

- ❖ காளைக்கன்று நேர்த்தி செய்வது, வீட்டிலுள்ள காளை மாடுகள், பசு மாடுகள் நோயினால் பாதிக்கப்படும் பொழுதும் இந்நேர்த்திக்கடன் செலுத்துகின்றனர். மேலும் வீட்டில் கால்நடைகள் பெருக வேண்டும் என்பதும் இதன் குறியீடாக இருக்கின்றது.
- ❖ தவழும் பிள்ளையை நேர்த்திக்கடன் செய்வது, "குழந்தை இல்லாத தம்பதியர் குழந்தை பிறந்தவுடன் இந்நேர்த்திக்கடன் செலுத்துகின்றனர்."[37]
- ❖ கருப்பர், காளி போன்ற மண்சிலைகள் தம்மைக் காத்து அருளவேண்டும் என்பதற்காக நேர்த்திக்கடன் செய்யப்படுகிறது. இவை அந்தந்த (காளி, கருப்பர்) கோயில்களில் திருவிழா அன்று நேர்த்திக்கடன் செய்யப்படும்.

#### 4.3.17 உயிர்ப்பலியிடுதல்

சிறுதெய்வ வழிபாட்டு நேர்த்திக்கடன்களில் தலையாய இடம்பெறுவது உயிர்ப்பலியிடுதல் ஆகும். ஆடு, கோழி, சேவல் போன்றவை உயிர்பலியிடும்

உயிரினங்கள் ஆகும். துன்பம் நீங்க, தம் வீட்டிலுள்ள உயிரினங்களைக் காவு கொடுத்துத் தம்மை காத்துக்கொள்ளச் செய்யும் உளவியல் பாங்காகவும் இதனைக் கொள்ளலாம். ஏனெனில் மனிதனின் உயிர் பாதுகாக்கப்படுவதற்கு மற்றொரு உயிர் பலி கொடுக்கப்பட்டு, தெய்வம் ஏற்று தம்மைக் காத்தருளும் என்ற நம்பிக்கையைக் களஆய்வில் காணநேர்ந்தது. இந்நிகழ்வு சங்க காலம் தொட்டு வழக்கத்தில் இருந்துள்ளது என்பதனைச் சங்கப் பாடல்களும் பதிவு செய்துள்ளன.

**“சிறுமறி கொன்று இவள் நறுநுதல் நீவி” (குறு.362:4)**
**“மறிக்குரல் அறுத்து திணை பிரப்பு இரிஇச்” (குறு.263:1)**
**“வெறியென உணர்ந்த உள்ளமொடு மறியறுத்து” (நற்.47:9)**
**“வளநகர் சிலம்பப்பாடி பலிகொடுத்து**
**துருவச் செந்தினை குறுதியொடு தூஉய்” (அக.22:9-10)**

எனும் பாடலடிகள் உயிர்ப்பலியிடும் முறையினைச் சுட்டிக்காட்டுகின்றன.

களஆய்விற்குச் சென்ற பல இடங்களில் கிடாயும், சில இடங்களில் சேவலும், கோழியும் பலியிடப்படுகிறது. தாழையூரிலுள்ள உதிரக்காளிக்கும், கோட்டூரிலுள்ள சமுத்திரக்காளிக்குப் பெட்டைக்கோழி மட்டும் பலியிடப்படுகிறது. பெரும்பாலும் பெண் உயிரினங்கள் பலியிடப்பெறுவதில்லை. ஏனெனில் பெண் வளமையின் குறியீடாகப் போற்றப்படுகிறவள். பெண் பலி செய்ததனால் பெரும்பழி ஏற்றான், நன்னன் என்பது வரலாறு. இதன் பொருட்டுப் பெண் உயிரினங்கள் பலியிடப்பெறுவது குறைவாக இருப்பினும் காலப்போக்கில் இப்பலியும் பல இடங்களில் தவிர்க்க முடியாத உயிர்ப்பலியிடுதலாக உள்ளது.

முனிஸ்வரர் கோயிலுக்குச் சில இடங்களில் உயிர்ப்பலி கொடுப்பதில்லை. காரணம் “அவரது பெயரில் ஈஸ்வரன் என்ற பட்டம் பெற்றுள்ளார் எனக் கூறுகின்றனர்”[38] என்றாலும் பல இடங்களில் உயிர்ப்பலியிடப்படுகிறது.

சிவந்தான்கோட்டை நல்ல முனிஸ்வரருக்கு உயிர்ப்பலி இல்லை. முனிஸ்வரர் முன்னோடியாக உள்ள கருப்பருக்கு உயிர்ப்பலியிடப்படுகிறது.

தேவகோட்டை பாண்டி முனிஸ்வரருக்கு உயிர்ப்பலியிடுவதில்லை. கண்ணங்கோட்டை சங்கரபதி முனிஸ்வரருக்கு உயிர்ப்பலி கொடுக்கப்படுகிறது.

வெள்ளூர் தர்மமுனிஸ்வரருக்கு உயிர்ப்பலியிடப்படுகிறது. ஒவ்வொரு இடத்திலும் சில காரண காரியங்களை முன்வைத்து முரண்பாட்டை தோற்றுவித்துள்ளனர்.

அம்மன் கோயில்களில் பெரும்பான்மை உயிர்ப்பலி கொடுக்கப்படுகிறது. ஐயனார் கோயில்களில் உயிர்ப்பலி கொடுப்பதில்லை. அதன் முன்னோடித் தெய்வமாக விளங்கும் கருப்பருக்கு பலி கொடுக்கப்படுகிறது.

"உயிர்ப்பலி இடும் நேரங்களில் ஐயனாரை திரைச்சீலையால் மூடி மறைக்கப்படும்"[39] நிகழ்வுகளும் நடைபெறுகின்றன. அனைத்துக் கருப்பர் கோயில்களிலும் உயிர்ப்பலியிடப்படுகிறது. சமயங்களின் தாக்கத்தால் உயிர்ப்பலியில் முரண்பாடு தோன்றியிருக்கலாம். வழிபாட்டின் ஒவ்வொரு நிலையிலும் சமயங்களின் தாக்கம் ஊடுருவி உள்ளதனை இந்நிகழ்வுகள் நிலைநிறுத்துகின்றன.

### 4.4 தொகுப்புரை

- ❖ வழிபாட்டின் தொடக்கம் அச்சமும் குற்றமும் அவை சார்ந்த நம்பிக்கையும் நிலைக்களனாக உள்ளன.
- ❖ வாழ்வியலின் ஒவ்வொரு அசைவிற்கும் தெய்வத்தின் அருள் காரணம் என்ற நம்பிக்கை பரவலாகக் காணப்படுகிறது.
- ❖ திருமணம், பிள்ளைப்பேறு போன்றவை முக்கிய காரணிகளாகத் திகழ்கின்றன.
- ❖ பூசாரிகளிடம் திருநீறு பெறுவதும், நல்வாக்குக் கேட்பதும் தெய்வம் நேரில் வந்து சொல்வதாக நம்புகின்றனர்.

- ❖ பல்லி சொல் கேட்டலும், சீட்டெழுதி குறைகளைத் தெரிவித்தலும் இவ்வட்டாரத்தில் காணப்படுகின்றன.
- ❖ தீட்டுக் காலங்களில் கோயிலுக்கும், கோயில் சார்ந்த குளத்திற்கும் சென்றால் தீங்கு நேரிடுமென நம்புகின்றனர்.
- ❖ தெய்வங்களுக்குப் படைக்கப்படும் பொருட்கள் சேதம் அடைந்தால் துன்பம் வரும் என்ற நம்பிக்கை காணப்படுகிறது.
- ❖ சில கோயில்களில் படைக்கப்படும் உணவுகளைப் பெண்கள் சாப்பிடக் கூடாது என்ற நம்பிக்கை காணப்படுகிறது.
- ❖ தம் வாழ்வில் ஏற்படும் துன்பம், துயரம், நோய்நொடி தம் தெய்வத்தை வணங்கினால் அதிலிருந்து தாம் மீண்டு வரமுடியும் என்ற நம்பிக்கை காணப்படுகிறது.
- ❖ களவு, பொய் சொல்லுதல் போன்ற குற்றங்களுக்குத் தெய்வத்தை நாடும் வழக்கம் களஆய்வில் காணமுடிந்தது.
- ❖ சமயங்களின் தாக்கத்தால் சில இடங்களில் நம்பிக்கையில் மாறுபாடு (சீட்டு எழுதுதல்) ஏற்பட்டிருக்கக் காணலாம்.
- ❖ ஆணாதிக்கச் செயலால் சில கோயில்களில் பெண்கள் சாப்பிடக்கூடாது என்ற நம்பிக்கை சார்ந்த சூழலை ஏற்படுத்தி உள்ளனர்.
- ❖ தெய்வங்களுக்குச் செய்யும் கைம்மாறு என்று நேர்த்திக்கடன் பொருள் கொள்ளப்படுகிறது.
- ❖ இவ்வழக்கம் சங்க காலம் தொட்டு காணப்படுகிறது.
- ❖ அம்மனுக்கு மாவிளக்கும், அக்னிசட்டி எடுத்தலும் பிரதானமாகக் கருதப்படுகிறது.
- ❖ நோய்நொடிகள் தீர இந்நேர்த்திக்கடன் செலுத்தப்படுகிறது.
- ❖ பிள்ளைப்பேறு பெற்றோர் முடி இறக்கிக் கரும்பால் தொட்டில் கட்டுகின்றனர்.

- பிள்ளைப்பேறு இல்லாதோர் மரக்கட்டையாலும், துணியாலும் தொட்டில் கட்டிச் செல்கின்றனர்.
- தீ மிதித்தல் நேர்த்திக்கடன்களில் வன்மையானதாக கருதப்படுகிறது.
- கோயிலுக்குத் தங்கம், வெள்ளி, பணம் மற்றும் உபயோகப் பொருட்களாகவும் காணிக்கை செலுத்தி நேர்த்தி செய்கின்றனர்.
- துன்பங்கள் சிதறி ஓடுவதற்குச் சிதறு தேங்காய் உடைக்கின்றனர் என்பதாக நம்பப்படுகின்றது.
- விளை நிலங்களின் விளைபொருட்கள் தம் சிற்றூர்த் தெய்வங்களுக்குப் படைக்கின்றனர்.
- அலகு குத்துதலும், காவடி எடுத்தலும் நேர்த்திக் கடன்களின் சில கூறுகளாகக் காணப்படுகின்றன.
- ஐயனார் கோயில்களுக்குப் புரவி (குதிரை) எடுத்து நேர்த்தி செய்கின்றனர்.
- சிறுதெய்வங்களுக்கு ஆடு, கிடாய், கோழி, சேவல் போன்றவை உயிர்ப்பலியிடப்படுகிறது.

## சான்றெண் விளக்கம்

1. க.அறிவுநம்பி, நாட்டுப்புறக் களங்கள், ப.84.
2. சுசிலா கோபாலகிருஷ்ணன், நாட்டுப்புற நம்பிக்கைகள், ப.45.
3. மேலது, ப.40.
4. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.105
5. சு.சண்முகசுந்தரம், நாட்டுப்புற இயல், ப.167.
6. தகவல்: சோமசுந்தரம், தேவகோட்டை, நாள்: 02.06.2016.
7. ஆ.சிவசுப்பிரமணியன், மந்திரமும் சடங்குகளும், ப.34.
8. தகவல்: பெரியகருப்பன், ஈகரை, நாள்: 10.05.2016.
9. தகவல்: இராமன், வெட்டிவயல், நாள்: 12.04.2016.
10. தகவல்: சரசுவதி, இராம்நகர், நாள்: 07.05.2016.
11. தகவல்: வீரமுத்து, கண்ணங்கோட்டை, 06.06.2016.
12. தகவல்: காளியப்பன், ஈகரை, நாள்: 12.05.2016.
13. தகவல்: காயாம்பு, மோயன்வயல், நாள்: 01.05.2016.
14. தகவல்: இராமாயி அம்மாள், கண்டியன்புதுவயல், நாள்: 18.05.2016.
15. தகவல்: பெத்தபெருமாள், மஞ்சனி, நாள்: 07.06.2016.
16. தகவல்: ஜெயா, கண்டியன்புதுவயல், நாள்: 18.05.2016.
17. சுசிலா கோபாலகிருஷ்ணன், நாட்டுப்புற நம்பிக்கைகள், ப.40.
18. மேலது, ப.41.
19. சு.வெங்கடேசன், ஆய்வு நோக்கில் நாட்டுப்புற நம்பிக்கைகள், ப.40.
20. தகவல்: சுப்பையா, கண்டியன்புதுவயல், நாள்: 18.05.2016.
21. கழகத் தமிழ் அகராதி, ப.349.
22. கலைக்களஞ்சியம், தொகுதி-9, ப.308.
23. தகவல்: அம்பிகா, இராம்நகர், நாள்: 07.05.2016.
24. கண்ணதாசன், இறைவனின் நீதிமன்றங்கள், ப.5.
25. இணையதளம் : http//www/keetru
26. தகவல்: மீனாள், அருணகிரிபட்டணம், நாள்: 07.06.2016.
27. கோ.தங்கச்செல்வி, நாட்டுப்புறப் பெண் தெய்வங்கள் (மு.ப.ஆ.), ப.256.
28. அருண்.நடராசன், இந்துமத நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களும், ப.51.
29. சோமலெ.தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், ப.50.
30. சுசிலா கோபாலகிருஷ்ணன், நாட்டுப்புற நம்பிக்கைகள், ப.107.
31. தகவல்: வீரமுத்து, கண்ணங்கோட்டை, நாள்: 06.06.2016.

32. தகவல்: மாணிக்கம், வெள்ளூர், நாள்: 22.04.2016.
33. தகவல்: மாணிக்கம், வெள்ளூர், நாள்: 22.04.2016.
34. பி.எல்.சாமி., தமிழ் இலக்கியத்தில் தாய்த்தெய்வ வழிபாடு, ப.25.
35. இரவிக்குமார், குதிரையெடுப்பு, ப.13.
36. தகவல்: இராமலிங்கம், சித்தானூர், நாள்: 07.03.2016.
37. தகவல்: சொர்ணவள்ளி, சித்தானூர், நாள்: 07.03.2016.
38. தகவல்: நடராஜன், சிவந்தான்கோட்டை, நாள்: 11.03.2016.
39. தகவல்: பாண்டி, நாச்சாங்குளம், நாள்: 05.06.2016.

## இயல்-5

## மரபும் மரபு மாற்றமும்

5.1 வழிபாடு

5.1.1 வழிபாட்டுமுறை

5.2 உருவ அமைப்பு

5.2.1 வழிபாடு செய்வோர்

5.2.2 நேர்த்திக்கடன்

5.3 திருவிழாக்கள்

5.4 ஆடை அலங்காரம்

5.5 கட்டிட அமைப்பு

5.6 தொகுப்புரை

## இயல்-5

## மரபும் மரபு மாற்றமும்

மனித இனம் தோன்றிய காலத்திலிருந்து வழிபாடும், வழிபாட்டு மரபுகளும் தோன்றிவிட்டன. இதில் சிறுதெய்வம் என அழைக்கப்படும் நாட்டுப்புற வழிபாடு தமிழர்களின் பண்பாட்டு மரபுகளை மையப்படுத்தி அமைவதாகும். தொடக்கக் காலத்திலிருந்து வழிபாட்டு மரபுகள், சடங்குகள், வழிபாட்டு முறைகள் போன்றவை கால மாற்றம், தலைமுறை இடைவெளி, நாகரிக வளர்ச்சி போன்ற காரணங்களால் ஒவ்வொரு தளத்திலும் பல்வேறு மாற்றத்தை ஏற்படுத்தியுள்ளன என்பதனைக் களஆய்வுத் தளத்தில் காணமுடிந்தது. பல்வேறு மாறுபட்ட சூழ்நிலைகளிலும் இவ்வழிபாடானது பல்வேறு படிநிலைகளைத் தாண்டி அடுத்த கட்டத்திற்குச் சென்றிருக்கிறது. மக்களின் மனதில் இவ்வழிபாட்டு படிநிலைகள் நிலைத்து நிற்பதற்கு இவை சார்ந்த நம்பிக்கைகள் அடித்தளமாக அமைகின்றன.

**“விருந்தேதானே புதுவது கிளந்த யாப்பின் மேற்றே” (தொல்.231)**
**“பழையன கழிதலும் புதியன புகுதலும்**
**வழுவல கால வகையினானே” (நன்.462)**

எனத் தொல்காப்பியமும், நன்னூலும் பழமைக்கு வழிவிட்டுப் புதுமைகள் தோன்றவது இயல்பே எனப் பதிவு செய்திருக்கின்றன.

பழமையும், புதுமையும் தோன்றுவது காலத்தின் கட்டாயம் ஆகும். இந்நிகழ்வு நாட்டுப்புற வழிபாட்டு நிலைகளிலும் நிலை கொண்டிருக்கிறது. வழிபாட்டு முறை, உருவ அமைப்பு, பூசை செய்வோர், நேர்த்திக்கடன், திருவிழா, ஆடை அலங்காரம், கட்டிட அமைப்பு போன்ற தளங்களில் மாற்றங்கள் நிகழ்ந்திருக்கின்றன. வழிபாட்டு நிலையில் மரபும், மரபு மாற்றம் குறித்துச் சேகரிக்கப்பட்ட தரவுகளின் அடிப்படையில் இவ்வியல் அமைகிறது.

## 5.1 வழிபாடு

நாட்டுப்புற வழிபாட்டில் தொடக்ககால வழிபாடு என்பது இயற்கை வழிபாடாகும். நீர், சூரியன், மரம் போன்றவை இவ்வழிபாட்டின் குறியீடுகளாகும். இதற்கடுத்த நிலையில் வடிவமற்ற கற்களை ஊன்றி வழிபாடு செய்தனர். இவ்வழிபாடானது இயற்கை வழிபாட்டிலிருந்து வேறுபட்டு அடுத்த நிலைக்கு இட்டுச் சென்றது.

அடுத்த கால கட்டங்களில் ஆயுதம் (வேல், கத்தி, சூலாயுதம்), கற்களால் உருவாக்கப்பட்ட சிலை வடிவங்கள் என வழிபாட்டின் வளர்ச்சி நிலை ஏற்பட்டது. “தெய்வங்களின் வடிவமும் குணமும் அவை சார்ந்த சமூகத்தின் தேவைகளை யொட்டி அமைந்தவை தான்”[1] எனும் தொ.பரமசிவத்தின் கருத்து நோக்கத்தக்கதாகும். சமூகத்தின் மாற்றம் வழிபாட்டிலும் ஏற்படுத்தியது.

பண்டைக்காலச் சமூகம் வேளாண்மைச் சமூகமாக காட்சிப்படுத்தப்பட்டது. வேளாண்மை பிரதானத் தொழிலாக இருந்தாலும் வேட்டையாடுதல் போன்ற இன்னபிற தொழில்களும் வழக்கத்தில் இருந்தன என்பதனைத் தொல்காப்பியமும் சங்க இலக்கியங்களும் பதிவு செய்திருக்கின்றன. தொழில் சார்ந்த வளர்ச்சிக்கு மழையும், பாதுகாப்பும் தேவைப்படுகிறது. இத்தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள மனிதன் தன்னை மீறிய சக்திகளான இயற்கையை வழிபட்டு பாதுகாப்பை ஏற்படுத்திக் கொள்கிறான். இதன் விழைவு நீர், சூரியன், பூமி, மரங்கள் வழிபடு தெய்வங்களாகக் கட்டமைக்கப்பட்டன.

வாழ்வியலின் அடிப்படைக் காரணிகளாக மேற்சொன்னவை விளங்குகின்றன. இவற்றை வழிபட்டு வந்த சமூகம் காலத்திற்கேற்ப பல்வேறு

மாற்றங்களைக் கொண்டு வந்திருக்கிறது. இதனை வழிபாட்டின் வளர்ச்சிநிலை எனக் கட்டமைக்கலாம்.

### 5.1.1 வழிபாட்டுமுறை

பெருந்தெய்வங்களுக்கு வழிபாட்டுமுறைகள் ஆகம வேதங்களால் நிர்ணயம் செய்யப்படுகிறது.. ஒவ்வொன்றிற்கும் கட்டுப்பாடுகள் உண்டு. நாட்டுப்புற வழிபாட்டு முறைகளுக்கு எவ்விதமான கட்டுப்பாடு விதிக்கப்படவில்லை. “சிறுதெய்வங்கள் சிற்றூர்களைக் குறிக்கும் நாட்டுப்புறங்களில் அமைந்திருப்பதால் அவற்றை நாட்டுப்புறத் தெய்வங்கள் என்று கூறுவர். இவை ஆகம வழிபாடுகளுக்கு உட்படாதவை குறிப்பிட்ட காலமுறைப்படி வழிபாடுகளையும், விழாக்களையும் கொண்டிராதவை”[2] என்று மு.பாண்டி நாட்டுப்புறத் தெய்வங்களின் வழிபாட்டு முறைகளைப் பதிவு செய்திருக்கிறார். இந்நிகழ்வுகள் சிறுதெய்வ வழிபாட்டின் மரபுகளாக கருதப்படினும் இன்றைய காலகட்டத்தில் மிகப்பெரிய மாற்றங்களை வழிபாட்டில் காணமுடிகிறது.

சிவந்தான்கோட்டை நல்ல முனிஸ்வரருக்கு உயிர்ப்பலி கொடுப்பதில்லை. நாட்டுப்புறத்தெய்வங்கள் உயிர்ப்பலி பெறும் தெய்வங்களாகப் பதிவு செய்யப்பட்டிருப்பினும் பல இடங்களில் இன்றைய சூழலில் நிகழ்த்தப்படுவதில்லை. தேவகோட்டை பாண்டி முனிஸ்வரர், சித்தானூர் பொய்சொல்லா மெய்யர், இளங்குடி வேலாயுதம் அய்யனார், கும்மங்குடி கொட்டுடைய அய்யனார், மஞ்சனி காடேரியம்மன், தேவகோட்டை ரேணுகாதேவி முத்துமாரியம்மன், இராம்நகர் நாகாத்தம்மன் போன்ற கோயில்களில் உயிர்ப்பலி கொடுப்பதில்லை. “பெயரில் ஈஸ்வரன் என்ற பட்டம் உள்ளதால் அவருக்கு அசைவம் ஆகாது. அதனால் நாங்கள் உயிர்ப்பலி கொடுப்பதில்லை”[3] என்று கூறுகிறார்.

சிற்றூர்த் தெய்வங்களின் பெயர்கள் பெருந்தெய்வப் பெயர்களில் இருந்து மாறுபட்டாதாகவே இருக்கும். முனியாண்டி எனும் தெய்வம் முனிஸ்வரர் என மாற்றம் பெற்றுள்ளது. இந்நிகழ்வு வைதீக சமயத்தின் தாக்கம். பிராமணர்களால் திட்டமிடப்பட்டுத் தன் சமயம் சார்ந்த பெயர்களையும் தம்முடைய விருப்பத்தின்படி வழிபாட்டு முறைகளையும் சிறுதெய்வ வழிபாட்டிற்குள் புகுத்தியதன் விளைவு இன்று பல தெய்வங்களில் உயிர்ப்பலி இல்லாமல் போனதற்குக் காரணம் ஆகும்.

"எனக்கு விபரம் தெரிஞ்சு முன்னாடி எல்லாம் ஆடு கோழி வெட்டுவோம். இப்பத்தான் வெட்டுறது இல்லை"[4] என தகவலாளி தங்கமாரியம்மாள் முன் வைக்கும் செய்தி ஆரம்ப காலங்களில் மேற்சொன்ன கோயிலில் உயிர்ப்பலி நடைபெற்று இருக்கிறது என்பதனை உறுதி செய்கிறது.

காலமாற்றத்தால் சமயங்களின் ஊடுருவல், சமயச் சடங்குகளைப் பின்பற்றுதல், வைதீகத்தை நம்புதல், பிராமணர்களின் வடமொழி மந்திரத்தை ஓதச் செய்தல் போன்ற காரணங்களால் உயிர்ப்பலி விலக்கப்பட்டுள்ளது. குறிஞ்சிநில மக்களின் தெய்வமான முருகன் இன்று மேல்தட்டுத் தெய்வமாக மாற்றப்பட்டு உள்ளதையும் கவனத்தில் கொள்ளவேண்டும்.

வேலன் வெறியாட்டில் மறிக்குரல் அறுத்து ஆட்டுக்குட்டியைப் பலிகொடுத்து தேனும், தினையும் கலந்து வழிபட்டதனைச் சங்க இலக்கியம் எடுத்துக் காட்டுகிறது. இன்று முருகன் கோயில்களில் ஆட்டுக்குட்டி அறுப்பதில்லை. மேல்நிலையாக்கம் பெற்றுள்ளது. இதேபோல் முல்லைநில மக்களின் தெய்வமான மாயோன், மருதநில மக்களின் தெய்வமான இந்திரன் போன்ற தெய்வங்களும் மேல்நிலையாக்கத்தின் பால் நிற்கின்றன.

வழிபாட்டு முறைகளில் வைதீக முறையைக் கைக்கொண்டதன் காரணமாகச் சிற்றூர்த் தெய்வங்களின் பண்பாட்டு மரபுகள் அழிந்து

மாற்றமடைந்து கொண்டிருக்கின்றன. இம்மாற்றம் மேல்நிலையாக்கத்தை மையப்புள்ளியாகக் கொண்டு முன்னேறிச் செல்கிறது.

தேவகோட்டை மாவடிக்கருப்பருக்கு மார்கழி மாதம் முப்பது நாளும் சிறப்பு வழிபாடு, கள்ளாம்பிரம்புக் காளியம்மனுக்குத் தினந்தோறும் வழிபாடு செய்யப்படுகிறது. கூத்தாடி முத்துப்பெரியநாயகி அம்மனுக்குத் தினமும் இரண்டு கால வழிபாடு, இளங்குடி ஐயனாருக்கு தினமும் நான்குகால வழிபாடு, தேவகோட்டை சமயபுரமாரியம்மன், அருணாகிரிப்பட்டினம் முத்துமாரியம்மன் வழிபாடு சார்ந்த இச்செய்திகள் நாட்டார் தெய்வங்கள் மாற்றத்தை நோக்கி சென்று கொண்டிருக்கின்றன என்பதனைக் காட்டுகின்றன. “சிறுதெய்வ வழிபாடு ஓர் வரையறைக்கு உட்படாதது. குறிப்பிட்ட பூசைமுறைகள் இல்லை. நேரம் காலம் பார்க்காமல் நினைத்த நேரத்தில் வழிபடக்கூடியது”[5] எனும் செய்தியின் அடிப்படையில் எந்த வரையறைக்கும் உட்படாத சிற்றூர்க்கோயில் பூசைகளில் தற்காலத்தில் மாற்றம் நிகழ்ந்து இருக்கிறது. இவையும் வைதீக சமயத்தின் தாக்கம் எனக் கருதலாம். பொருளாதார மாற்றம் ஒரு காரணமாகவும் அமையலாம். பொருளாதாரத்தில் பின்தங்கிய காலத்தில் இருந்த பூசைமுறைகள் பொருளாதார வளர்ச்சியின் பொழுது மாற்றம் பெற்றிருக்கலாம். “தெய்வங்களுக்கு உயிர்ப்பலி கொடுப்பது தெய்வக்குற்றங்கள் விலகி நன்மைகள் பெருகும் என்ற அதீத நம்பிக்கை ஆகும்”[6] என்பர்.

இன்றைய காலச் சூழலில் உயிர்ப்பலி கொடுத்தலும், பூசை முறைகளில் மாற்றமும் ஏற்பட்டுள்ளன என்பது களஆய்வுத் தகவல் ஆகும். “சிறுதெய்வம் காலப்போக்கில் மக்களின் வழிபாட்டுக் கூட்டம், வருமானம், வழிபடுமுறை மாற்றம் போன்ற காரணங்களால் பெருந்தெய்வ நிலைக்கு உயர்த்தப்படுவதுமுண்டு.”[7] தேவகோட்டை வட்டாரக் கள ஆய்வுக் கோயில்கள் பெருந்தெய்வ நிலைக்கு உயர்த்தப்படாவிட்டாலும் மரபின் மாற்றங்களை

உள்வாங்கிக் கொண்டிருக்கின்றன. என்பது தெளிவாகும். “அந்தகாலத்தில் இருந்த மாதிரி இப்பொழுதெல்லாம் இல்லை. காலம் மாறிப்போய்விட்டது. அப்பொழுது என்றைக்கோ ஒருநாள் சாம்பிராணிப் புகைப்போடுவோம் ஆனால் இப்ப பார்த்திங்கன்னா தினமும் பூசைபன்றோம்”[8] எனும் இத்தகவல் பூசையின் மாற்றங்களை எடுத்துக்கூறி நிற்கிறது. சிற்றூர்த் தெய்வங்கள் என்ற மையப் பொருளில் மாற்றமில்லை. ஆனால் நிலையிலும் அது சார்ந்த மற்ற நிகழ்வுகளிலும் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன.

### 5.2 உருவ அமைப்பு

ஆரம்ப காலத்தில் இயற்கையை மனிதன் வழிபட்டான். பின் ஒவ்வொரு காலகட்டத்திலும் வழிபடு தெய்வத்தின் உருவங்களும் மாறுபடத் தொடங்கின. இயற்கையும் இயற்கை சார்ந்த வழிபாடு தமிழர்களின் மரபாகும். அதனைத் தொடர்ந்து கல்ஊன்றி வைத்து வழிபடத்தொடங்கினர். இதனைச் சங்க இலக்கியம் ‘நடுகல் வழிபாடு’ எனக் கூறியிருக்கிறது. இவ்வழிபாடு ஆரம்பகால நிலையாக இருந்தது. “காலப்போக்கில் இயற்கைக்கு உருவம் கொடுத்து வழிபடத் தொடங்கினர். இவ்வாறு மக்களிடையே உருவ வழிபாடு தோற்றம் பெற்றிருக்க வேண்டும்.”[9] உருவமே இல்லாமல் மனதால் நினைத்து வழிபட்ட மரபு பிற்காலத்தில் தன் மனத்தில் எண்ணிய எண்ணத்தை உருவமாக மாற்ற முயற்சிக்கின்றனர்.

“மனித வாழ்வில் எவ்வெவ்நிலைகளில் தெய்வம் உறுதுணையாக இருக்க வேண்டும் என்று பழங்கால மனிதன் எண்ணினானோ அவ்வவ்நிலைகளில் தெய்வப் பண்புகளுக்கு உருவம் கொடுத்து வழிபடத் தொடங்கினான்.”[10]




மேற்கண்ட படிநிலைகளில் உருவ வழிபாட்டு முறைகளில் மாற்றம் நிகழ்ந்துள்ளது. மக்களின் தெய்வங்களெல்லாம் இந்த மக்களைப் போலவே ஏதேனும் ஓர் ஆயுதம் ஏந்தி காவலுக்குரிய வயல்களின் ஓரத்திலும், கண்மாய்க் கரையிலும், ஊர் மந்தையிலும், ஊர் எல்லையிலும் அயராது கண் விழித்து நிற்கின்றன. இவை உட்காருவதும் கண் மூடுவதும் கிடையாது. இந்த மக்களைப் போலவே இத்தெய்வங்களும் முறுக்கிய மீசையும், வரிந்து கட்டிய வேட்டியுமாக சட்டையில்லாமல் கள்ளும், கறியும் உண்பவையாக வாழ்கின்றன என்கிறார் தொ.பரமசிவன்.

மக்களின் தெய்வங்கள் மக்களைப் போல உருவம் கொண்டு அவர்கள் பயன்படுத்தும் ஆயுதங்களை அத்தெய்வங்கள் ஏந்தியும் இருப்பதனை இன்றளவும் காணமுடிந்தாலும் கள ஆய்வுக் கோயில்களின் வரலாற்றைப் புரட்டிப் பார்த்தால் உருவமற்ற வழிபாடு வழக்கத்தில் இருந்துள்ளது என்பது புலனாகிறது.

தேவகோட்டை சிலம்பனி ஊருணியில் மேல்கரையிலுள்ள மாவடிக்கருப்பர் ஆலயம் ஆரம்ப காலத்தில் கல் மட்டும் ஊன்றப்பட்டு வழிபடப்பட்டுள்ளது.

இன்றைய காலக்கட்டத்தில் கையில் அரிவாள் ஏந்தி முறுக்கு மீசையுடன் கூடிய கருப்பர் சிலை வழிபாட்டிற்கு வைக்கப்பட்டுள்ளது.

இதேபோல் வேம்புடைய அய்யனார், சுடலைமாடன், மஞ்சனப்பேச்சி, கட்டாயுதமுடைய அய்யனார், பாண்டி முனிஸ்வரர், கொட்டுடைய அய்யனார், சமுத்திரக்காளி, மூக்கரைக்காளியம்மன், தட்டாரக் காளியம்மன், கூத்தாடி முத்துப்பெரியநாயகியம்மன், ரேணுகாதேவி முத்துமாரியம்மன், கள்ளாம்பிரம்புக் காளியம்மன், மடக்கரைக் காளியம்மன் போன்றவை ஆரம்ப காலகட்டங்களில் கல்லும், பீடமும் மட்டும் அமைக்கப்பட்டு வழிபட்டு வந்துள்ளனர். இன்றைய காலகட்டத்தில் உருவ வழிபாட்டிற்கு மாற்றப்பட்டுள்ளன என்பதனைக் கள ஆய்வில் காணமுடிந்தது.

களஆய்வுப் பகுதியில் இன்றளவும் சிலை வடிவம் இல்லாமல் கல்லும், சூலாயுதமும் ஊன்றப்பட்டு வழிபடப்பட்டு வரும் கோயில்களையும் காணமுடிகிறது.

கண்டியன் புதுவயல் நல்லாத்துரை முனிஸ்வரர், வெள்ளூர் முனிஸ்வரர், மாவிடுதிக்கோட்டை கொம்படிக்கருப்பர், கண்ணங்கோட்டை சங்கரபதி தர்ம முனிஸ்வரர் போன்ற கோயில்களில் சிலை இல்லாமல் சூலாயுதம், நடுகல் போன்றவையே வழிபாட்டிற்கு உரியனவாக இருக்கிறது. இதற்கு பொருளாதாரம் காரணமாக இருக்கலாம். “சிலையை வைக்க எல்லோருக்கும் ஆசைதான். அவ்வளவு தொகை புரட்ட முடியவில்லை”[11] குறைந்த அளவு வருமானமுள்ள கோயில்களில் இதுபோன்ற நிலை காணப்படுவதனைக் களஆய்வுத் தகவல் வழி அறியமுடிகிறது.

### 5.2.1 வழிபாடு செய்வோர்

சிறுதெய்வ வழிபாடென்பது முன்னோர் சார்ந்த வழிபாடாகக் கருதப்படுவதால் அவர்களின் குடும்பத்தில் வழிவழியாக வந்த ஒருவர்

பூசாரியாக இருப்பர். கோயில் சார்ந்த ஊரில் உள்ள ஒருவரைப் பூசாரியாக நியமனமும் செய்திருப்பர். இது காலம் காலமாக நடைமுறையிலுள்ள மரபாகும். "சிறுதெய்வங்களுக்குப் பிராமணர்கள் பூசை செய்வது இல்லை. இரத்தப்பலி பெறும் தெய்வமாக இருந்து வந்துள்ளது"[12] என்னும் கூற்றும் இதற்குச் சான்றாகும்.

குறிப்பிட்ட சாதியினர் மட்டும் வணங்கும் தெய்வமாக இருப்பின் அந்தச் சாதியினரில் ஒருவரைப் பூசாரியாகவும் பங்காளிகள் மட்டும் வணங்கும் தெய்வமாக இருப்பின் அவர்களுக்குள் ஒருவரை பூசாரியாக நியமிப்பர்.

ஊர் சார்ந்த பொதுவான கோயிலாக இருப்பின் ஊராரின் சார்பில் பூசாரி நியமனமிருக்கும். காலமாற்றத்தின் காரணமாக, மேல்நிலையாக்கத்தின் தாக்கத்தினால், வடமொழி மந்திரங்களின் ஈர்ப்பின் காரணமாகவும் தற்பொழுது பெரும்பாலான சிற்றூர்க் கோயில்களில் பிராமணர்கள் பூசாரிகளாக இருக்கின்றனர். இந்நிகழ்வு நாகரிக மாற்றத்தின் விளைவாகத் தோன்றியதாகும்.

மேல்நிலையாக்கத் தெய்வங்களில் வடமொழி மந்திரங்களால் பூசை செய்யப்படுகிறது. இதனைச் செய்பவர்கள் பிராமணர்கள். மக்களின் ஆழ்மனம் வடமொழி மந்திரத்தை விரும்புகிறது. அம்மந்திரத்தில் சக்தி இருப்பதாகவும், அதன்மூலம் தீவினை அகன்று நல்வினை நவிழும் என்ற கற்பனை கலந்த நம்பிக்கையும் தற்காலங்களில் மக்கள் மனதில் இடம்பிடிக்கத் தொடங்கியுள்ளதை அறியமுடிகிறது.

"வழிபாடு நடத்தும் குழுவில் ஆதிக்க சக்திகளின் தலையீடு வழிபாட்டு முறையிலுள்ள மரபை மாற்றிப் புதிய மரபை உண்டாக்குகின்றனர்."[13] இதன் வெளிப்பாடு தான் சிற்றூர்க் கோயில்களில் பிராமணர்கள் வழிபாடு செய்யும் முறையாகும்.

இறகுசேரி சுடலைமாடன், மஞ்சனப்பேச்சி, தேவகோட்டை ரெகுநாதபுரம் பாண்டி முனிஸ்வரர், அண்ணாநகர் மடக்கரை காளியம்மன், கல்லங்குடி செல்லியம்மன், தாழையூர் கூத்தாடி முத்துப்பெரியநாயகியம்மன், இராம்நகர் நாகாத்தம்மன் போன்ற கோயில்களில் பிராமணர்கள் பூசை செய்கிறார்கள். "எங்க கோயிலுக்குத் தினமும் பூசை செய்ய வேண்டும் எனக்கு நிறைய வேலை இருக்கும். வயதும் ஆகிவிட்டது. அதனால ஒரு ஐயரை நியமித்துவிட்டேன். அவர் தினமும் பூசை செய்கிறார்"[14] என்று பிராமணர்களை பூசைக்கு நியமித்தக் காரணத்தைச் சொல்கிறார்கள்.

"ஐயர்களை வைத்துப் பூசை செய்தாலதான் சாமிக்குச் சக்தி அதிகரிக்கும்"[15] என்ற கருத்தையும் களஆய்வுப் பேட்டியில் பதிவு செய்ய நேர்ந்தது. இக்கருத்துக்களின் அடிப்படையில் நோக்குமிடத்து பிராமணர்களின் வழிபாடே சிறந்தது எனத் தீர்மானிக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளனர்.

வழிபாட்டின் பொழுது உயிர்ப்பலி கொடுப்பது சிறுதெய்வ மரபுகளில் ஒன்றாகும். இவ்வாறு உயிர்ப்பலி கொடுக்கும் பொழுது பிராமணர்கள் வருவதில்லை. மேலும் அங்குள்ள பரிவாரத் தெய்வங்களான விநாயகர், முருகன் போன்ற சிலைகளைத் திரைச் சீலையால் மூடிவிடுகின்றனர். "எங்களின் கோயிலுக்கு வழக்கமாகப் பூசை செய்யும் ஐயர் ஆடு, சேவல் அறுக்கும் பொழுது வரமாட்டார்"[16] எனும் தகவலை முன்வைக்கிறார் சத்தியமூர்த்தி. இருப்பினும் பிராமணர்கள் அல்லாத பூசாரிகளும் சிற்றூர் தெய்வக்கோயில்களில் இன்றளவும் வழிபாடு செய்து வருகின்றனர் என்பதனைக் களஆய்வில் காணமுடிந்தது.

**5.2.2 நேர்த்திக்கடன்**

**"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையும்**
**தெய்வத்துள் வைக்கப் படும்"   (குறள்.50)**

எனும் வள்ளுவரின் குறள் நெறிப்படி சமூகத்தில் அறம் தவறாமல் வாழ்வியல் நெறிமுறைகளைப் பின்பற்றி வாழ்ந்து மறையும் ஒவ்வொருவரும் தெய்வமாக வணங்கப் பெறுவர். இன்று சிற்றூர்களில் வணங்கப்படும் பல தெய்வங்கள் இறந்தவர்களின் சமாதிகள், நம்மோடு சமகாலத்தில் வாழ்ந்து மறைந்துபோன மனிதர்களாக இருப்பதால் அவர்களுக்குப் பிடித்தமான பொருட்களை நேர்த்திக்கடனாகச் செலுத்துவது பண்டுதொட்டு வழக்கத்திலிருந்து வருகிறது.

**‘கருப்பனின் புந்தி குளிர்ந்திடவே**
**கோதிலாக் குட்டி வெட்டிச்**
**சாராயம் ரொட்டி**
**கும்பிட்டு வையுங்கடா’**

எனும் நாட்டுப்புறப் பாடலும் நேர்த்திக்கடன் பொருட்களாக சாராயம், ஆட்டுக்குட்டி போன்றவற்றினைப் பதிவு செய்து இருக்கிறது.

தனக்கு இன்பத்தையும், மகிழ்ச்சியையும் கொடுத்திட்ட தெய்வத்திற்கு நன்றிக்கடனாக நேர்த்திக்கடன் செலுத்தப்படுகிறது. நேர்த்திக்கடன் முறைகள் மாறுபட்டாலும் நேர்த்திக்கடன் செலுத்துவது என்பது எழுதப்படாத சட்டமாக இருக்கிறது. தலைமுறைகள் பல தாண்டியதும் வணங்கப்படும் முறையிலும், செலுத்தப்படும் நேர்த்திக்கடன் நிலையிலும் மாற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

தங்கள் வீட்டில் விளைந்த நெல், மிளகாய், வீட்டில் வளர்க்கப்படும் ஆடு, சேவல், கோழி போன்றவற்றினை நேர்த்திக்கடனாகச் செலுத்தினாலும் தற்கால நிலையில் மாற்றம் கொள்ளச் செய்திருக்கிறது.

இதற்குப் பொருளாதார மாற்றமும், நாகரிக வளர்ச்சியும் காரணமாகக் கொள்ளலாம். தேவகோட்டை மாவடிக்கருப்பர் ஆலயத்திற்குச் சிவகங்கைத் தொகுதியின் நாடாளுமன்ற உறுப்பினர் செந்தில்நாதன் கோயிலின் முகப்புப்பகுதியில் அலங்கார வளைவினை நேர்த்திக்கடனாகக் கட்டிக் கொடுத்துள்ளார்.

சுக்கிரபட்டி வேலாயுதமூர்த்தி அய்யனார் கோயிலுக்கு இரும்பு முள்வேலியை நம்பியார் என்பவரும் தாயமங்கலம் முத்துமாரியம்மன் கோயிலுக்கு அழகப்பன் என்பவரும் மின்சாரத்தில் இயங்கக்கூடிய மேளதாளத்தினை நேர்த்திக்கடனாகக் கொடுத்துள்ளார். பொன்னத்தி மாரியம்மன் கோயிலுக்குக் கணேசன் இரும்புக் கதவுகளும், கண்ணாடியும் நேர்த்திக்கடன் செய்துள்ளார்.

இதேபோன்று களஆய்விற்குரிய பல கோயில்களில் தங்கம், வெள்ளி, பணம், செங்கல், மணல், கோயில் சிற்பங்கள், முகம் பார்க்கும் கண்ணாடி, மின்விசிறி, கோயில் கட்டிடங்கள், வர்ணம் பூசுதல், மேடை அமைத்துக் கொடுத்தல் போன்ற தற்காலத்திற்கேற்ற முறையில் நேர்த்திக்கடன் செலுத்துவதனைக் காணமுடிந்தது.

பெருந்தெய்வ நிலையிலுள்ள கோயில்களில் காணப்படும் நேர்த்திக்கடனான பால்குடம் எடுத்தல், காவடி தூக்குதல், அலகு குத்துதல் போன்றவை மஞ்சனி காடேறியம்மன், தேவகோட்டை கள்ளாம்பிரம்புக் காளியம்மன், சமயபுரமாரியம்மன், இறகுசேரி சுடலைமாடசாமி மஞ்சனப்பேச்சி, இராம்நகர் இராசநாகேஸ்வரியம்மன், தேவகோட்டை பாண்டிமுனிஸ்வரர், நாச்சாங்குளம் செட்டியா ஊருணி காளியம்மன், நித்தியகல்யாணிபுரம் ரேணுகாதேவி முத்துமரியம்மன், வெள்ளுர் முனிஸ்வரர் போன்ற கோயில்களில் தற்கால நேர்த்திக்கடன்களாகச் செலுத்தப்படுகிறது.

“முன்பெல்லாம் இம்மாதிரி காவடி தூக்குறதில்லை. இப்பொழுது தான் இவையெல்லாம் செய்கிறோம்”[17] என்றும் களஆய்வுத் தகவலில் குறிப்பிட்டுள்ளனர். ஆரம்ப காலத்தில் இல்லாத காவடி தூக்குதல் போன்ற நேர்த்திக்கடன் தற்காலத்தில் மரபு மாற்றமாக கருதமுடிகிறது.

### 5.3 திருவிழாக்கள்

சிறுதெய்வ வழிபாட்டு முறைகள் ஆகம விதிமுறைகளுக்கு உட்படாதவை என்பதனால் திருவிழா போன்ற நிகழ்வுகளுக்கு நேரம் காலம் பார்ப்பதில்லை. என்றாலும் வேளாண்மையை முதன்மைத் தொழிலாகக் கொண்ட நாட்டுப்புற மக்களிடம் ஓய்வு நேரம் என்பது குறைவாகும். எனவே அறுவடைக்குப்பின் வரும் மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி போன்ற மாதங்களில் திருவிழா நடைபெறும் மாதங்களாக களஆய்வுத் தகவல்கள் சுட்டுகின்றன.

“விழாக்கள் என்பன ஆதிமக்கள் ஒன்று சேர்ந்து நடத்தும் கூட்டுச் சடங்குகளிலிருந்து தோன்றியவை ஆகும். இவை மக்களை ஒன்றுபடுத்தி மதக்கொள்கையை இறவாமல் பாதுகாக்கும் ஆற்றலுடையவை என்ற கருத்து உள்ளது”[18] என்று விளக்கம் தருகிறது கலைக்களஞ்சியம். இதன்மூலம் மக்களை ஒன்று சேர்க்கும் வளமை திருவிழாவிற்கு உண்டு என்பதனை அறியமுடிகிறது.

பெருந்தெய்வங்களுக்கு குறிப்பிட்ட நாள், நட்சத்திரம் பார்த்து குறிப்பிட்ட ஒரே தேதியில் திருவிழா நடத்தப்படுகிறது.

இதன் தாக்கம் சிறுதெய்வ வழிபாட்டிலும் நிலைநிறுத்தப்பட்டிருக்கிறது என்பதனை தற்கால நாட்டுப்புற வழிபாட்டுத் திருவிழாக்களில் காணமுடிகிறது. குறிப்பாக கொடியேற்றதல், ஏழுநாள், ஒன்பது நாள் திருவிழா போன்றவை பெருமரபு வழிபாட்டில் இருந்து சிறுமரபு உள்வாங்கிக் கொண்டதாக அறியமுடிகிறது.

பொன்னத்தி மாரியம்மன் கோயில் ஆண்டுதோறும் ஒரே தேதியில் சித்திரை மாதம் இரண்டாவது செவ்வாய்க்கிழமை காப்புக்கட்டி மூன்றாவது செவ்வாய்க்கிழமை திருவிழா நடக்கிறது.

வெள்ளூர் முனிஸ்வரர் கோயிலில் ஆண்டுதோறும் சித்திரை மாதம் மூன்றாவது செவ்வாய்க்கிழமை திருவிழா நடைபெறுகிறது.

அண்ணாநகர் கள்ளாம்பிரம்புக் காளியம்மன் கோயிலில் ஆண்டுதோறும் சித்திரை மாதம் பௌர்ணமிக்கு முந்தைய செவ்வாய் காப்புக்கட்டி அடுத்த செவ்வாய்க்கிழமை திருவிழா கொண்டாடப்படுகிறது.

தேவகோட்டை சமயபுரமாரியம்மன் கோயிலில் ஆண்டுதோறும் பங்குனி மாதம் முதல் செவ்வாய்க்கிழமை காப்புக்கட்டி அடுத்த செவ்வாய்கிழமை திருவிழா நடத்தப்படுகிறது.

ரெகுநாதபுரம் பாண்டி முனிஸ்வரர் கோயிலில் ஒவ்வொரு ஆண்டும் ஆடி மாதம் மூன்றாவது வெள்ளிக்கிழமை காப்புக்கட்டி நான்காவது வெள்ளிக்கிழமை விழாக்கள் நடைபெறுவதைக் காணமுடிகிறது.

சித்தானூர் பொய்சொல்லா மெய்யர் கோயிலுக்கு ஆண்டுதோறும் சிவன்ராத்திரி அன்று திருவிழா நடக்கிறது.

இதேபோல் தாழையூர் உசுலாவுடைய அய்யனார், கூத்தாடி முத்துப்பெரியநாயகியம்மன் கோயிலுக்கு வருடந்தோறும் சிவன்ராத்திரி அன்று திருவிழா கொண்டாடப்படுகிறது.

மேற்சொன்ன களஆய்வுத் தகவல்கள் சிறுதெய்வ வழிபாட்டின் மரபு மாறிய சில செய்திகளை முன்வைக்கிறது. அவை குறிப்பிட்ட நாளில் திருவிழா, கொடிமரத்தில் கொடி ஏற்றுதல், சிவன்ராத்திரி திருவிழா, அமாவாசை, பௌர்ணமியை மையமிட்டு திருவிழா இவை எல்லாம் சமயங்களின் ஆதிக்கத்தினால் நாட்டுப்புற வழிபாட்டில் ஊடுறுவிய மரபு மாற்றம் என்று கருதயிடமுண்டு.

“முன்னாடி எல்லாம் கருது அறுத்து ஓஞ்சு (ஓய்ந்து) இருக்கும் நேரத்தில் ஒருநா (ஒருநாள்) கொட்டுமேளம் கொட்டி தேங்காய் உடைச்சி (உடைத்து) சாமிகும்பிடுவோம். அன்னைக்கு (அன்றைக்கு) எங்க சொந்தபந்தம் எல்லாம் சொல்லி கறியும் சோறும் போடுவோம்”[19] என்று கூறும் 85 வயது முதியவரின் கூற்று ஒருநாள் கூத்தினை பதிவு செய்கிறது. இன்று அது எட்டுநாள், பத்துநாள் என்று விரிவடைந்திருக்கிறது.

இதுபோன்று திருவிழாக் காலங்களில் குட்டையில் கிடக்கும் தண்ணீரைக் கொண்டு கழுவிய காலம் போய் இன்று மஞ்சள், சந்தனம், பன்னீர், இளநீர், பால், தயிர், பஞ்சாமிர்தம், ப.அரிசி மாவு, விபூதி, திருமஞ்சனப்பொடி போன்ற மேல்தட்டு வர்க்கத்தினர் செய்த அபிடேகம் இன்று நாட்டுப்புற வழிபாட்டில் மாற்றம் கொள்ளச் செய்திருக்கிறது.

### 5.4 ஆடை அலங்காரம்

ஆடை அலங்காரத்திலும் மாற்றம் ஏற்பட்டுள்ளது. பெண் தெய்வங்களுக்கு மஞ்சள், சிவப்பு, பச்சைநிற வண்ணத்தில் பட்டாடைகள் எடுத்துச் செலுத்தப்படுகிறது. ஆண் தெய்வங்களுக்கு சரிகை போட்ட துண்டுகள், வேட்டிகள் அணிவிக்கப் படுகிறது. இது பழங்காலத்தில் இல்லாத நடைமுறையாகும்.

### 5.5 கட்டிட அமைப்பு

சாலையின் ஓரத்திலும், கண்மாய் குளக்கரையிலும், மரங்களின் அடியிலும் வெயில், மழையிலும் வானம் பார்த்துக் கொண்டிருந்த நாட்டுப்புறத் தெய்வங்கள் இன்று ஆகம விதிகளுக்கு உட்பட்ட சுற்றுச்சுவர் கருவறையுடன் கோபுரங்களாக காட்சி அளிக்கிறது.

பாவனக்கோட்டை மலையாளக்காளியம்மன், இளக்கினிவயல் மூக்கரைக்காளியம்மன், மஞ்சனி காடேரியம்மன், தேவகோட்டை மாவடிக்கருப்பர்,

கள்ளாம்பிரம்புக் காளியம்மன், சமயபுர மாரியம்மன், தேவகோட்டை தாயமங்கலம் முத்துமாரியம்மன், இறகுசேரி சுடலைமாடசாமி, மஞ்சனப்பேச்சியம்மன், தாழையூர் கூத்தாடி முத்துப்பெரியநாயகியம்மன், நித்தியகல்யாணபுரம் ரேணுகாதேவி முத்துமாரியம்மன், கும்மங்குடி கொட்டுடைய அய்யனார், இளங்குடி அய்யனார் கோயில் போன்ற கோயில்கள் கட்டிட அமைப்பு ஏதும் இல்லாமலிருந்து இன்று கருவறைக்குள் இருக்கும் தெய்வங்களாக உருமாறிப் போய்விட்டது என்பதனைக் களஆய்வின்வழி அறியமுடிகின்றது. "ஆரம்ப காலத்தில் கல்லும், சூலாயுதமும் மட்டும் நட்டுவைத்து சாமி கும்பிட்டோம். பின்பு ஊரார் அனைவரும் சேர்ந்து கோயிலை எடுத்துக் கட்டினோம்"[20] என்னும் களஆய்வுத் தகவல் பொருளாதாரச் சூழ்நிலையால் பல காலங்களாக கட்டிட அமைப்புப் பெறாத தெய்வங்கள் பொருளாதார வளமையினால் கட்டிட அமைப்பிற்கு மாற்றம் பெற்றுள்ளன என்பதனையும் அறிந்துகொள்ள முடிகின்றது.

### 5.6 தொகுப்புரை

- ❖ சிறுமரபு வழிபாடு பல்வேறு படிநிலைகளைத் தாண்டி வளர்ச்சி பெற்றிருக்கிறது.
- ❖ உருவமற்ற வழிபாடாக ஆரம்பகால வழிபாடு இருந்து பின்பு உருவவழிபாடாக மாற்றம் பெற்றுள்ளது.
- ❖ பல இடங்களில் உயிர்ப்பலி தவிர்க்கப்படுகிறது.
- ❖ சில கோயில்களில் பிராமணர்கள் பூசை செய்கின்றனர்.
- ❖ நேர்த்திக்கடன் செலுத்துவதில் பணம், தங்கம், வெள்ளி போன்றவை முதன்மையாகின்றன.
- ❖ பெருமரபு நேர்த்திக்கடன் சிறுமரபில் கலந்திருக்கிறது.

- குறிப்பிட்ட நாளில் திருவிழா என்று வரையறுக்கப்பட்டிருக்கிறது.
- திருவிழா வழிபாடுகளில் சில கோயில்கள் ஆகம விதிகள் பின்பற்றப்படுகின்றன.
- வாசனைத் திரவியங்களால் அர்ச்சனை செய்யப்படுகிறது.
- மின்சார விளக்குகள் அமைக்கப்பட்டுள்ளன.
- கருவறையுடன் கூடிய கட்டிட அமைப்பும் பட்டாடை அலங்காரமும் செய்யப்பட்டிருக்கிறது.
- மக்கள் செல்வாக்கு மிகுந்த கோயில்களில் பிராமணர்கள் வைத்து வழிபாடு செய்யும் முறை மாற்றம் பெற்றுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. தொ.பரமசிவம், இணையத்தளம். httb//www.koodal.com
2. மு.பாண்டி, சிவகங்கை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள், ப.8.
3. தகவல்: க.பாலுச்சாமி, சிவந்தான்கோட்டை, நாள்: 11.03.2016.
4. தகவல்: தங்கமாரியம்மாள், சிவந்தான்கோட்டை, நாள்: 11.03.2016.
5. மு.பாண்டி, சிவகங்கை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள், ப.15.
6. கோ.தங்கச்செல்வி, நாட்டுப்புறப் பெண் தெய்வங்கள் (மு.ப.ஆ.), ப.289.
7. அ.அறிவுநம்பி, நாட்டுப்புறக்களங்கள், ப.99.
8. தகவல்: நாச்சியப்பன், இளங்குடி, நாள்: 01.05.2016.
9. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல், ப.222.
10. அ.அறிவுநம்பி, தமிழரின் வழிபாட்டுச் சிந்தனைகள், ப.47.
11. தகவல்: க.சுப்பையா, கண்டியன்புதுவயல் , நாள்: 18.05.2016.
12. க.கண்ணகி (ப.ஆ.), தமிழர் வழிபாடும் சிறுதெய்வங்களும், ப.273.
13. வெ.அமுதா, சிறுதெய்வ திருவிழாக்கள், ப.171.
14. தகவல்: க.சோமசுந்தரம், தேவகோட்டை, நாள்: 02.06.2016.
15. தகவல்: இரா.பழனிச்சாமி, T.சிறுவனூர், நாள்: 07.03.2016.
16. தகவல்: வே.சத்தியமூர்த்தி, அண்ணாநகர், தேவகோட்டை, நாள்: 07.05.2016.
17. தகவல்: சாந்தா, நாச்சாங்குளம் , நாள்: 18.05.2016.
18. கலைக்களஞ்சியம், தொகுதி-9, ப.47.
19. தகவல்: தா.அய்யாக்கண்ணு, வெங்களூர், நாள்: 03.04.2016.
20. தகவல்: மாரி, பொன்னத்தி, நாள்: 07.02.2016.

# நிறைவுரை

ஆய்வு முடிவுகள் பின்வருமாறு அமைகின்றன:

மன்னர்கள் காலத்தில் இறகுசேரி நாட்டில் தேவகோட்டை அமைந்திருப்பதாக வரலாற்றுப் பதிவில் உள்ளன.

இராமநாதபுரம் சமஸ்தானத்திற்கு உட்பட்டிருந்த தேவகோட்டை பின்பு சிவகங்கை ஜமீனுக்கு மாற்றப்பட்டு அதன் முதல் ஜமீன்தாரராக அள.அரு.இராசாமி செட்டியார் நியமிக்கப்பட்டிருந்தார்.

ஒருங்கிணைந்த இராமநாதபுரம் மாவட்டத்திலிருந்த தேவகோட்டை நகரம் பின்பு சிவகங்கை தனி மாவட்டமாக பிரிந்த பொழுது சிவகங்கை மாவட்டத்தில் இணைக்கப்பட்டது.

தேவர்கோட்டை, தேவிகோட்டை என்றழைக்கப்பட்டு தற்பொழுது தேவகோட்டையாக மாற்றம் பெற்றிருக்கிறது என்று இணையத்தளச் செய்திகளும், கள ஆய்வுச் செய்திகளும் உறுதிப்படுத்துகின்றன.

விடுதலைப் போராட்டக்களத்தில் தேவகோட்டை நகரம் முக்கியப்பங்கு வகித்தது. 75க்கும் மேற்பட்டோர் ஒரே நாளில் ஆங்கிலேயர்களால் சுடப்பட்டு உயிரிழந்தனர். அதன் நினைவாக இன்றும் தியாகிகள் பூங்கா நகரின் மையப்பகுதியில் அமையப்பெற்றுள்ளது.

நாட்டார் தெய்வ வழிபாடு இந்நகரின் ஆரம்ப கால வழிபாடு என்பதற்குச் சான்றாக பழமையான கோட்டையம்மன் கோயில் இங்கு அமைந்துள்ளது.

அறத்தையும், ஆன்மிகத்தையும், கல்விக்கூடங்களையும் நகரத்தார் போற்றி வளர்த்துள்ளனர்.

விவசாயம் இவ்வட்டார மக்களின் பிரதானத் தொழிலாக உள்ளது. நூற்றாண்டுகள் கடந்த ஊருணிகளும் இப்பகுதியில் அதிகம் காணப்படுகின்றன.

கட்டிடக்கலைக்கு எடுத்துக்காட்டாக நகரத்தார் மாளிகைகள், திரைப்படம் எடுக்கும் படப்பிடிப்புத் தளமாகவும் அமைந்துள்ளன. நகரத்தார், கள்ளர், மறவர், யாதவர், தேவேந்திரகுல வேளாளர் உட்பட அனைத்துச் சாதியினரும் இந்நகரிலும், அதனைச் சுற்றியுள்ள வட்டாரப் பகுதிகளிலும் வசித்து வருகின்றனர்.

வைதிக மரபிற்கும், ஆகம விதிகளுக்கும் உட்படாத தெய்வங்களை சிறுதெய்வங்கள் என கட்டமைத்தனர். இறந்துப்பட்ட மனிதர்கள் தெய்வங்களாக வணங்கும் வழக்கம் இவ்வட்டாரத்தில் வழக்கத்தில் உள்ளது.

குலதெய்வம், ஊர்த்தெய்வம், காவல் தெய்வம், பிடிமண் மற்றும் பெண் தெய்வங்கள் மிகுதியாகும். குலதெய்வம் ஊர்த்தெய்வமாக மாற்றம் பெற்றிருக்கிறது.

தேவகோட்டை வட்டாரத்திலுள்ள நாட்டுப்புற வழிபாடு ஆரம்பகாலத்தில் இயற்கை வழிபாடாக இருந்து பின்பு உருவ வழிபாட்டிற்கு மாற்றம் பெற்றிருக்கிறது. உருவ வழிபாட்டில் மக்களின் புழங்கு பொருட்களை தெய்வங்களின் கைகளில் இருப்பதனை காண முடிகிறது.

மாரியம்மன் கோயில்கள் ஊரின் மையப்பகுதியிலும், காளியம்மன் கோயில்கள் ஊரின் வெளிப்பகுதியிலும் காணப்படுகின்றன. மக்களின் இடப்பெயர்ச்சி காரணமாக தெய்வங்களும் இடம் மாற்றப்பட்டு அவை பிடிமண் தெய்வங்கள் என அழைக்கப்பட்டு வருகின்றன.

ஊருக்குப் புறத்தே நீர் நிலைகளை ஒட்டி ஐயனார் கோயில்கள் அமைக்கப்பட்டுள்ளன. சாலைகளின் ஓரத்தில் முனீஸ்வரர் கோயில் அமைக்கப்பட்டு அவை பெரும்பாலும் காவல் தெய்வங்கள் என அழைக்கப்படுகின்றன.

ஆகம விதிப்படி கட்டிட அமைப்புகள் இல்லை என்றாலும் தற்போதைய சூழலில் தேவகோட்டை கூத்தாடி முத்துப்பெரியநாயகி அம்மன் மற்றும் இளங்குடி ஐயனார் முதலான கோயில்களில் ஆகமவிதிப்படி கட்டிட அமைப்புகளும், கொடிமரமும் காணப்படுகின்றன.

சாதியகட்டமைப்புகளும், பொருளாதார ஏற்றத்தாழ்வுகளும் இவ்வட்டாரத்தின் சிறுதெய்வ வழிபாட்டில் முக்கியப்பங்கு வகிக்கின்றன. இக்கோயில்களில் வழிபாட்டு முறைகளில் ஆதிக்கச் சாதியினர் முதன்மைபடுத்தப்படுகின்றனர்.

சமய வாதிகளின் ஆதிக்கத்தின் காரணமாக முருகன், விநாயகர், முதலான பெருந்தெய்வங்கள் நாட்டார் தெய்வங்களோடு இணைத்து வழிபடப்பட்டு வந்துள்ளன.

சமூகக் கட்டமைப்பினை மீறும் பெண்கள் தண்டிக்கப்பட்டுள்ளனர். அவ்வாறு ஆணாதிக்கத்தால் தற்கொலை செய்து கொள்ளும் பெண்கள் தெய்வ நிலை பெற்றிருப்பதனை கூத்தாடிமுத்துப் பெரியநாயகியம்மன், சமுத்திர காளியம்மன், தட்டாரக் காளியம்மன் கோயில்களின் தலவரலாற்றுக் கதைகள் உணர்த்துகின்றன.

வழிபாட்டு முறையில் கோயிலுக்குக் கோயில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. சில தெய்வங்களுக்கு தினவழிபாடும், பல தெய்வங்களுக்கு வார மற்றும் மாதவழிபாடும் நடத்தப்படுகின்றன.

முக்கியத்தினங்களில் சிறப்பு வழிபாடும் ஆண்டிற்கொருமுறை திருவிழாக்களும் நடத்தப்படுகின்றன. செவ்வாய், பொங்கல் வழிபாடு, குதிரைஎடுப்பு எனப் பல பெயர்களில் இவ்விழாக்கள் அழைக்கப்படுகின்றன.

நாட்டார் கோயில்களில் உயிர் பலியிடும் வழக்கம் காணப்படுகிறது. வெற்றிலை, பாக்கு, மஞ்சள், ஊதுபத்தி, சாம்பிராணி, தேங்காய், பூ, மாலை

போன்றவை பூசையில் வைத்து படைக்கப்படுகின்றன. சுருட்டு, பிராந்தி, சாராயம் போன்றவை முனீஸ்வரர், கருப்பர் கோயில்களுக்கு படைக்கப்படுகின்றன.

விழாத்தொடக்கத்தின் குறியீடாக காப்புக்கட்டப்படுகிறது. அன்றுமுதல் திருவிழா முடியும் வரை காப்புத்தடை என்று அழைக்கப்படுகிறது. ஊரில் உள்ள குடும்பங்களின் சார்பாக வரி வசூல் செய்து திருவிழாக்களை நடத்துகின்றனர்.

மது எடுத்தல் எனும் திருவிழா தேவகோட்டை வட்டாரத்தில் ஈகரை கிராமத்தில் மட்டும் நடைபெறுகிறது.

அம்மன்கோயில்களில் முளைப்பாரி எடுத்தலும், ஐயனார் கோயில்களில் குதிரை எடுப்பும் நடைபெறுகின்றன. கூத்தாடி முத்துப்பெரியநாயகி அம்மன் கோயிலில் சிவராத்திரியின் மறுநாள் மட்டும் பூ கொடுக்கப்படுகிறது, மற்ற நாட்களில் கொடுப்பதில்லை.

பாவனக்கோட்டை மலையாளக் காளியம்மன் கோயிலில் எறிசோறு கொடுக்கப்படுகிறது. சேந்தனி காடேரியம்மன் கோயிலில் வாய்கட்டிப்பூசை நடைபெறுகிறது.

சமயங்களின் தாக்கத்தால் விளக்குப்பூசை, பால்குடம் எடுத்தல், காவடி எடுத்தல் போன்ற நிகழ்வுகளும் தேவகோட்டை வட்டாரத்தில் நடைபெறுகின்றன.

சாமிவந்து ஆடும் நபரை சாமியாடி என்றும் அருள்வாக்கு கூறுவதனை தெய்வம் வந்து சொல்வதாகவும் நம்புகின்றனர்.

திருமணம், பிள்ளைப்பேறு போன்றவைகளுக்கு பூசாரிகளிடம் அருள்வாக்கு கேட்கும் நிகழ்வுகளும் நடைபெறுகின்றன. பல்லி சொல் கேட்டலும், சீட்டெழுதி குறைகளை தெரிவிக்கும் வழக்கமும் இவ்வட்டாரக் கோயில்களில் இன்றளவும் நடைமுறையில் இருக்கின்றன.

கண்ணங்கோட்டை முனீஸ்வரர் கோயிலின் படையல் உணவினை பெண்கள் உண்ணக்கூடாது என்ற நம்பிக்கை இன்றளவும் வழக்கத்திலுள்ளது.

தெய்வங்களுக்குப் படைக்கப்படும் பொருட்கள் சேதம் அடைந்தால் துன்பம் வரும் என்ற நம்பிக்கை காணப்படுகிறது.

தீட்டுக் காலங்களில் கோயிலுக்கும், கோயில் சார்ந்த குளத்திற்கும் சென்றால் தீங்கு நேரிடும் என நம்புகின்றனர். மஞ்சனி காடேரியம்மன் கோயில் ஊருணியில் பிறப்பு, இறப்புக் காலங்களில் முப்பது நாட்கள் இறங்க மாட்டார்கள். இவ்வழக்கம் இன்று வரைக்கும் கடைபிடிக்கப்பட்டு வருகிறது.

களவு, பொய் சொல்லுதல் போன்ற குற்றங்களுக்கு தெய்வத்திடம் சத்தியம் செய்தலும், இளங்குடி காளியம்மன் கோயிலில் மிளகாய் அரைத்தலும் நடைபெறுகின்றன. இதன்மூலம் தவறு செய்தவர்கள் தண்டிக்கபடுவர் என்ற நம்பிக்கை இவ்வட்டார மக்களிடம் காணப்படுகிறது.

நம்பிக்கையின் தொடர்நிகழ்வாக நேர்த்திக்கடன் செலுத்தப்படுகிறது. தெய்வங்களுக்குச் செய்யும் கைமாறு நேர்த்திக்கடன் என்று பொருள் கொள்ளலாம்.

பிள்ளைப்பேறு பெற்றோர் முடி இறக்கி, கரும்பால் தொட்டில் கட்டி நேர்த்திக்கடன் செய்கின்றனர். பிள்ளைப்பேறு இல்லாததோர் மரக்கட்டைகளிலும், துணிகளிலும் தொட்டில் கட்டி வேண்டிக் கொள்கின்றனர்.

சமயபுரமாரியம்மன், அருணாகிரிப்பட்டினம் முத்துமாரியம்மன் கோயில்களில் மாவிளக்கு எடுத்தல், அக்னிச்சட்டி எடுத்தல், தீ மிதித்தல் போன்ற நேர்த்திக்கடன் செலுத்தப்படுகின்றன.

தங்கம், வெள்ளி, பணம் மற்றும் உபயோகப் பொருட்களையும் நேர்த்தி செலுத்தும் வழக்கம் உள்ளது.

ஆரம்ப காலத்தில் கல்லும் சூலாயுதமும் நட்டு வைத்து வழிபடப்பட்டு வந்த நிலை மாற்றம் பெற்று இன்று கருவறையுடன் கூடிய கட்டிட அமைப்புகளை நாட்டார் கோயில்கள் பெற்றிருக்கின்றன.

உயிர்ப்பலி இடுதல் நாட்டார் வழிபாட்டில் முக்கிய நிகழ்வாக கருதப்படினும் தேவகோட்டை பாண்டி முனீஸ்வரர், சிவந்தான்கோட்டை முனீஸ்வரர் கோயில்களில் முனீஸ்வரருக்கு உயிர்ப்பலிக் கொடுப்பதில்லை. மாறாக முன்னோடித் தெய்வமான கருப்பருக்கு உயிர்ப்பலி கொடுக்கும் பொழுது முனிஸ்வரர் சிலைகள் திரைச்சீலையால் மூடிவிடுகின்றனர். ஆரம்ப காலங்களில் இக்கோயில்களில் உயிர்ப்பலி கொடுக்கப்பட்டுள்ளது. சமயங்களின் தாக்கத்தால் பிற்காலத்தில் உயிர்ப்பலி கொடுப்பதில் மாற்றம் ஏற்பட்டிருக்கிறது.

நேர்த்திக்கடன் செலுத்துவதிலும் பெருமரபு வழக்கம் நாட்டார் வழிபாட்டில் புகுத்தப்பட்டுள்ளது. காவடி எடுத்தல், அழகு குத்துதல், விளக்குப் பூசை செய்தல், பூத்தட்டு எடுத்தல், பால்குடம் எடுத்தல் போன்ற பெருமரபு வழக்கம் தேவகோட்டை வட்டார நாட்டார் தெய்வ வழிபாட்டில் காணப்படுகிறது. சமங்களின் ஆதிக்கத்தினை இவ்வழிபாட்டு முறைகள் உள்வாங்கி இருப்பதனை அறிய முடிகிறது.

திட்டமிடப்பட்டு நடத்தப்படாத திருவிழாக்கள் தற்பொழுது குறிப்பிட்ட நாட்களில் திட்டமிட்ட திருவிழாக்களாக நடத்தப்படுகின்றன. ஆகம விதிகளும் கடைபிடிக்கப்படுகின்றன. பிராமணர்கள் பூசை செய்யும் நெறிகளும் பின்பற்றப்படுகின்றன. நாட்டார் வழிபாட்டில் ஏற்பட்ட மாற்றங்களாக இதனைக் கருத முடிகிறது.

பால், பன்னீர், இளநீர் உள்ளிட்ட வாசனைத் திரவியங்களில் அபிஷேகமும், வழிபாடும் நடத்தப்படுவது பெருமரபு வழிபாட்டின் தொடர்ச்சியாக பார்க்கப்படுகிறது.

சமயங்களின் எழுச்சியும், வீழ்ச்சியும் மனிதர்களைச் சார்ந்தது. மனிதர்களின்றி மதம் இல்லை என்பது தெளிவான ஒன்று. இதன் காரணமாகவே மதங்களின் வளர்ச்சிக்கு மனிதர்களை தன் வயப்படுத்துகின்றனர் சமயவாதிகள்.

இவற்றிற்கு ஊன்றுகோலாக முதல்நிலையில் நாட்டார் தெய்வங்களை கீழ்நிலைப்படுத்தி மக்களை அத்தெய்வங்களிடமிருந்து அந்நியப்படுத்துகின்ற முயற்சியை மேற்கொள்கின்றனர். இரண்டாம் நிலையில் நாட்டார் தெய்வங்களின் பிறப்பு, வளர்ப்பு; சமயத்தெய்வங்களின் வழித்தோன்றல்கள் எனக்கூறி நாட்டர் தெய்வங்களைவிட சமய தெய்வங்களை முன்னிலைப்படுத்துகின்றனர்.

மூன்றாம் நிலையில் சமயத்தெய்வங்களின் முன்னோடியாக, காவல் தெய்வமாக நாட்டுப்புறத் தெய்வங்களை வழிபட வைத்து மக்களை திசை திருப்பியுள்ளனர்.

நான்காம் நிலையில் நாட்டுப்புறக் கோயில்களில் முருகன், விநாயகர், துர்க்கை போன்ற பெருந்தெய்வச்சிலைகளையும் நிறுவி வழிபடத் தூண்டியுள்ளனர். இவையனைத்தும் சமய வளர்ச்சிக்கு போர்த்தப்பட்ட போர்வைகள் ஆகும். இதன் வெளிப்பாடு ஆரியர்களின் மந்திரமும், விதிகளும் இன்று சிறுதெய்வக் கோயில்களில் இடம்பெறக் காரணமாக இருக்கிறது என்று கருதமுடிகிறது.

எந்தக் கட்டமைப்பு வசதிகளும், ஆகம விதிகளும், நாள் நட்சத்திரம் இல்லாமல் வழிபடப்பட்டு வந்த நாட்டார் தெய்வ வழிபாடுகள் இன்றைக்கு தேவகோட்டை வட்டாரத்தில் பல்வேறு படிநிலைகளைத்தாண்டி வளர்ச்சியும் மாற்றமும் பெற்றிருக்கிறது. இதற்கு சமயங்களின் தாக்கமும், பொருளாதார வளர்ச்சியும் காரணமாக உள்ளன.

## துணைநூற்பட்டியல்


1. அறவாணன்.கா.பா. - மர வழிபாடு,
பாரி நிலையம்,
சென்னை.
1984.

2. அருணாச்சலம்.மு - சைவசமயம் ஓர் அறிமுகம்,
மேற்கு இராமவர்மபுரம்,
நாகர்கோயில்.
1979.

3. அறிவுநம்பி.அ. - நாட்டுப்புறக்களங்கள்,
அமுதம் நூலகம்,
அறிவகம், 52/1, இரண்டாம் வீதி,
திருவள்ளுவர் திருநகர், (நியூடவுன்),
காரைக்குடி - 623 001.
முதற்பதிப்பு - அக். 1989.

4. அறிவுநம்பி.அ. - வளர்தமிழ்க் களங்கள்.
அமுதம் நூலகம்,
அறிவகம், 52/1, இரண்டாம் வீதி,
திருவள்ளுவர் திருநகர், (நியூடவுன்),
காரைக்குடி - 623 001.
முதற்பதிப்பு - அக். 1989.

5. அழகப்பன்.ஆறு - நாட்டுப்புறப் பாடல்கள் திறனாய்வு,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்.,
142, டி.டி.கே. சாலை,
சென்னை-18.
இரண்டாம் பதிப்பு - 1999.

6. இராசு.இரா - அம்மன் வழிபாட்டுச் சடங்குகளில்
நாடகக் கூறுகள்,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

7. இராமசுப்பிரமணியம்.வ.த. - தேவாரத் திருக்காட்சிகள்
வர்த்தமாணன் பதிப்பகம்,
15, சரோஜினி தெரு,
தி.நகர், சென்னை-600 017.
2002.

8. இராசமாணிக்கனார்.மா. - வழிபாடு,
செல்வி பதிப்பகம்,
காரைக்குடி.
1957.

9. இராமநாதன்.ஆறு. (ப.ஆ.) - நாட்டுப்புறப் பாடல் களஞ்சியம் தொகுதி-3,
மெய்யப்பன் தமிழாய்வகம்,
53, புதுத்தெரு, சிதம்பரம்-608 001.
முதற்பதிப்பு - டிசம்பர் 2001.

10. கருப்பாயி.ஆ. - நாட்டுப்புறச் சிறுதெய்வ வழிபாடு,
செந்தமிழ்ப்பாவை பதிப்பகம்,
ஆய்க்குடிவயல்.
1999.

11. கண்ணகி.க. (ப.ஆ.) - தமிழ் வழிபாடும் சிறுதெய்வங்களும்,
தமிழ் ஐயா வெளியீட்டகம்,
ஔவைக்கோட்டம்,
திருவையாறு - 613 204.

12. காந்தி.க. - தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
அடையாறு, சென்னை.
முதல்பதிப்பு - 1980.

13. கிருட்டினசாமி.க - நாட்டுப்புற இலக்கியம் ஓர் ஆய்வு,
சீதை பதிப்பகம்,
6/16, தோப்பு வேங்கடாசலம் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-600 005.
முதற்பதிப்பு - ஜீன் 2007.

14. குணசேகரன்.கே.ஏ. - நாட்டுப்புற நிகழ்கலைகள்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
சென்னை-98.
முதல் பதிப்பு - 1993.

15. ….. - நாட்டுப்புற நிகழ்கலைகள் ஒரு பார்வை,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
சென்னை-98.
முதல் பதிப்பு - 1993.

16. கைலாசபதி.க - பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்,
மக்கள் வெளியீடு,
சென்னை.
1978.

17. கோபால்.வீ. - சிறுதெய்வ வழிபாட்டில் குல குறியீடுகள்,
19-வது கருத்தரங்கு (பகுதி-3),
இந்தியப் பல்கலைக்கழகத்
தமிழாசிரியர் மன்றம், அண்ணாமலை நகர்.
1987.

18. சண்முகசுந்தரம்.சு. - நாட்டுப்புற இயல்,
மணிவாசகர் பதிப்பகம்,
8/7, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை - 600 108.

19. சண்முகசுந்தரம்.சு. - தன்னனானே - காலாண்டிதழ்,
காவ்யா பதிப்பகம்,
16, இந்திரா நகர், இரண்டாவது நிறுத்தம்,
பெங்களூரு - 560 038.

20. சக்திவேல்.சு. - நாட்டுப்புற இயல் ஆய்வு,
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை - 600 108.
எட்டாம் பதிப்பு - ஜனவரி 2009.

21. சந்திரன்.கு. - மதுரை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள், கிருஷ்ணா பதிப்பகம், புதிய எண்.92, (பழைய எண்.63), கே.பி. கோவில் தெரு, சைதாப்பேட்டை, சென்னை-600 015. முதற்பதிப்பு - டிசம்பர் 2005.

22. சாமி.பி.எல். - தமிழ் இலக்கியத்தில் தாய்த்தெய்வவழிபாடு, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., 6, நல்லதம்பி செட்டி தெரு, சென்னை - 2. இரண்டாம் பதிப்பு - செப்டம்பர் 1976.

23. சாரங்கபாணி (உ.ஆ.) - பரிபாடல், கோவிலூர் மடாலயம், கோவிலூர், காரைக்குடி. ஏப்ரல் 2003.

24. சிவசுப்பிரமணியன்.ஆ. - மந்திரமும் சடங்குகளும், மக்கள் வெளியீடு, 24, உணிசு அலிசாகிப் தெரு, எல்லிசு சாலை, சென்னை - 600 002. இரண்டாம் பதிப்பு - செப்.1999.

25. சுசிலா கோபாலகிருஷ்ணன் - நாட்டுப்புற நம்பிக்கைகள், (மதுரை மாவட்டம்), மீனாட்சி புத்தக நிலையம், மயூரா வளாகம், தாணப்ப முதலி தெரு, மதுரை - 625 001.

26. சேனாவரையர் (உ.ஆ.) - தொல்காப்பியம் (சொல்லதிகாரம்), திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிட்., பிராட்வே, சென்னை. 2001.

27. சோம.லெ. - தமிழ்நாடு மக்களின் மரபும் பண்பாடும்,
நேஷனல் புக் டிரஸ்ட்,
புதுடெல்லி.
1975.

28. தங்கவேலு.கோ. - தமிழகச் சமூகப் பண்பாட்டு வரலாறு,
அமிழ்தம் பதிப்பகம்,
328/1, திவான்சாகிப் தோட்டம்,
டி.டி.கே.சாலை, இராயப்பேட்டை,
சென்னை - 600 014.

29. தசரதன்.ஆ. - அருஞ்சுனை காத்த அய்யனார்,
தமிழ் ஓலைச்சுவடிகள் பாதுகாப்பு மையம்,
1/71, திருவீதி அம்மன் கோவில் தெரு,
கொட்டிவாக்கம்,
சென்னை - 600 041.
1996.

30. துரைச்சாமி பிள்ளை ஔவை.சு. (உ.ஆ.) - புறநானூறு,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,
(கழக வெளியீடு),
142, டி.டி.கே. சாலை,
சென்னை - 600 018.
2007.

31. நாகப்பா நாச்சியப்பன் - திருக்கோயில் வழிபாடு,
மணிவாசகர் பதிப்பகம்,
55, லிங்கர் தெரு, சென்னை - 600 001.
முதற்பதிப்பு - 1991.

32. பரமசிவன்.தொ. - தெய்வங்களும் சமூக மரபுகளும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஷ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,
சென்னை.
முதற்பதிப்பு - ஏப்ரல் 2004.

33. பாண்டி.மு. - சிவகங்கை மாவட்ட
நாட்டுப்புறத்தெய்வங்கள்,
விஜயாலயன் பதிப்பகம்,
304/1, முதல் தெரு, பழனிச்சாமி நகர்,
காரைக்குடி - 630 003.
முதற்பதிப்பு - ஜனவரி 2008.

34. பிலவேந்திரன்.ச - தமிழ்ச் சிந்தனை மரபு,
நாட்டுப்புறவியல் ஆய்வுகள்,
தன்னனானே பதிப்பகம், சென்னை.

35. புஷ்பம்.பி. - தாலாட்டும் ஒப்பாரியும்,
தன்னனானே பதிப்பகம்,
இந்திரா நகர் இரண்டாவது பிரிவு,
பெங்களூர் - 650 038.
முதல்பதிப்பு - 1999.

36. பெருமாள்.அ.கா. - பழந்தமிழர் வழிபாட்டு மரபுகள்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை - 600 098.
முதற்பதிப்பு - ஜீலை 2018.

37. பெருமாள்.ஏ.என். - தமிழர் இசை,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
1984.

38. பொன்னம்மாள்.ஆர். - காவல் தெய்வங்கள்,
கிராம தேவதைகள் (பகுதி 2),
கிரி டிரேடிங் ஏடிஜன்ஜி (பி) லிட்.,
மோடி நிவாஸ்,
தபால் நிலையம் எதிரில்,
மதுங்கா, மும்பை.
முதல் பதிப்பு - அக்.2012.

39. பொன்னுச்சாமி.ஆ. - அருள்மிகு அங்காளம்மன் வரலாறும் வழிபாடும், பொன்மணி பதிப்பகம், எம்.ஐ.ஜி. 594, இராயக்கோட்டை சாலை, ஓசூர் - 623 109. முதற்பதிப்பு - டிசம்பர் 2003.

40. அம்பை மணிவண்ணன் - கோயில் ஆய்வும் நெறிமுறைகளும், ஜே.ஜே. பப்ளிகேசன்ஸ், மதுரை - 7. முதல் பதிப்பு - டிசம்பர் 2000.

41. மீனாட்சிசுந்தரம்.ம. - நாட்டுப்புற நம்பிக்கைகள், விஜயா பதிப்பகம், 20, ராஜவீதி, கோயமுத்தூர்-1. முதற்பதிப்பு - 1995.

42. லெட்சுமணன் சூறாவளி (ப.ஆ.) - அருள்மிகு சுடலைமாடசுவாமி வரலாறு, நீதி நிலையம், மின்வாரியச்சாலை (விரிவு) திருக்குறள் நகர், தேவகோட்டை-630 032. 2010.

43. லூர்து.தே. - நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள், தூய சவேரியார் தன்னாட்சிக் கல்லூரி, பாளையங்கோட்டை. முதற்பதிப்பு - ஆகஸ்ட் 1997.

44. வானமாமலை.நா. - தமிழர் பண்பாடும் தத்துவமும், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை.

45. வேங்கடசாமி நாட்டார்.ந.மு. - வேங்கடாசலம் பிள்ளை (உ.ஆ.) அகநானூறு (நித்திலக்கோவை), திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிட்., 522, டி.டி.கே. சாலை, சென்னை - 600 018. 2008.

46. ….. - அகநானூறு (களிற்றியானை நிரை),
சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிட்.,
522, டி.டி.கே. சாலை,
சென்னை - 600 018.

47. வேதவியாசர் - மாரியம்மன் வரலாறும் வழிபாட்டுப் பயனும்,
சங்கர் பதிப்பகம்,
21, இராஜாஜி நகர் விரிவு,
வில்லிவாக்கம், சென்னை-600 099.
2003.

48. ஹென்றி ஒயிட்ஹெட் கண்ணன்.எஸ். (தமிழில்) - தென்னிந்திய கிராம தெய்வங்கள்,
சந்தியா பதிப்பகம்,
9-வது அவென்யூ,
57, 53-வது வீதி, அசோக் நகர்,
சென்னை - 600 083.
இரண்டாம் பதிப்பு - 2016.

**அகராதிகள் மற்றும் கலைக்களஞ்சியங்கள்**

1. கதிரைவேற்பிள்ளை.நா. - தமிழ்மொழி அகராதி,
ஏசியன் எடுகேஷனல் சர்வீசஸ்,
புதுதில்லி.
1981.

2. கந்தையா பிள்ளை.ந.சி. (தொ.ஆ.) - செந்தமிழ் அகராதி,
ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
1957.

3. கழகப் புலவர் குழுவினர் - கழகத் தமிழகராதி,
கழக வெளியீடு,
சென்னை.

4. கோபாலகிருஷ்ணகோன்.இ.மா. (ப.ஆ.) - மதுரை தமிழ்ப் பேரகராதி,
மதுரை.
1956.

5. …..                                        - லிப்கோ தமிழ் - தமிழ் - ஆங்கில அகராதி,
எம்.தாமோதரன் அண்டு கம்பெனி,
சென்னை.
1986.

6. சிங்காரவேலு முதலியார்      - அபிதான சிந்தாமணி,
ஏசியன் எடுகேஷனல் சர்வீசஸ்,
புதுதில்லி.
1981.

7. …..                                        - Tamil Lexicon,
Vol.I, Vol.VI,
University of Madras,
Chennai.
1934.

8. …..                                        - வாழ்வியல் களஞ்சியம்
தொகுதி-2, தொகுதி-5,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.
2001.

9. …..                                        - கலைக்களஞ்சியம்,
தமிழ் வளர்ச்சிக்கழகம்,
சென்னை.
1958.

**ஆய்வேடுகள்**

1. கலியாணிகுமார்.மு.               - தூத்துக்குடி மாவட்ட
நாட்டுப்புற தெய்வங்கள் - ஓர் ஆய்வு
பிஎச்.டி., பட்ட ஆய்வேடு,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.
1999.

2. குருசண்முகாம்பாள் - திருவில்லிபுத்தூர் வட்டாரச்சிறுதெய்வங்கள்,
பிஎச்.டி., பட்ட ஆய்வேடு,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி.
2011.

3. சின்னப்பா.க. - திருமங்கல வட்டாரச் சிறுதெய்வ வழிபாடு,
பிஎச்.டி., பட்ட ஆய்வேடு,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை.
1982.

4. தங்கச்செல்வி.கோ. - நாட்டுப்புறப் பெண் தெய்வங்கள்,
(மதுரை மாவட்டம்),
பிஎச்.டி., பட்ட ஆய்வேடு,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை.
2006.

## தகவலாளர் பட்டியல்

| வ. எண் | பெயர் | ஊர் | தொழில் | தேதி |
|---|---|---|---|---|
| 1. | சோமசுந்தரம் | தேவகோட்டை | ஓய்வு ஆசிரியர் | 06.02.2016 |
| 2. | கோ.இராமசாமி | தேவகோட்டை | விவசாயம் | 17.04.2016 |
| 3. | சூறாவளி லெட்சுமணன் | தேவகோட்டை | பத்திரிகையாளர் | 07.06.2016 |
| 4. | சரவணன் | தேவகோட்டை | வியாபாரம் | 07.06.2016 |
| 5. | சிங்காரவேலு | தேவகோட்டை | விவசாயம் | 06.02.2016 |
| 6. | துரைராஜ் | நித்யகல்யாணிபுரம் | வாடகை பாத்திரக்கடை | 07.05.2016 |
| 7. | லெட்சுமணன் | தேவகோட்டை | பூசாரி | 07.05.2016 |
| 8. | செல்வராசு | கண்டதேவி | பூசாரி | 07.05.2016 |
| 9. | இராமலிங்கம் | பாவனக்கோட்டை | விவசாயம் | 10.05.2016 |
| 10. | இந்திராணி | பரமக்குடி | விவசாயம் | 10.05.2016 |
| 11. | கணபதி | நாச்சாங்குளம் | பூசாரி | 18.05.2016 |
| 12. | இராமன் | தேவகோட்டை | வியாபாரம் | 06.02.2016 |
| 13. | மனோகரன் | கோட்டூர் | விவசாயம் | 14.05.2016 |
| 14. | வேலாயுதம் | கோட்டூர் | விவசாயம் | 14.05.2016 |
| 15. | மாயாண்டி | வெங்களூர் | பூசாரி | 11.03.2016 |
| 16. | இராமன் | தேரளப்பூர் | விவசாயம் | 07.06.2016 |
| 17. | இராமாயி | தச்சவயல் | விவசாயம் | 07.06.2016 |
| 18. | பெத்தபெருமாள் | மஞ்சனி | பூசாரி | 03.04.2016 |
| 19. | செல்வராணி | மஞ்சனி | விவசாயம் | 03.04.2016 |
| 20. | சரசுவதி | இராம்நகர் | பத்திர எழுத்தர் | 24.01.2016 |
| 21. | அழகப்பன் | கும்மங்குடி | விவசாயம் | 17.04.2016 |
| 22. | வேலு | பப்பனி | விவசாயம் | 01.05.2016 |
| 23. | சோனை | பப்பனி | விவசாயம் | 01.05.2016 |
| 24. | வீரமுத்து | கண்ணங்கோட்டை | விவசாயம் | 06.06.2016 |
| 25. | சுப்பையா | கண்டியன்புதுவயல் | விவசாயம் | 18.05.2016 |

| 26. | வெள்ளைச்சாமி | இராம்நகர் | வியாபாரம் | 24.01.2016 |
|---|---|---|---|---|
| 27. | முத்து | பொன்னத்தி | விவசாயம் | 07.02.2016 |
| 28. | சக்திவேல் | தாழையூர் | பூசாரி | 31.01.2016 |
| 29. | சந்திரன் | தேவகோட்டை | அரசியல்பிரமுகர் | 27.03.2016 |
| 30. | இராமச்சந்திரன் | டி.சிறுவனூர் | விவசாயம் | 02.04.2016 |
| 31. | இராமாயி அம்மாள் | சித்தானூர் | விவசாயம் | 02.04.2016 |
| 32. | வெள்ளையன் | இளங்குடி | விவசாயம் | 07.02.2016 |
| 33. | நடராஜன் | நித்யகல்யாணிபுரம் | வியாபாரம் | 10.06.2016 |
| 34. | இரவிக்குமார் | ஈகரை | விவசாயம் | 10.05.2016 |
| 35. | நடராஜன் | ஈகரை | விவசாயம் | 10.05.2016 |
| 36. | பாப்பம்மாள் | தேவகோட்டை | வியாபாரம் | 07.02.2016 |
| 37. | சரவணன் | தேவகோட்டை | வாகனம் பழுதுபார்ப்பவர் | 07.02.2016 |
| 38. | குமாரவேல் | நித்யகல்யாணிபுரம் | வியாபாரம் | 10.06.2016 |
| 39. | வெள்ளையன் | அருணகிரிப்பட்டிணம் | பூசாரி | 09.05.2016 |
| 40. | வெள்ளைச்சாமி | அருணகிரிப்பட்டிணம் | வியாபாரம் | 09.05.2016 |
| 41. | ராக்கம்மாள் | பாவனக்கோட்டை | விவசாயம் | 06.06.2016 |
| 42. | அன்பழகன் | பாவனக்கோட்டை | விவசாயம் | 06.06.2016 |
| 43. | கருப்பையா | பாவனக்கோட்டை | விவசாயம் | 06.06.2016 |
| 44. | மாரி | பொன்னத்தி | விவசாயம் | 07.02.2016 |
| 45. | பெரியகருப்பன் | ஈகரை | பூசாரி | 10.05.2016 |
| 46. | இராமன் | வெட்டிவயல் | விவசாயம் | 12.04.2016 |
| 47. | காளியப்பன் | ஈகரை | விவசாயம் | 12.05.2016 |
| 48. | காயாம்பு | மோயன்வயல் | கொத்தனார் | 01.05.2016 |
| 49. | இராமாயி அம்மாள் | கண்டியன்புதுவயல் | விவசாயம் | 18.05.2016 |
| 50. | ஜெயா | கண்டியன்புதுவயல் | விவசாயம் | 18.05.2016 |
| 51. | புஷ்பா | கோட்டவயல் | விவசாயம் | 14.05.2016 |
| 52. | அம்பிகா | இராம்நகர் | வியாபாரம் | 07.05.2016 |
| 53. | மீனாள் | அருணகிரிப்பட்டிணம் | தொழிலாளர் | 07.06.2016 |
| 54. | மாணிக்கம் | வெள்ளூர் | விவசாயம் | 22.04.2016 |

| 55. | இராமலிங்கம் | சித்தானூர் | விவசாயம் | 07.03.2016 |
|---|---|---|---|---|
| 56. | சொர்ணவள்ளி | சித்தானூர் | தொழிலாளர் | 07.03.2016 |
| 57. | நடராஜன் | சிவந்தான்கோட்டை | அரசு ஊழியர் ஓய்வு | 11.03.2016 |
| 58. | பாண்டி | நாச்சாங்குளம் | பூசாரி | 05.06.2016 |
| 59. | பாலுச்சாமி | சிவந்தான்கோட்டை | விவசாயம் | 11.03.2016 |
| 60. | தங்கமாரியம்மாள் | சிவந்தான்கோட்டை | விவசாயம் | 11.03.2016 |
| 61. | நாச்சியப்பன் | இளங்குடி | பூசாரி | 01.05.2016 |
| 62. | பழனிச்சாமி | டி.சிறுவனூர் | விவசாயம் | 07.03.2016 |
| 63. | சத்தியமூர்த்தி | அண்ணாநகர் | வியாபாரம் | 07.05.2016 |
| 64. | சாந்தா | நாச்சாங்குளம் | தொழிலாளர் | 18.05.2016 |
| 65. | அய்யாக்கண்ணு | வெங்களூர் | விவசாயம் | 03.04.2016 |
| 66. | வேலாயி | பொன்னத்தி | விவசாயம் | 01.05.2016 |

# தேவகோட்டை வட்டாரச் சிறுதெய்வ வழிபாடு

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**மு.ஜெயமணி**

(பதிவு எண் : 0850)

நெறியாளர்

முனைவர் **மு.சு.கண்மணி**

தமிழ் உயராய்வு மையம்

ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி, தேவகோட்டை.






## அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தரமதிப்பீட்டுக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் CGPA:3.64 தரப்புள்ளிகளுடன் A+தகுதி
மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் – பல்கலைக்கழக மானியக் குழுவின்
முதல்தர பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

**காரைக்குடி - 630 003**

**தமிழ்நாடு - இந்தியா**

**ஜீலை - 2021**

# நிறைவுரை

ஆய்வு முடிவுகள் பின்வருமாறு அமைகின்றன:

மன்னர்கள் காலத்தில் இறகுசேரி நாட்டில் தேவகோட்டை அமைந்திருப்பதாக வரலாற்றுப் பதிவில் உள்ளன.

இராமநாதபுரம் சமஸ்தானத்திற்கு உட்பட்டிருந்த தேவகோட்டை பின்பு சிவகங்கை ஜமீனுக்கு மாற்றப்பட்டு அதன் முதல் ஜமீன்தாரராக அள.அரு.இராசாமி செட்டியார் நியமிக்கப்பட்டிருந்தார்.

ஒருங்கிணைந்த இராமநாதபுரம் மாவட்டத்திலிருந்த தேவகோட்டை நகரம் பின்பு சிவகங்கை தனி மாவட்டமாக பிரிந்த பொழுது சிவகங்கை மாவட்டத்தில் இணைக்கப்பட்டது.

தேவர்கோட்டை, தேவிகோட்டை என்றழைக்கப்பட்டு தற்பொழுது தேவகோட்டையாக மாற்றம் பெற்றிருக்கிறது என்று இணையத்தளச் செய்திகளும், கள ஆய்வுச் செய்திகளும் உறுதிப்படுத்துகின்றன.

விடுதலைப் போராட்டக்களத்தில் தேவகோட்டை நகரம் முக்கியப்பங்கு வகித்தது. 75க்கும் மேற்பட்டோர் ஒரே நாளில் ஆங்கிலேயர்களால் சுடப்பட்டு உயிரிழந்தனர். அதன் நினைவாக இன்றும் தியாகிகள் பூங்கா நகரின் மையப்பகுதியில் அமையப்பெற்றுள்ளது.

நாட்டார் தெய்வ வழிபாடு இந்நகரின் ஆரம்ப கால வழிபாடு என்பதற்குச் சான்றாக பழமையான கோட்டையம்மன் கோயில் இங்கு அமைந்துள்ளது.

அறத்தையும், ஆன்மிகத்தையும், கல்விக்கூடங்களையும் நகரத்தார் போற்றி வளர்த்துள்ளனர்.

விவசாயம் இவ்வட்டார மக்களின் பிரதானத் தொழிலாக உள்ளது. நூற்றாண்டுகள் கடந்த ஊருணிகளும் இப்பகுதியில் அதிகம் காணப்படுகின்றன.

கட்டிடக்கலைக்கு எடுத்துக்காட்டாக நகரத்தார் மாளிகைகள், திரைப்படம் எடுக்கும் படப்பிடிப்புத் தளமாகவும் அமைந்துள்ளன. நகரத்தார், கள்ளர், மறவர், யாதவர், தேவேந்திரகுல வேளாளர் உட்பட அனைத்துச் சாதியினரும் இந்நகரிலும், அதனைச் சுற்றியுள்ள வட்டாரப் பகுதிகளிலும் வசித்து வருகின்றனர்.

வைதிக மரபிற்கும், ஆகம விதிகளுக்கும் உட்படாத தெய்வங்களை சிறுதெய்வங்கள் என கட்டமைத்தனர். இறந்துப்பட்ட மனிதர்கள் தெய்வங்களாக வணங்கும் வழக்கம் இவ்வட்டாரத்தில் வழக்கத்தில் உள்ளது.

குலதெய்வம், ஊர்த்தெய்வம், காவல் தெய்வம், பிடிமண் மற்றும் பெண் தெய்வங்கள் மிகுதியாகும். குலதெய்வம் ஊர்த்தெய்வமாக மாற்றம் பெற்றிருக்கிறது.

தேவகோட்டை வட்டாரத்திலுள்ள நாட்டுப்புற வழிபாடு ஆரம்பகாலத்தில் இயற்கை வழிபாடாக இருந்து பின்பு உருவ வழிபாட்டிற்கு மாற்றம் பெற்றிருக்கிறது. உருவ வழிபாட்டில் மக்களின் புழங்கு பொருட்களை தெய்வங்களின் கைகளில் இருப்பதனை காண முடிகிறது.

மாரியம்மன் கோயில்கள் ஊரின் மையப்பகுதியிலும், காளியம்மன் கோயில்கள் ஊரின் வெளிப்பகுதியிலும் காணப்படுகின்றன. மக்களின் இடப்பெயர்ச்சி காரணமாக தெய்வங்களும் இடம் மாற்றப்பட்டு அவை பிடிமண் தெய்வங்கள் என அழைக்கப்பட்டு வருகின்றன.

ஊருக்குப் புறத்தே நீர் நிலைகளை ஒட்டி ஐயனார் கோயில்கள் அமைக்கப்பட்டுள்ளன. சாலைகளின் ஓரத்தில் முனீஸ்வரர் கோயில் அமைக்கப்பட்டு அவை பெரும்பாலும் காவல் தெய்வங்கள் என அழைக்கப்படுகின்றன.

ஆகம விதிப்படி கட்டிட அமைப்புகள் இல்லை என்றாலும் தற்போதைய சூழலில் தேவகோட்டை கூத்தாடி முத்துப்பெரியநாயகி அம்மன் மற்றும் இளங்குடி ஐயனார் முதலான கோயில்களில் ஆகமவிதிப்படி கட்டிட அமைப்புகளும், கொடிமரமும் காணப்படுகின்றன.

சாதியகட்டமைப்புகளும், பொருளாதார ஏற்றத்தாழ்வுகளும் இவ்வட்டாரத்தின் சிறுதெய்வ வழிபாட்டில் முக்கியப்பங்கு வகிக்கின்றன. இக்கோயில்களில் வழிபாட்டு முறைகளில் ஆதிக்கச் சாதியினர் முதன்மைபடுத்தப்படுகின்றனர்.

சமய வாதிகளின் ஆதிக்கத்தின் காரணமாக முருகன், விநாயகர், முதலான பெருந்தெய்வங்கள் நாட்டார் தெய்வங்களோடு இணைத்து வழிபடப்பட்டு வந்துள்ளன.

சமூகக் கட்டமைப்பினை மீறும் பெண்கள் தண்டிக்கப்பட்டுள்ளனர். அவ்வாறு ஆணாதிக்கத்தால் தற்கொலை செய்து கொள்ளும் பெண்கள் தெய்வ நிலை பெற்றிருப்பதனை கூத்தாடிமுத்துப் பெரியநாயகியம்மன், சமுத்திர காளியம்மன், தட்டாரக் காளியம்மன் கோயில்களின் தலவரலாற்றுக் கதைகள் உணர்த்துகின்றன.

வழிபாட்டு முறையில் கோயிலுக்குக் கோயில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. சில தெய்வங்களுக்கு தினவழிபாடும், பல தெய்வங்களுக்கு வார மற்றும் மாதவழிபாடும் நடத்தப்படுகின்றன.

முக்கியத்தினங்களில் சிறப்பு வழிபாடும் ஆண்டிற்கொருமுறை திருவிழாக்களும் நடத்தப்படுகின்றன. செவ்வாய், பொங்கல் வழிபாடு, குதிரைஎடுப்பு எனப் பல பெயர்களில் இவ்விழாக்கள் அழைக்கப்படுகின்றன.

நாட்டார் கோயில்களில் உயிர் பலியிடும் வழக்கம் காணப்படுகிறது. வெற்றிலை, பாக்கு, மஞ்சள், ஊதுபத்தி, சாம்பிராணி, தேங்காய், பூ, மாலை

போன்றவை பூசையில் வைத்து படைக்கப்படுகின்றன. சுருட்டு, பிராந்தி, சாராயம் போன்றவை முனீஸ்வரர், கருப்பர் கோயில்களுக்கு படைக்கப்படுகின்றன.

விழாத்தொடக்கத்தின் குறியீடாக காப்புக்கட்டப்படுகிறது. அன்றுமுதல் திருவிழா முடியும் வரை காப்புத்தடை என்று அழைக்கப்படுகிறது. ஊரில் உள்ள குடும்பங்களின் சார்பாக வரி வசூல் செய்து திருவிழாக்களை நடத்துகின்றனர்.

மது எடுத்தல் எனும் திருவிழா தேவகோட்டை வட்டாரத்தில் ஈகரை கிராமத்தில் மட்டும் நடைபெறுகிறது.

அம்மன்கோயில்களில் முளைப்பாரி எடுத்தலும், ஐயனார் கோயில்களில் குதிரை எடுப்பும் நடைபெறுகின்றன. கூத்தாடி முத்துப்பெரியநாயகி அம்மன் கோயிலில் சிவராத்திரியின் மறுநாள் மட்டும் பூ கொடுக்கப்படுகிறது, மற்ற நாட்களில் கொடுப்பதில்லை.

பாவனக்கோட்டை மலையாளக் காளியம்மன் கோயிலில் எறிசோறு கொடுக்கப்படுகிறது. சேந்தனி காடேரியம்மன் கோயிலில் வாய்கட்டிப்பூசை நடைபெறுகிறது.

சமயங்களின் தாக்கத்தால் விளக்குப்பூசை, பால்குடம் எடுத்தல், காவடி எடுத்தல் போன்ற நிகழ்வுகளும் தேவகோட்டை வட்டாரத்தில் நடைபெறுகின்றன.

சாமிவந்து ஆடும் நபரை சாமியாடி என்றும் அருள்வாக்கு கூறுவதனை தெய்வம் வந்து சொல்வதாகவும் நம்புகின்றனர்.

திருமணம், பிள்ளைப்பேறு போன்றவைகளுக்கு பூசாரிகளிடம் அருள்வாக்கு கேட்கும் நிகழ்வுகளும் நடைபெறுகின்றன. பல்லி சொல் கேட்டலும், சீட்டெழுதி குறைகளை தெரிவிக்கும் வழக்கமும் இவ்வட்டாரக் கோயில்களில் இன்றளவும் நடைமுறையில் இருக்கின்றன.

கண்ணங்கோட்டை முனீஸ்வரர் கோயிலின் படையல் உணவினை பெண்கள் உண்ணக்கூடாது என்ற நம்பிக்கை இன்றளவும் வழக்கத்திலுள்ளது.

தெய்வங்களுக்குப் படைக்கப்படும் பொருட்கள் சேதம் அடைந்தால் துன்பம் வரும் என்ற நம்பிக்கை காணப்படுகிறது.

தீட்டுக் காலங்களில் கோயிலுக்கும், கோயில் சார்ந்த குளத்திற்கும் சென்றால் தீங்கு நேரிடும் என நம்புகின்றனர். மஞ்சனி காடேரியம்மன் கோயில் ஊருணியில் பிறப்பு, இறப்புக் காலங்களில் முப்பது நாட்கள் இறங்க மாட்டார்கள். இவ்வழக்கம் இன்று வரைக்கும் கடைபிடிக்கப்பட்டு வருகிறது.

களவு, பொய் சொல்லுதல் போன்ற குற்றங்களுக்கு தெய்வத்திடம் சத்தியம் செய்தலும், இளங்குடி காளியம்மன் கோயிலில் மிளகாய் அரைத்தலும் நடைபெறுகின்றன. இதன்மூலம் தவறு செய்தவர்கள் தண்டிக்கபடுவர் என்ற நம்பிக்கை இவ்வட்டார மக்களிடம் காணப்படுகிறது.

நம்பிக்கையின் தொடர்நிகழ்வாக நேர்த்திக்கடன் செலுத்தப்படுகிறது. தெய்வங்களுக்குச் செய்யும் கைமாறு நேர்த்திக்கடன் என்று பொருள் கொள்ளலாம்.

பிள்ளைப்பேறு பெற்றோர் முடி இறக்கி, கரும்பால் தொட்டில் கட்டி நேர்த்திக்கடன் செய்கின்றனர். பிள்ளைப்பேறு இல்லாததோர் மரக்கட்டைகளிலும், துணிகளிலும் தொட்டில் கட்டி வேண்டிக் கொள்கின்றனர்.

சமயபுரமாரியம்மன், அருணாகிரிப்பட்டினம் முத்துமாரியம்மன் கோயில்களில் மாவிளக்கு எடுத்தல், அக்னிச்சட்டி எடுத்தல், தீ மிதித்தல் போன்ற நேர்த்திக்கடன் செலுத்தப்படுகின்றன.

தங்கம், வெள்ளி, பணம் மற்றும் உபயோகப் பொருட்களையும் நேர்த்தி செலுத்தும் வழக்கம் உள்ளது.

ஆரம்ப காலத்தில் கல்லும் சூலாயுதமும் நட்டு வைத்து வழிபடப்பட்டு வந்த நிலை மாற்றம் பெற்று இன்று கருவறையுடன் கூடிய கட்டிட அமைப்புகளை நாட்டார் கோயில்கள் பெற்றிருக்கின்றன.

உயிர்ப்பலி இடுதல் நாட்டார் வழிபாட்டில் முக்கிய நிகழ்வாக கருதப்படினும் தேவகோட்டை பாண்டி முனீஸ்வரர், சிவந்தான்கோட்டை முனீஸ்வரர் கோயில்களில் முனீஸ்வரருக்கு உயிர்ப்பலிக் கொடுப்பதில்லை. மாறாக முன்னோடித் தெய்வமான கருப்பருக்கு உயிர்ப்பலி கொடுக்கும் பொழுது முனிஸ்வரர் சிலைகள் திரைச்சீலையால் மூடிவிடுகின்றனர். ஆரம்ப காலங்களில் இக்கோயில்களில் உயிர்ப்பலி கொடுக்கப்பட்டுள்ளது. சமயங்களின் தாக்கத்தால் பிற்காலத்தில் உயிர்ப்பலி கொடுப்பதில் மாற்றம் ஏற்பட்டிருக்கிறது.

நேர்த்திக்கடன் செலுத்துவதிலும் பெருமரபு வழக்கம் நாட்டார் வழிபாட்டில் புகுத்தப்பட்டுள்ளது. காவடி எடுத்தல், அழகு குத்துதல், விளக்குப் பூசை செய்தல், பூத்தட்டு எடுத்தல், பால்குடம் எடுத்தல் போன்ற பெருமரபு வழக்கம் தேவகோட்டை வட்டார நாட்டார் தெய்வ வழிபாட்டில் காணப்படுகிறது. சமங்களின் ஆதிக்கத்தினை இவ்வழிபாட்டு முறைகள் உள்வாங்கி இருப்பதனை அறிய முடிகிறது.

திட்டமிடப்பட்டு நடத்தப்படாத திருவிழாக்கள் தற்பொழுது குறிப்பிட்ட நாட்களில் திட்டமிட்ட திருவிழாக்களாக நடத்தப்படுகின்றன. ஆகம விதிகளும் கடைபிடிக்கப்படுகின்றன. பிராமணர்கள் பூசை செய்யும் நெறிகளும் பின்பற்றப்படுகின்றன. நாட்டார் வழிபாட்டில் ஏற்பட்ட மாற்றங்களாக இதனைக் கருத முடிகிறது.

பால், பன்னீர், இளநீர் உள்ளிட்ட வாசனைத் திரவியங்களில் அபிஷேகமும், வழிபாடும் நடத்தப்படுவது பெருமரபு வழிபாட்டின் தொடர்ச்சியாக பார்க்கப்படுகிறது.

சமயங்களின் எழுச்சியும், வீழ்ச்சியும் மனிதர்களைச் சார்ந்தது. மனிதர்களின்றி மதம் இல்லை என்பது தெளிவான ஒன்று. இதன் காரணமாகவே மதங்களின் வளர்ச்சிக்கு மனிதர்களை தன் வயப்படுத்துகின்றனர் சமயவாதிகள்.

இவற்றிற்கு ஊன்றுகோலாக முதல்நிலையில் நாட்டார் தெய்வங்களை கீழ்நிலைப்படுத்தி மக்களை அத்தெய்வங்களிடமிருந்து அந்நியப்படுத்துகின்ற முயற்சியை மேற்கொள்கின்றனர். இரண்டாம் நிலையில் நாட்டார் தெய்வங்களின் பிறப்பு, வளர்ப்பு; சமயத்தெய்வங்களின் வழித்தோன்றல்கள் எனக்கூறி நாட்டர் தெய்வங்களைவிட சமய தெய்வங்களை முன்னிலைப்படுத்துகின்றனர்.

மூன்றாம் நிலையில் சமயத்தெய்வங்களின் முன்னோடியாக, காவல் தெய்வமாக நாட்டுப்புறத் தெய்வங்களை வழிபட வைத்து மக்களை திசை திருப்பியுள்ளனர்.

நான்காம் நிலையில் நாட்டுப்புறக் கோயில்களில் முருகன், விநாயகர், துர்க்கை போன்ற பெருந்தெய்வச்சிலைகளையும் நிறுவி வழிபடத் தூண்டியுள்ளனர். இவையனைத்தும் சமய வளர்ச்சிக்கு போர்த்தப்பட்ட போர்வைகள் ஆகும். இதன் வெளிப்பாடு ஆரியர்களின் மந்திரமும், விதிகளும் இன்று சிறுதெய்வக் கோயில்களில் இடம்பெறக் காரணமாக இருக்கிறது என்று கருதமுடிகிறது.

எந்தக் கட்டமைப்பு வசதிகளும், ஆகம விதிகளும், நாள் நட்சத்திரம் இல்லாமல் வழிபடப்பட்டு வந்த நாட்டார் தெய்வ வழிபாடுகள் இன்றைக்கு தேவகோட்டை வட்டாரத்தில் பல்வேறு படிநிலைகளைத்தாண்டி வளர்ச்சியும் மாற்றமும் பெற்றிருக்கிறது. இதற்கு சமயங்களின் தாக்கமும், பொருளாதார வளர்ச்சியும் காரணமாக உள்ளன.